அழுகை...நிம்மதியின்மை...சந்தோஷமற்ற குழந்தை! அவனைத் தேற்றுவதில் அவன் தாய் களைத்து இளைத்தாள் — இரவில் அவளுக்கு தூக்கமேயில்லை — பகலில் ஓய்வு இல்லை.





கடைசியாக சந்தோஷத்துடனும் ஆரோக்கியமாயுமிருக்கும் சில குழந்தைகளின் தாய்மார்களாகிய தன் சிநேகிதிகளின் யோசனையைக் கேட்டாள். அவர்கள் யாவரும் ஒரே முகமாக 'க்ளாக்ஸோ'வையே தான் சிபாரிசு செய்தார்கள்.

குழந்தைகளின் எலும்பும் பற்களும் உறுதியாய் வளர 'விடமின் டி'யும், சத்தும் வளம் பெற இரும்பு சத்தும் கலக்கப் பட்ட சுத்தமான புஷ்டியூட்டும் பால்-உணவு ஆகிய 'க்ளாக்ஸோ'வை தன் குழந்தைக்கும் கொடுக்க ஆரம்பித்தாள்.






இப்பொழுது அவனைப் பாருங்கள்! அவனுக்கு ஒரே ஆனந்தம்! அவனுடைய சந்தோஷத்துக்கு காரணம் அவன் தேக ஆரோக்கியம், தவிர ஆகாரம் நன்கு ஊட்டப்பட்டிருப்பதே- 'க்ளாக்ஸோ'வுக்கு நன்றி.

**Glaxo**

'க்ளாக்ஸோ'-குழந்தைகளின் மிகச் சுத்தமான பால்-உணவு

D-37

மலர் • 15
இதழ் • 23

# கல்கி

மன்மத ௵
மார்கழி 14

## பொருளடக்கம்

1956 ஜனவரி 8



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



12·1·56 முதல்

சென்னை

சித்ரா·பிரபாத்·சரஸ்வதி

மற்றும் தென்னாடெங்கும்

மாடர்ன் தியேட்டர்ஸ்

முழுநீள கலர் படம்

# அலிபாபாவும் 40 திருடர்களும்

டைரக்ஷன்: T.R.சுந்தரம் B.A., B.Sc.(Leeds)



BHARAT STUDIO



மலர் 15
இதழ் 23

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ஸ்ரீ
மார்கழி மீ 24

# கல்வி மகாநாடு காட்டும் வழி

புது தில்லியிலே ராஷ்டிரபதி பாபு ராஜேந்திர பிரசாத் ஆரம்பித்து வைக்க, இந்திய சர்க்கார் கல்வித் துறை ஆலோசகர் ஸ்ரீ ஹுமாயூன் கபீர் தலைமை உரை நிகழ்த்த, நாலாயிரம் பிரதிநிதிகள் பிரசன்னமாகி யிருக்க, அகில இந்தியக் கல்வி மகாநாடு ஐந்து நாட்கள் வரையில் ஜாம் ஜாம் என்று நடந்தேறியது.

மகாநாட்டை ஆரம்பித்து வைத்த ஜனாதிபதி, சுதந்திர இந்தியாவின் தேவைக்கு உற்றவாறு கல்வி முறையை மாற்றி அமைக்கப் போதிய நடவடிக்கை எடுத்துக் கொள்ள வில்லை என்பதைச் சுட்டிக் காட்டினார்.

பாரத நாட்டில் சென்ற நூற்றிருபத்தைந்து ஆண்டுகளாக இருந்து வரும் கல்வி முறை ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் வகுக்கப்பட்டது என்றும், இனி அந்த நோக்கத்துக்கு இங்கு இடமில்லை என்றும் ஜனாதிபதி குறிப்பிட்டிருக்கிறார்.

நியாயமான சம்பளம் கொடுத்து, நல்ல தகுதி உள்ளவர்களை உபாத்தியாயர்களாக நியமிக்க வேண்டியது மிகவும் முக்கியம் என்பதை ஸ்ரீ ஹுமாயூன் கபீர் தமது தலைமை உரையில் வற்புறுத்திக் கூறியிருக்கிறார்.

இந்த மகாநாட்டில் கீழ்க்கண்ட சில முக்கிய தீர்மானங்கள் நிறைவேறி யிருக்கின்றன:

இந்திய சர்க்கார் கல்வி இலாகாவும் சர்வ கலாசாலை மான்யக் கமிஷனும் ஆசிரியர்களுக்குச் சிபார்சு செய்துள்ள சம்பள விகிதங்களை உடனடியாக அமுலுக்குக் கொண்டு வரும்படி இம் மகாநாடு இந்திய சர்க்காரையும் ராஜ்ய சர்க்காரையும் கேட்டுக் கொள்கிறது.

நிதி வசதி இல்லை என்று கூறிக் கொண்டு ஆசிரியர்களின் அந்தஸ்தை உயர்த்துவதில் தாமதம் செய்தால், அதன் விளைவாக நாட்டின் அபிவிருத்தித் திட்டங்களுக்கே குந்தகம் ஏற்படும் என்பதைச் சர்க்கார் கவனித்துக் காலம் கடத்தாமல் தகுந்த முறைகளைக் கைக் கொள்ள வேண்டும்.

கல்வித் திட்டங்களையும் கொள்கைகளையும் உருவாக்கும் சகல ஸ்தாபனங்களிலும் ஆசிரியர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும்.

ஏ. எல். முதலியார் கமிஷன் சிபார்சு செய்துள்ளபடி, ஆசிரியர்களுக்கான பிராவிடண்ட் நிதி, இன்ஷ்யூரன்ஸ், பென்ஷன் வசதித் திட்டத்தை 1956 ஏப்ரல் மாதத்திலிருந்து அமுலுக்குக் கொண்டு வர வேண்டும்.

• • • •

ஆசிரியர்களின் இந்த முக்கியமான கோரிக்கைகளை நிறைவேற்றுவதில் சர்க்காருக்கு அதிகக் கஷ்டம் எதுவும் இருப்பதாகத் தோன்ற வில்லை.

ஸ்ரீ கபீர் தமது தலைமை உரையில் குறிப்பிட்டிருப்பது போல், நாட்டின் கல்விக்காகச் செலவிடும் தொகை தேசத்தின் எதிர்கால க்ஷேமத்துக்கு இன்றியமையாத மூலதனமேயாகும்.

எனவே, தேச வருமானத்தின் கணிசமான பகுதியை இராணுவச் செலவுக்காக ஒதுக்கி வைப்பது போல், கல்விச் செலவுக்கும் கணிசமான பகுதியை ஒதுக்கி வைக்க வேண்டும்.

அறியாமையும் எழுத்தறிவின்மையும் நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக இருக்கும் கொடிய பகைவர்கள் அல்லவா?

அந்தப் பகைவர்களை ஒழிப்பதில் சிறிதும் தாமதம் கூடாது என்பதைச் சகலரும் ஒப்புக் கொள்வர்.

நாட்டின் எதிர்கால சுபிட்சத்துக்காகப் பல்வேறு அணைத் திட்டங்கள் எப்படி அத்தியாவசியமானவையோ, அது போல் மக்களின் அறிவு வளத்துக்குக் கல்வி பெருக வேண்டியதும் அவசியமாகும்.

இந்த உண்மையையே கல்வி மகாநாட்டில் பேசிய பிரமுகர்கள் வலியுறுத்தியிருக்கிறார்கள்.

மேற்படி மகாநாட்டின் பலனாக, பல ஆண்டுகளாக ஆசிரியர்களுக்கு இருந்து வரும் குறைகளும் கஷ்டங்களும் தீர்ந்து அவர்களுடைய அந்தஸ்து உயரவும், கல்வி முறையில் சீர்திருத்தம் ஏற்படவும் வழி பிறக்க வேண்டும் என விரும்புகிறோம்.

# பாராட்டுதற்குரிய காரியம்

வருஷந்தோறும் வருமானத்தைக் காட்டிலும் அதிகச் செலவு, அதிக வரிகள், புதிய வரிகள் என்ற பல்லவிகளையே கேட்டுக் கேட்டு அலுத்துப் போயிருக்கும் பொதுமக்களுக்குச் சென்ற வாரம் சென்னையில் நிகழ்ந்த சம்பவம் மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுத்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. சென்னை கார்ப்பொரேஷன் கமிஷனர் சமர்ப்பித்துள்ள 1956—57ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தில் அடங்கியுள்ள விஷயமே ஆச்சரியத்துக்குக் காரணமாகும்.

அத் திட்டத்தின்படி 1956—57ல் சென்னை கார்ப்பொரேஷனின் வருமானத்தில் செலவு போக ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் ரூபாய்க்கு மேல் மிச்சம் ஏற்பட்டிருக்கிறது. அதிகச் செலவைச் சரிகட்டுவதற்காகப் புதிய வரிகளைக் கண்டு பிடிப்பது சகஜமாக இருக்கும் இக்காலத்தில், சென்னை கார்ப்பொரேஷன் கமிஷனர் செலவு போக மிச்சம் காட்டியிருப்பது கெட்டிக்காரத்தனம் அல்லவா! அவர் அத்துடன் நிற்கவில்லை; கார்ப்பொரேஷனில் குறைந்த சம்பளம் பெறும் சிப்பந்திகளுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பது போன்ற சில ஆக்கத் திட்டங்களைக் கைக் கொள்ளப் போவதாகவும் அறிவித்துள்ளார். இவையெல்லாவற்றையும் காட்டிலும் முக்கியமாக, அரை வருஷத்துக்கு இரண்டு ரூபாய் என்று இருந்த சைக்கிள் வரியை எட்டு அணாவாகக் குறைக்கும்படி கமிஷனர் செய்துள்ள சிபார்சுதான் வெகுவாகப் பாராட்டத் தக்கது.

சைக்கிள் சாதாரண மக்களின் வாகனம். போதிய அளவு போக்கு வரத்து வசதி இல்லாத சென்னையில் வெகு தொலைவில் உள்ள தங்கள் தொழிற்சாலைகளுக்கும் காரியாலயங்களுக்கும் செல்லத் தொழிலாளர்களுக்கும் மத்தியதர வகுப்பினருக்கும் சைக்கிள்தான் வரப்பிரசாதமாக இருந்து வருகிறது. இந்நிலையில் ஆறு மாதத்துக்கு இரண்டு ரூபாய் சைக்கிள் வரி அதிகம் என்ற ஆட்சேபணை இருந்தது. மேற்படி வரியைக் கார்ப்பொரேஷன் கமிஷனர் துணிந்து நாலில் ஒரு மடங்காகக் குறைக்க வேண்டும் என்று சிபார்சு செய்ததை மிகவும் பாராட்டுகிறோம். அவரது நல்ல சிபார்சைக் கார்ப்பொரேஷன் சபை மனமுவந்து அமுலுக்குக் கொண்டுவர முற்படும் என்று நம்புகிறோம்.

# மலாய் நாட்டிலே.....

மலாய் நாட்டிலே பெடரேஷன் முதல் மந்திரி தெங்கு அப்துல் ரஹ்மானுக்கும் கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் சின் பெங்கிற்கும் நடந்த சமரசப் பேச்சு வார்த்தைகள் முறிந்து விட்டன என்ற செய்தி முக்கியமாக மலாய் நாட்டு மக்களுக்கு மிகுந்த ஏமாற்றத்தைக் கொடுத்திருக்கிறது. கம்யூனிஸ்டுகள் சிறிது காலம் போலீஸ் கண்காணிப்புக்கு உட்பட்டிருக்க வேண்டும் என்ற ஒரு நிபந்தனையைக் கம்யூனிஸ்டுத் தலைவர் ஏற்றுக் கொள்ளாததே சமரசம் ஏற்படாததற்குக் காரணம் என்று தெரிகிறது. எனவே, சென்ற எட்டு வருஷங்களாக அங்கு நடந்து வரும் கோரமான உள்நாட்டுப் போர் மீண்டும் ஆரம்பமாகி விடுமா என்பதே இப்போது கேள்வியாகும். அந்தப் போர் காரணமாகப் பலர் தூக்குமேடைக்குப் பலியாயினர். சர்க்கார் தரப்பிலும் ஏரானமானவர் உயிர் துறந்தனர். பொதுமக்களுக்கும் கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டன. அவ்விதம் ஒருசாராருக்கும் நன்மை பயக்காத போர் அங்கு மீண்டும் ஆரம்பமாகிவிடுமோ என்ற பீதி இப்போது ஏற்பட்டிருக்கிறது. மலாயாவில் அன்னியர் ஆதிக்கத்தை எதிர்ப்பதே தங்கள் நோக்கம் என்று கம்யூனிஸ்டுக் கட்சியினர் கூறி வந்தனர். இப்போது அந்த நாட்டில் மேற்படி ஆதிக்கம் மறைவதற்கு வழி பிறந்து விட்டது. பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரே முதல் மந்திரியாக இருந்து வருகிறார். அவரது முயற்சி காரணமாக மலாயாவுக்குக் கூடிய சீக்கிரம் சுதந்திரம் கிடைக்கலாம் என்ற நம்பிக்கையும் ஏற்பட்டிருக்கிறது. இந்நிலைமையில் மீண்டும் அங்கு உள் நாட்டுப் போர் ஏற்படுமாயின், அது மலாயாவின் சுதந்திரத்துக்கே முட்டுக்கட்டையாகிவிடலாம். இந்த உண்மையை முக்கியமாக கம்யூனிஸ்டுக் கட்சியினர் உணர்ந்து மீண்டும் சமரசத்துக்கான முயற்சியை நாட வேண்டும். அவர்கள் அந்த நாட்டில் வாழும் பொதுமக்களான சீனர்கள், மலாயர்கள், இந்தியர்கள் முதலியோரையும், ஜனப்பிரதிநிதிகள் அடங்கிய சர்க்காரையும் விரோதித்துக் கொண்டு எவ்வளவு காலம் போரைத் தொடர்ந்து நடத்த முடியும்! எனவே மீண்டும் உக்கிரமான உள்நாட்டுப் போர் மூண்டு விடாமல் தடுக்க இருசாராரும் மற்றொரு தடவை முயற்சி செய்வது அவசியமான காரியமாகும்.




## புதிய ஏற்பாடு

**ப**ம்பாய் ராஜ்யம் சின்னபின்னமாகாமல் தப்பித்துக் கொள்ளும் போல் காணப்படுகிறது. விதர்ப்ப தேசம் சேர்ந்து விட்டால் குஜராத்தும் மகாராஷ்டிரமும் ஒன்று சேர்ந்தே மேற்குப் பெரும் ராஜ்யம் நடைபெறலாம் என்று மராட்டியரும் குஜராத்தியரும் எல்லாச் சார்பினரும் ஒப்புக் கொள்வார்கள் என்று தோன்றுகிறது. இதற்காக வேண்டிய நடவடிக்கைகள் நடைபெற்று வருகின்றன. நம்முடைய தென் பிரதேசம்தான் பாஷாவாரிக் கொள்கைப்படி சிறு துண்டுகளாகப் பிரிந்து போகும். தெற்கே உள்ளவர்களின் கருத்து பெரிய வாழ்விலும் ஒற்றுமையிலும் செல்லவில்லையாயின், பூதக் கண்ணாடி வைத்துத்தான் தென் ராஜ்யங்களைப் பார்க்க முடியும். சிறு கட்சிகளுக்குச் சிறு ராஜ்யங்களே சவுகரியம் என்பது உண்மை. ஆனால் பாரதப் பெருமையில் பங்கு இராது. மலையாளப் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் நாம் பிரிய வேண்டியதில்லை என்றே சொல்லி வருகிறார். திருவாங்கூரும் கொச்சியும் மதராஸ் ராஜ்யத்தில் இருப்பதில் மலையாள ஜில்லாவுக்குச் சம்மதம் என்பது வெளிப்படை. 'பிரிந்து போவோம் என்பவர்கள் பிரிந்து போகட்டும். பிரிய வேண்டும் என்று விரும்பாதவர்கள் நம்முடன் இருக்கலாம்' என்று தமிழ் நிதி மந்திரி சமீபத்தில் சொன்னார். அந்த நியாயப்படியும் மலபார் ஜில்லா பிரிய வேண்டியதில்லை. பம்பாய் பிரதேசத்தாரின் சாமர்த்தியத்தைப் பார்த்தாவது நாம் பாடம் கற்கவேண்டும். பாழாய்ப்போகும் தேர்தல் கருத்துக்கள் நம்முடைய மூளையைக் கலக்கி விட்டன போலிருக்கிறது. தேர்தல் சவுகரியத்திற்காக நாட்டின் பெருமையையும் செல்வாக்கையும் இழக்கப் போகிறோமா?

## புதிய சுயராசு

**உ**லகிலே புற ஆதிக்கம் நீங்கிச் சுதந்திரம் பெற்று விளங்கும் நாடுகளின் வரிசையில் புது வருஷப் பிறப்பன்று சூடான் என்ற தேசமும் சேர்ந்து கொண்டது. சூடான், ஆப்பிரிக்காவில் எகிப்தை அடுத்து அதற்குத் தெற்கே உள்ள நாடாகும். சுமார் பத்து லட்சம் சதுர மைலில் இரண்டுள்ள சூடானில் தொண்ணூறு லட்சம் ஜனங்கள் வசிக்கிறார்கள். சென்ற ஐம்பத்தாறு ஆண்டுகளாக சூடானில் இருந்து வந்த ஆங்கிலோ — எகிப்தியக் கூட்டு ஆட்சிமுறை சென்ற வாரத்துடன் முடிவடைந்தது. பிரிட்டனும் எகிப்தும் வாழ்த்துக் கூற சூடான் சாந்த முறையில் சுதந்திரம் பெற்றது, சரித்திரத்தில் பொறிக்கப்பட வேண்டிய மகத்தான விஷயமாகும்.

புற ஆதிக்கம் பல வடிவங்கள் எடுத்து, பற்றியதை விடாமல் இருக்கப் பார்க்கும். அதற்கு இடமின்றி சூடான் சுதந்திரம் நிலைத்து நிற்குமாக!

## குழந்தைப் புத்தகக் காட்சி

**இ**ந்த நாட்டின் செல்வங்கள் குழந்தைகள். குழந்தைகளின் வளர்ச்சிக்குப் பாடுபடுவதுதான் இப்பொழுது தேசத்துக்குச் செய்யும் சிறந்த தேச சேவை. இந்த உத்தமப் பணியை மிகச் சிறந்த முறையில் செய்து வருகிறது குழந்தை எழுத்தாளர் சங்கம். குழந்தை இலக்கியம் வளர்வதற்கு இந்தச் சங்கம் செய்துவரும் தொண்டில் ஒன்றுதான் ஆண்டுதோறும் குழந்தைப் புத்தகக் காட்சி நடத்துவது. சென்ற ஐந்து ஆண்டுகளையும்விட இந்த ஆண்டு குழந்தைப் புத்தகக் காட்சி விழாவைக் கோலாகலமாக நடத்துவதற்குக் குழந்தை எழுத்தாளர் சங்க நிர்வாகிகள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

தமிழர் திருநாளாகிய பொங்கல் பண்டிகையை ஒட்டி ஜனவரி 13, 14, 15 ஆகிய மூன்று தினங்களிலும் சென்னை தியாகராய நகரம், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப் பள்ளியில் குழந்தைப் புத்தகக் காட்சி நடைபெறப் போகிறது. இந்தக் காட்சியில் உலகில் உள்ள எல்லாக் குழந்தை இலக்கியப் புத்தகங்களையும் சேர்த்து வைக்கப் போகிறார்கள். இத்துடன் தமிழ் நாட்டில் இது வரை வெளிவந்துள்ள குழந்தை இலக்கியப் புத்தகங்கள் அனைத்தையும் குழந்தைப் புத்தகக் காட்சியில் காணலாம்.

புத்தகக் காட்சி நடத்துவதுடன் திருப்தி அடையாமல் ஊக்கமளிக்கும் மற்றொரு நல்ல காரியத்தையும் செய்யப்போகிறார்கள் என்று அறிந்து மகிழ்கிறோம். ஜனவரி 13ந் தேதி காலையில் நடைபெறும் திறப்பு விழாவில் சிறந்த முறையில் குழந்தை நாடகங்கள் எழுதிய ஆசிரியர்களுக்குப் பரிசுகள் வழங்கிப் பாராட்டுக் கூறப்போகிறார்கள். ஆறாவது குழந்தைப் புத்தகக் காட்சி விழாவை யொட்டிக் குழந்தை எழுத்தாளர் சங்கத்தார் குழந்தை இலக்கிய மலர் ஒன்றையும் வெளியிடப் போவதாக அறிகிறோம்.

இந்த அருமையான திருவிழாவில் பெற்றோர்களும், குழந்தைகளும் உற்சாகமாகக்

கலந்து கொண்டு பயன் அடைவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## நேருஜியின் எச்சரிக்கை!

பாரதத்தின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு மலேயான நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்வதற்கு விஜயம் செய்த போது அவரது விஜயத்தைப் பல ஸ்தாபனங்கள் உபயோகப்படுத்திக் கொண்டன. அதனால் பண்டித ஜவாஹர்லால்ஜியின் உணர்ச்சி நிறைந்த பல சொற்பொழிவுகள் நமக்குக் கிடைத்தன.

கோயமுத்தூர் சிதம்பரம் பிள்ளை பூங்காவில் மாபெரும் பொதுக் கூட்டத்தில் நேருஜி பேசினார். பாலக்காட்டில் பல்லாயிரக்கணக்கான மக்கள் முன்னிலையில் பேசினார். இரண்டு இடங்களிலும் பேசும்போது ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிக் குறிப்பிட்டு விட்டு அது சம்பந்தமாக ஒரு எச்சரிக்கையும் விடுத்திருக்கிறார். அதே எச்சரிக்கையைச் சமீபத்தில் வேறு பல இடங்களிலும் சொல்லி வருகிறார்.

"மனிதர்களிடையே உள்ள மதம், ராஜ்யம், ஜாதி வித்தியாசங்களை அகற்றி, ஒற்றுமையை வளர்த்து நாட்டைப் பலப்படுத்த நம்மால் முடியும். நம் நாட்டில் பல மதங்கள் இருக்கின்றன. எல்லா மதங்களையும் நாம் வரவேற்கிறோம். எல்லாரும் சமாதானமாக வாழ வேண்டும் என்று விரும்புகிறோம்'' என்றார்.

இந்த நாட்டில் எல்லா மதங்களும் சரிசமமாக வாழ்ந்து வளர்வதற்கு வழி இருக்கிறது என்பதைத்தான் பிரதமர் கூறினார்.

அதே சமயத்தில் மதத்தின் பெயரால் கழகங்கள் ஏற்படுத்திக் கொண்டு அரசியலில் குழப்பம் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் 'முஸ்லிம் லீக்' கட்சியை வன்மையாகக் கண்டித்திருக்கிறார்.

"வகுப்புவாத ஸ்தாபனங்களுக்கு இனி இந்தியாவில் இடம் கிடையாது'' என்று கூறியிருக்கிறார்.

நேருஜியின்மீது யார் என்ன குறை சொன்னாலும் அவர் மனத்தில் உள்ளதை மறைத்து வைத்துக் கொள்ளக் கூடியவர் என்றோ, உள்ளத்தில் ஒன்று எண்ணி வெளியில் ஒன்று சொல்லக் கூடியவர் என்றோ சொல்ல முடியாது. மனத்தில் எழுந்ததை உடனே வெளியில் கொட்டி விடும் உத்தமத் தலைவர்.

இந்தியாவின் பெருமைதான் தங்களுடைய பெருமை, இந்தியருடைய க்ஷேமம் தான் தங்களுடைய க்ஷேமம் என்பதை எண்ணிப் பார்த்து, தாங்களும் இந்திய மக்கள் தான் என்பதை நமது நாட்டிலுள்ள பல வேறு சமயத் தலைவர்களும் சகோதரர்களும் இதர வகுப்பு வாதிகளும் மறந்து விடாமல் நடந்துகொள்ள வேண்டும்.

உண்மையில் சமூகத்தையோ, சமயத்தையோமட்டும் அடிப்படையாகக் கொண்டு அதன் பெயரால் அரசியலை வகுக்க முனையும் கட்சிகள் எதுவும் இந்த நாட்டில் இருக்கக் கூடாது. இந்த உயர்ந்த சித்தாந்தத்தைத்தான் நேருஜி எவ்வித சந்தேகத்துக்கும் இடமின்றி வலியுறுத்தியிருக்கிறார்.

## சிறந்த தொண்டு

சென்னை ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சுவாமி சுத்த சத்வானந்தாவும், சுவாமி சர்வக்ஞானனந்தாவும் முறையே வேதாரண்யத்துக்கும் பரமக்குடிக்கும் புயல் செய்தியைக் கேட்டதும் விரைந்தார்கள். தஞ்சை ஜில்லா கலெக்டரும் ராமநாதபுரம் ஜில்லாக் கலெக்டரும் இச்சாமியார்களிடமே ஏழைகளுக்கு உணவு சமைத்துப் போடும் வேலையும், உடை பொருள்கள் வழங்கும் வேலையும் ஒப்படைத்தார்கள். இடுப்பாழத் தண்ணீரைக் கடந்து சென்றும் அதற்கும் மேல் தண்ணீருள்ள பகுதிகளைக் கட்டுமரங்களில் கடந்து சென்றும் நலிவுற்றவர்களுக்கு உதவியிருக்கிறார்கள். முஸ்லிம்களுக்கு உதவியிருக்கிறார்கள்; கிறிஸ்துவர்களுக்கு உதவியிருக்கிறார்கள். ஹிந்துக்களுக்கு உதவியிருக்கிறார்கள். ஜாதிமத பேத உணர்ச்சியின்றி லட்சக்கணக்கான பேர்களுக்கு இரு ஜில்லாக்களிலும் உதவி வருகிறார்கள். புயலினால் ஆயிரக் கணக்கான பேர் உயிரிழந்திருக்கிறார்கள். லட்சக்கணக்கான பேர் வீடிழந்து உடையிழந்து உடைமை யிழந்து தவிக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கையைப் புனர் நிர்மாணம் செய்துகொள்ள உதவ வேண்டியது தமிழ் கூறும் நல்லுலகத்தில் வாழும் அத்தனை பேருடைய கடமையுமாகும்.

தேச விடுதலைக்குப் போராடிய சர்தார் வேதரத்தினம் தேசத்தின் புனர் நிர்மாணத்துக்குச் சிறந்த முறையில் தொண்டாற்றுகிறார். அவர் ஆற்றிவரும் தொண்டுகளில் சிகரமாக விளங்கி வந்தது வேதாரண்யத்தில் அவருடைய கஸ்தூரிபா கன்யா குருகுல வித்யாலயம். புயல் செய்த கொடுமைகளில் மறக்க முடியாத கொடுமை அந்தக் குருகுலத்தின் கட்டடங்களையும், சாமான்களையும் அழித்து விட்டதுதான்.

ஐம்பதினாயிரம் ரூபாயாவது இருந்தால் தான் மீண்டும் குருகுலம் முன்போல் தொண்டாற்ற முடியும் என்று அறிகிறோம். அனாதைக் குழந்தைகளையும் ஹரிஜனக் குழந்தைகளையும் அன்போடு ஏற்று அறிவு புகட்டி வந்த குருகுலம் மீண்டும் தழைப்பதற்குத் தமிழ் மக்கள் தவறாமல் உதவி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## கனவு கலையுமா?



புது வருஷம் பிறந்து விட்டது: அமெரிக்காவின் கனவு கலைந்து தெளிவும் நம்பிக்கையும் ஏற்படும் என்று எதிர்பார்க்கலாமா?



# வைராக்கியம்

கல்கி திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சிறுகதைப் போட்டி

**மாயா**

காரியாலயத்திலிருந்து வீடு திரும்பிய ராஜாவுக்குக் காத்திருந்த அதிசயம் போல், முன் ஹாலில் போடப்பட்டிருந்த சாய்வு நாற்காலியில் தம்பி வாசு படுத்திருந்தான். வாசுவின் திடீர் விஜயம் ராஜாவை வியப்பிலாழ்த்தியதை, விசாலமான நெற்றியில் தெரிந்த சுருக்கங்கள் கோடிட்டுக் காட்டின.

"எப்போ வந்தே!" என்று கேட்டவாறே சட்டையைக் கழற்றி மாட்டினான் ராஜா.

"காலே வண்டியில்தான் வந்தேன்" என்று பதில் கூறிய வாசுவின் வார்த்தைகள், கையில் 'டவலு'டன் கொல்லைப்புறம் சென்ற ராஜாவுக்குக் கேட்காமலில்லை.

கொல்லே ரேழியில் ராஜாவின் மனைவி எதிர்ப்பட்டு, "உங்க தம்பி மட்டும் வரவில்லே. 'அவளும்' வந்திருக்காளாம்!" என்றாள்.

"அவளுமா! எங்கே! இங்கேயா!" என்று பதற்றத்துடன் கேட்டான் ராஜா.

"இங்கே அவள் வரலே; யாரோ தெரிந்தவர் வீட்டிலே விட்டு விட்டு வந்திருக்கிறார்" என்றாள் ராஜாவின் மனைவி.

கைகால்களைக் கழுவிக் கொண்டு வந்த ராஜா நிலைக் கண்ணாடி முன்பாக நின்று விபூதி பூசிக் கொண்டான். சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்து வந்த வாசு கண்ணாடிக்கெதிரே இருந்த ஊஞ்சலில் அமர்ந்தான்.

தானாகப் பேசிக் கலைத்தாலொழிய சூழ்ந்திருந்த மௌனம் கலையாது என்று தெரியவும், "ஏண்டா! தனியாக வரவில்லையாமே!" என்று கேட்டான் ராஜா.

"பழனிக்குப் போயிருந்தேன். சமயபுரத்துக் கோயிலுக்கும் பிரார்த்தனை செலுத்தவேணும். அதற்காக இங்கே இறங்கிப் போய்விட்டு வந்தேன். 'அவளை'த் தெரிந்தவர் வீட்டிலே விட்டு வந்திருக்கிறேன். இன்றிரவே திரும்பவும் சென்னைக்குப் போகணும்" என்றான் வாசு.

"இன்னிக்கே கிளம்பணுமா! உன்னிடம் எவ்வளவோ பேசலாம்னு இருந்தேன். முன்னே, சென்னைக்கு வந்திருந்த போது தான் சந்திக்கச் சந்தர்ப்பம் இடம்கொடுக்கவில்லை. நான் எழுதின கடிதங்களை யெல்

லாம் பார்த்திருப்பாய். உன் அபிப்பிராயம், முடிவு இவைகளைத் தெரிந்து கொண்டால் நல்லது" என்றான் ராஜா.

"நான் செய்தது நல்லதோ, தவறோ! நடந்தது நடந்து விட்டது. என் கல்யாணம் தவிர்க்க முடியாத நிர்ப்பந்தமாய்ப் போய் விட்டது. அதிலிருந்து இனிமேல் மீளவும் முடியாத நிலைமை ஏற்பட்டு விட்டது. அதைப் பற்றியே பன்னிப் பன்னிப் பேசுவதில் என்ன லாபம்!" வாழ்வின் அகல நீளங்களையே அளந்து விட்டவன் போல் தமையனிடம் நிதானமாகப் பேசினான் வாசு.

வளமான மண்ணிலே வளர்ந்த செடியைப் பிடுங்கி, அறையிலுள்ள பூந் தொட்டியில் நட்டுப் போஷித்தாலும், அதன் வளர்ச்சி முன்போல் தழைப் பின்றிச் சுருங்குவது போல ஒரு காளையச் சம்பவம் தன் தம்பியின் எதிர்கால வாழ்க்கையையே காட்டாறு போல வேறு திசையில் திருப்பியது குறித்து அங்கலாய்த்தான் ராஜா.

சகோதரர்களின் மோன நிலைக்கு ஒரு முடிவு கட்டுவது போல், ராஜாவின் மனைவி அவனை உட்புறம் வருமாறு சமிக்ஞை செய்தாள். கணவனும் மனைவியும் பேசிய ரகசியம் தெளிவாகக் கேட்கா விட்டாலும், பேசப்படும் விஷயம் தன்னைப் பற்றியே இருக்கும் என வாசு நம்பினான்.

சஞ்சலம் குமிழிட்ட முகத்துடன் உட்புறமிருந்து முன்ஹாலுக்கு வந்தான் ராஜா. மீண்டும் பேச்சை எங்கே தொ

"இரேன்; சாப்பிட்டு விட்டுப் போகலாம்" என்றான் ராஜா.

"அவள்...!" என்று கேட்டான் வாசு.

"அங்கே, தம்பியிருக்கு மிடத்தில் அவள் சாப்பிட்டுமே! நீ இங்கே சாப்பிட்டால் என்ன!" என்றான் ராஜா.

"அப்படியெதற்கு! நானும் அங்கேயே போய்ச் சாப்பிடுகிறேன்" என்றான் வாசு. தன்னைச் சோதிக்கவே இளம்பி வந்தவன் போல் அல்லவா பேசுகிறான் என்று ராஜா மனத்துக்குள் நினைக்கவும் வாசு வாய் திறந்தான்.

"ரகுவுக்கும் கல்யாணமாகி விட்டதே! இனிமேல் 'அவள்' இங்கு வந்தால் என்ன! உனக்குக் கஷ்டமா யிருந்தால் சொல்லு. நான் இப்பொழுதே கிளம்பி விடுகிறேன்."

"உன் அலட்சியமான போக்கை நீ இன்னமும் விட்டதாகத் தெரியவில்லை. தம்பதி சகிதமாய் உங்களை



இங்கே அழைத்து உபசாரம் செய்கிறது என் அபிப்பிராயம், சுதந்திரம் இவற்றைப் பொறுத்தது என்று நீ நினைக்கலாம். குடும்பத்திலே மூத்தவனாகப் பிறந்த தோஷத்தால், சில சமயங்களில் ஒரு கட்டுப்பாட்டுக்கு அடங்கியும் நான் நடக்க வேண்டியிருக்கிறது. என் நிலைமை புரிந்தும், நீ இப்படிப் பேசுகிறாயே!'' என்றான் ராஜா.

''என்னாலே நீ எந்த இடைஞ்சலுக்காவது உள்ளாக வேண்டியிருந்தால் அதை, நானும் விரும்பவில்லை! நான் வருகிறேன்'' என்று கூறிக் கிளம்பி விட்டான் வாசு.

மூந்திய வாரம். வெள்ளிக்கிழமை யன்று, காதல் மணம் செய்து கொண்ட நண்பன் ஒருவனுக்குத் தான் விருந்து வைத்தது ராஜாவின் நினைவில் எழவும், அதே முறையில் நடந்துகொண்ட தம்பியை, வீடு தேடி வந்தவனை, வெள்ளிக்கிழமை யன்று விரட்டியடிப்பதா என்ற பிரச்னையும் தோன்றியது. ஒரு கணம்தான் சிந்தித்தான். வாயிற்படிகளைக் கடந்து சென்ற வாசுவை, ராஜாவின் குரல் திரும்பச் செய்தது.

''வாசு! நீ போய் அவளையும் இங்கே அழைத்துக் கொண்டுவா. சாப்பிட்டு விட்டு இங்கிருந்தபடியே நீங்கள் ரயிலுக்குக் கிளம்பலாம்'' என்றான்.

வாசுவின் முகத்தில் அதுவரையில்லாத நிறைவு பளிச்சிட்டது. ''சரி!'' என்று தலையசைத்து விட்டுச் சென்றான்.

புதுமணத் தம்பதிகளுக்கு அவசர விருந்து தயாரிப்பதில் ராஜாவின் மனைவி மூழ்கியிருந்தாள். ஊஞ்சலில் அமர்ந்திருந்த ராஜாவுக்குத் தனிமை வாய்த்தது.

எல்லோருடைய பரிவுக்கும் மதிப்புக்கும் பாத்திரமாகி, தானும் பெருமையிலும் பூரிப்பிலும் திளைக்க வேண்டிய வயதில் குடும்பத்தைப் பகைத்துக் கொண்டு, தன்னைப் பெற்று வளர்த்து ஆளாக்கி விட்டவர்களின் அன்புச் சூழலிலிருந்து விலகி வாழும் தனிமையில், 'வாசு, என்ன சுகத்தைக் கண்டிருக்கக்கூடும்!' என்ற ஆராய்ச்சியில் ராஜாவின் சிந்தனை நெளிந்தது. இந்த நிலைமை ஏற்பட ஏதுவாயிருந்த நிகழ்ச்சிகள் அவன் மனக்கண்களின் முன் கோவையாக உருண்டன.

* * *

நீலவானத்து மூலைப்பிலிருந்து வெடித்து வரும் இடிபோல அன்றொரு நாள் ராஜாவுக்குச் செய்தி வந்தது. சென்னையிலிருந்து அவன் தந்தை சர்மா எழுதியிருந்தார்.

''உன் தம்பி வாசு அவனிஷ்டப்படி யாரோ ஒரு பெண்ணை வடபழனி சன்னிதியில் யாருமறியாமல் மணந்து கொண்டு விட்டான். இதை நிகழாமல் தடுத்துவிட வேண்டி நான் சென்னை வந்திருந்தும், நம்மை யெல்லாம் வஞ்சிப்பதுபோல் காரியத்தில்மிஞ்சிவிட்டான். இனி நம் குடும்பம் அவனை இழந்தது போலத்தான். இந்த சோகத்தை உன் தாய் எப்படித் தாங்கப் போகிறாளோ! நான் இங்கு வந்த வேலை முடிந்து விட்டதால் நாளை இரவு கிளம்பி, ஊருக்குச் செல்வதாக இருக்கிறேன்.''

வாழ்வின் கஷ்ட நஷ்டங்களைத் தாங்கித் தழும்பேறிய உள்ள மொன்றின் வருத்தம் தோய்ந்த கடிதம் ராஜாவைக் கலங்க வைத்து விட்டது. முழு விவரமுமறியத் துடித்த ராஜா, சென்னையிலிருந்து திரும்பும் தந்தையைச் சந்திக்க வேண்டி, அன்று மாலையே சொந்த ஊருக்குச் சென்றான். வீட்டை யடைந்த ராஜாவுக்குத் தாயின் முகத்தைக் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. இதயத்திலே பெருக்கெடுத்து வழியும் பாச வெள்ளத்தைத் தடுக்கவும் இயலாமல், தாங்கவுமியலாமல் பெற்றவள் தவிப்பதைக் கண்டான்.

''உங்க அப்பா வைராக்கியம் கொண்டவராச்சே! அவனை இந்த வீட்டுப் படியேற விடமாட்டாரே! என்னடா செய்வேன்! அவன் சந்நியிலே நின்று தவித்தால் நான் எப்படிப் பொறுப்பேன்!'' என்றெல்லாம் பிரலாபித்தாள் தாய். எந்த வார்த்தைகளால் அந்தத் தாயுள்ளம் தேறிவிடப் போகிறது என்ற அவநம்பிக்கையில் ராஜா வாயடைத்துப் போனான். ஒரு குரல் அழுது அடங்கித்தான் ஆறுதல் கண்டாள் அவன் தாய்.

மறுநாள் காலை சென்னையிலிருந்து திரும்பிய தந்தை மூலம் விவரமறிந்தான் ராஜா.

கடைத் தெருவிலும் கோவிலிலும் அடிக்கடி சந்திக்க நேர்ந்த ஒரு பெண்ணுடன் அறிமுகம் ஏற்பட்டு, வாசு பழகி வந்ததாகப் பராபரியான செய்தியை ராஜாவே கேள்விப்பட்டிருந்தான். தனக்கு நேர் அடுத்த தம்பியான ரகு, தன் கண்காணிப்பிலிருந்த வாசுவை இது விஷயமாகக் கண்டித்த பின்னரும், வாசு தொடர்ந்து அந்தச் சகவாசத்தில் ஈடுபட்டு வந்ததாயும், அதன் பலனாகவே வாசு அந்தப் பெண்ணை மணக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டதையும் அறிந்தான். இந்த ஏற்பாட்டைத் தகர்த்து விட வேண்டிச் சென்னைக்குச் சென்றிருந்த தந்தையிடமே அவர் வழிக்கு வருபவன் போல் நடித்து, அவரை நம்பச் செய்து, பின் அந்தப் பெண்ணின் கண்ணீரைக் கண்டு கலங்கியவனாய், அந்தப் பெண், அவளுடைய தமையன் ஆக இருவரையும் ஒரு 'டாக்ஸி'யில் அமர்த்தி அழைத்துக் கொண்டு, வட பழனி கோவிலில் சடங்குகளற்ற முறையில் தாலிச்சரடை மட்டும் அணிவித்து ஒரு அர்ச்சனையும் செய்து வீடு திரும்பி விட்டான் வாசு. அவன் அந்தத் திருமணத்தை மறைக்க முயன்றும் பல சங்கேதங்களால் விஷயம் வெளிப்பட்டு விட்டது.

''என் சக்திக்கு உகந்தவரை படிக்க வைத்தேன். நல்ல வேலையில் அமர்த்த வேண்டிச் சிபார்சுகளை யெல்லாம் பிடித்து வேலையும் வாங்கிக் கொடுத்தேன். அவனுடைய ஊதாரித்தனத்தைக் கண்டித்திருப்பானே ஒழிய, தன் தேவைகளைக்கூடக் குறைத்துக்கொண்டு அவன் வேண்டியதெல்லாம் ரகு வாங்கிக் கொடுத்திருக்கிறான். அவன் விரும்பிய பெண்ணையே கல்யாணம் பண்ணிக் கொள்ளட்டும். ஆனால் அதற்கு ஒரு முறையில்லையா! தனக்கு மூத்தவன் மணமாகாமல் இருக்கிறானே என்ற நினைவும், நம் குடும்ப நிலவரமும் தெரிந்தும் இப்படி வஞ்சகம் செய்து விட்டானே. அவன் கல்யாணம் செய்து கொண்டதைக் கூட நான் ஆட்சேபிக்கவில்லை. என் வழிக்கு வருபவனைப் போல் நடித்து, என்னை நம்பச் செய்யும் நாடகமாடி, முகத்தில் அடிப்பதுபோல அவன் நடந்து கொண்டதுதான் என் நெஞ்சைப் பிளந்து

விட்டது' என்றார் ராஜாவின் தந்தை. அவர் குரலில் உருக்கம் தோய்ந்திருந்தது.

பூர்வீக சொத்துக்களின்றி மேலான படிப்புமின்றி, தன் சுய முயற்சியாலும் தளராத உழைப்பினாலும், அநுபவவாயிலாகக் கைவந்த திறனாலும், ஒரு பெரிய குடும்ப பாரத்தைச் சமாளித்து வந்தார் அவன் தந்தை. நான்கு பெண்களுக்குத் திருமணம் செய்வித்து, குழந்தைகளை யெல்லாம் படிக்க வைத்து, வீடு வாங்கி, நிலம் வாங்கி, செயற்கரிய செயல்களெல்லாம் சாதித்த பின்னரும் அமைதியாகக் காலம் கழிக்க வேண்டிய வயதில், பிள்ளைகளின் கைகளை எதிர்பாராமல் தன்னையே அலட்டிக் கொண்டு வரும் தந்தை சர்மாவுக்கு நியாயமாக ஏற்படக்கூடிய மனத் தளர்வை ராஜாவால் உணர முடிந்தது. 'தன் சொல்லுக்கு மறு சொல் இல்லை' என்ற கொள்கையை அதுவரை நிலைநிறுத்தி விட்ட சர்மாவுக்கு எதிராக வாசுவின் கிளர்ச்சி அவரைப் புண்படுத்தி விட்டதில் வியப்பில்லை. கண்டிப்பும் கட்டுப்பாடும் மிக்க சர்மா, வாசு குடும்பத்தை விட்டு வெளியேறத்தான் வேண்டும் என்று சொல்லி, அதற்கான ஏற்பாடுகளையும் செய்து விட்டு வந்திருப்பதை ராஜா அறிந்தான்.

ராஜாவின் உள்ளம் தந்தை — தம்பி இருவருக்குமே பரிந்து தவிப்புண்டது!

'இளமையிலேயே வாய்த்துடுக்கும் சபல புத்தியுமுடைய தம்பி, வாலிபக் கோளாறுகளுக்கு அடிமைப்பட்டு, உணர்ச்சிப் பெருக்கில் தன்வசமிழந்து விட்டான். காலத்தை ஒட்டிய நோக்கில், 'கல்யாணம்' என்பது செய்து வைப்பவர்களைவிட, செய்து கொள்பவர்களைப் பொறுத்த விஷயம்' என்று வாதித்தால் வாசுவின் கட்சியில்கூட நியாயமிருந்தது! அப்படியே அதைக் குற்றமாகக் கொண்டாலும் அதற்குத் தண்டனை குடும்பப் பகிஷ்காரமா!' என்று வருந்தினான் ராஜா.

சரளமான போக்குள்ள ராஜாவின் அநுதாபத்தை மட்டுமாவது பெற்று விடலாம் என்ற நம்பிக்கையில் வாசு, ராஜாவைத் தேடிவரக் கூடும் என்றறிந்த சர்மா, வாசுவுடன் எந்த விதத்திலும் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாதென்று கண்டித்துச் சொல்லியே, ராஜாவுக்கு விடை கொடுத்து அனுப்பினார்.

ஓரிரு மாதங்கள் மறைந்தன. கண்டிப்பிலும் கருவிலும் தந்தைக்குச் சற்றும் சளைக்காத குணம் கொண்ட தமையன் ரகுவிடம் மட்டும் தன் கைவரிசைகள் செல்லாதது கண்ட வாசு, தெருவில் அவனைக் காண நேர்ந்த பொழுது தலைமறைவாக ஒதுங்கிப் போகப் பழகிக் கொண்டான். சென்னையிலேயே இருந்து வந்த தங்கை, தமக்கை இருவரின் வீட்டுக்கு வாசு சென்றிருந்த பொழுது, தந்தையின் கட்டளைக்குப் பயந்து, அவனை வீட்டினுள் அழைக்கவும் முடியாமல், வீடு தேடி வந்தவனைப் புறக்கணிக்கவும் முடியாமல், திணறிப் போய் வாசலிலேயே வைத்துப் பேசி யனுப்பினர்.

இதற்கிடையில் ராஜாவே ஒரு முறை சென்னை செல்ல நேர்ந்தது. ராஜா வந்திருக்கும் செய்தி யறிந்த வாசு, அவனைக் கண்டு போக ரகுவின் வீட்டு வாசலில் வந்து நின்று, தன் வருகையை உள்ளே யிருந்த ராஜாவுக்குச் சொல்லியனுப்பினான். சாப்பிட உட்காரவிருந்த நேரத்தில் வாசு, வந்துள்ள விவரமறிந்த ரகு வெகுண்டவனாய் வெளியே வந்தான்.

"யாரைப் பார்க்க இங்கு வந்திருக்கிறாய்! உனக்கு அண்ணன் தம்பி, அப்பா, அம்மா என்று உறவு வேறு வைத்திருக்கிறதா! உனக்கு முழுக்குப் போட்டாச்சு! எங்க கண்ணெதிரிலே நிற்காதே. எங்க வீட்டுப் படியும் ஏறாதே. போடா!" என்று கர்ஜித்தான்.

வெளி வாசலில் நடந்த சம்பவம் உள்ளிருந்த ராஜாவை உலுக்கி யெடுத்து விட்டது. வாசுவைப் பார்க்க விரைந்து வந்த ராஜாவை, ரகு வழிமறித்து உட்புறம் போகச் சொன்னான். ராஜாவும் பொறுமை யிழந்து விட்டான்!

"அவனைப் பார்ப்பதால் என்ன வந்துவிடும்! அப்பாவைவிட உன் கண்டிப்பல்லவா கொடி கட்டிப் பறக்கிறது!" என்றான் ராஜா.

"அவன் ஆடின ஆட்டங்களை நீ பார்த்திருந்தால் தெரியும்! அன்றைக்கு அப்பாவை என்ன சோதனைக்கு ஆளாக்கினான் தெரியுமா! வீட்டை விட்டு வெளியேறின மறுநாள், தன் துணிமணிகளைக் கேட்டு ஒரு கடிதம் கொடுத்தனுப்பி யிருந்தான். 'அப்பாவுக்கு'ன்னு எழுதாமல் 'டியர் சார்'ன்னு எழுதியிருந்தான்டா! குடும்ப பாச பந்தங்களை யெல்லாம் தான் தாண்டி விட்டதாக எழுதியிருந்தான். அவனுடைய பண உதவி இல்லாது போவதால் நம்ப குடும்பம் கஷ்டப்படப் போகிறது என்று கண்டவர்களிட மெல்லாம் சொல்லித் திரிகிறான். தான் செய்த குற்றத்துக்கு மன்னிப்புத் தேடணும்னு அவனுக்குப் புத்தி போகல்லே. ஏதோ சாதிக்க முடியாததைச் சாதித்து விட்டதாகப் பெருமை கொள்கிறான்! எத்தனை நெஞ்சழுத்தம் தெரியுமா அவனுக்கு! அவனைக் கூப்பிட்டு ஆசனம் தந்து உபசாரம் செய்யச் சொல்கிறாயா! தான் செய்தது பிசகே இல்லை என்று 'ஸ்தாபிதம்' பண்ணிவிடுவான். உனக்கு இருக்கும் அளவு இல்லாவிட்டாலும், கூடப் பிறந்த காரணத்தால் எனக்கும் அவன்மேல் பரிவு இருக்கும் என்பதை மறந்து விடாதே. நாளும் கிழமையுமாக வீட்டு வாசல் தேடி வந்தவனை விரட்டியடிக்கிறதுலே எனக்கு மட்டும் வருத்தமில்லையா! சௌக்கியக் குறைவு இல்லாமல் இங்கே இருந்ததை விட்டுவிட்டு, தன் பணத்தையும் அந்தக் குடும்பத்தில் கொண்டு கொட்டி, நல்ல சோறு இல்லாமல் அவன் உடம்பு வாடியிருக்கிறதைப் பார்த்தால் எனக்கு எத்தனை வேதனையாயிருக்கு தெரியுமா!" என்று உணர்ச்சிப் பெருக்கில் பேசி முடித்த ரகு, விக்கி அழவே தொடங்கி விட்டான்! தந்தையின் கட்டளைக்கு அடங்கிக் கடமையைச் செலுத்தும்போது, ரகுவையும் பாசம் இளகுமலில்லை என்பதைக் கண்ட ராஜா பிரமித்துப் போனான்.

அந்த மாத இறுதியில் திடீரென்று நிச்சயமாகி நிகழ்ந்த ரகுவின் கல்யாணத்துக்கு வாசு அழைக்கப்படவுமில்லை. அவனும் அது குறித்து வருந்தியதாகக் காட்டிக் கொள்ளவுமில்லை. குடும்பத்தில் ஒவ்வொருவரும், அவரவர்களுக் குள்ளேவாசுவைப் பற்றி வியாகூலப்பட்டு வந்ததால், பழைய கலகலப்பு மறைந்து விட்டது.

* * *

வாசற்புறம் செருப்போசை கேட்டது. சிந்தனை கலைந்த ராஜா, ஊஞ்சலிலிருந்து

எழுந்து, வெளியே தன் பார்வையைச் செலுத்தினான். முதலில் வாசு உள்ளே வந்தான். அவனைத் தொடர்ந்து வந்த, அவன் மனைவியான அந்தப் பெண்ணுக்கு மட்டும் வீட்டினுள் நுழையும் துணிவு உடனடியாக வரவில்லை போலும்! அவள் தயங்கியபடி வெளியிலேயே நின்றாள்.

"வாசு! 'அவளையும்' உள்ளே வரச் சொல்லு" என்று ராஜா கூறிய பின்பே அவள் உள்ளே நுழையும் துணிவு பெற்றாள்.

சாப்பாட்டின் பொழுது, விரிவாகத் தன் உபதேசங்களைத் தொடங்கினான் ராஜா. குடும்பத்தின் நிலைமை தெரிந்திருந்தும், தனக்கு மூத்தவன் மணமாகாமலிருக்கும் பொழுது, வாசு அவசரக் கோலமாகக் கல்யாணம் செய்து கொள்ளத் துணிந்ததும், அதை நிறைவேற்ற முயன்றதில் அவன் கையாண்ட விரசமான முறைகளும் பெற்றோர்களைப் பாதிப்பது நியாயமே என்பதை எடுத்துக் காட்டினான். இனி அப் பெண்ணைக் கைவிடும்படி எவரும் கூறவில்லை யென்றும், அவன் செய்ய வேண்டியதெல்லாம் அவனுடைய குடும்பத்தைச் சார்ந்திருப்பதை விட்டு விலகி, மனைவியுடன் தனிக் குடித்தனம் நிறுவி, செவ்வையாக நடந்து வந்தால் போதும். என்றாவது ஒரு நாள் சர்மா மனம் மாறி அவனை ஏற்றுக் கொள்ளக்கூடும் என்றும் போதனை செய்தான் ராஜா.

ராஜாவின் யோசனைகளை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டான் வாசு. தன் மனைவியை ராஜாவின் வீட்டிலேயே விட்டுப் போவதாகவும், சென்னை சென்றதும் தனிக்குடித்தனம் நிறுவுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டு வார முடிவில் திரும்பவும் வந்து, மனைவியை அழைத்துப் போவதாகக் கூறி ராஜாவின் சம்மதம் கோரினான். பலத்த மனோ தர்க்கத்துக்குப் பின்பே அவர்கள் இருவரையும் வீட்டுக்கு அழைக்கத் துணிந்த ராஜா வாசுவின் கோரிக்கையை ஏற்கத் தயங்கினான். 'தன் யோசனைகளின்படி நடக்க ஒப்புக்கொண்ட தம்பியைத் திருப்தி செய்வதா! அந்த வேண்டுகோளை ஏற்பதின் மூலம் தந்தையின் கட்டளையை மீறுவதா!' என்ற சஞ்சலம் ராஜாவை ஆட்டி வைத்தது. முடிவாக, ஒரு வாரகாலம் 'அவளி'ருந்து வரும் செய்தி தானாக அறிவித்தாலன்றி, தந்தைக்குத் தெரிய நியாயமில்லை என்ற எண்ணத்தில் ராஜா சம்மதம் தந்து விட்டான். வாசு மட்டும் அன்று இரவு வண்டிக்குச் சென்னை நோக்கிப் பயணமானான்.

அடுத்த மூன்றாம் நாள் மாலை, சற்றும் எதிர்பாராத விதமாகச் சர்மா வந்து விட்டார்! முன் ஹாலிலிருந்த ராஜாவும் அவன் மனைவியும் சர்மாவின் வருகையைக் கண்டு வெலவெலத்துப் போனார்கள்! வாசுவின் மனைவி அங்கிருந்து வரும் மர்மத்தை அறியும் நோக்கமே சர்மாவின் திடீர் விஜயத்துக்குக் காரணமாயிருக்கும் என ராஜா நிச்சயமாக நம்பினான். 'பளிச்' என்று ஒரு யோசனை உருவாகியது. வாசுவின் மனைவியை மாடியில் குடியிருப்பவர்களின் வீட்டிலிருக்கும்படி தன் மனைவி மூலம் ஏற்பாடு செய்து விட்டான் ராஜா. அவனுடைய உள் மனம் மட்டும் பல விதங்களிலும் அலைக் கழிந்து கொண்டிருந்தது.

ஏதோ, 'கோர்ட்டு' வேலையாக வந்ததாகக் கூறினாரே தவிர, சர்மாவும் தான் வந்த காரியம் குறித்து அதிகம் விஸ்தரிக்காமல் விட்டு விட்டார். "உளவு கண்டு பிடிக்க வந்திருப்பாரோ! அவராகத் துளைத்துக் கேட்ட பின்பு, ஒப்புக் கொள்வதை விட, நாமாக ஒப்புக் கொண்டு விடலாமா! ஒருவேளை, அவர் வந்த காரணம் வேறாகவே யிருக்க, நாமாக வலியச் சென்று ஒப்புக் கொள்வதின் மூலம் விஷயம் விரசமான கட்டங்களை யடைந்து, தந்தையின் நல்லெண்ணத்தைத் தானும் இழக்க நேர்ந்து விட்டால்!........." என்று மனம் குழம்பித் தவித்தான் ராஜா.

கடைசியில், அவராகக் கேட்டாலொழியச் சொல்வதில்லை என்ற முடிவுக்கே வந்தான் ராஜா. மறுநாள் பிற்பகல் வண்டிக்குச் சர்மா புறப்படும் வரை, வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டவன்போல் வெந்து தணிந்தான். வார முடிவில் வீடு ஏற்பாடு செய்து விட்டு வந்த வாசு மனைவியை அழைத்துச் சென்றான். தன் மனைவிமூலம் வரப்போகும் ஆறும் மாதத்தில் வாசு தகப்பனாகப் போகும் விஷய மறிந்தான் ராஜா.

தனிக்குடித்தனம் நடத்தி வந்த வாசுவிடமிருந்து ராஜாவுக்கு எப்பொழுதாவது கடிதம் வரும். பாசம் அகற்றி, வைராக்யத்தை வளர்த்துக் கொண்ட தந்தை, தன் சுய உணர்ச்சிகளுக்கு உருவம் கொடுக்காமல் தந்தையைத் திருப்தி செய்ய வேண்டி, அவர் கட்டளைப்படி தம்பியைப் பகிஷ்காரம் செய்யும் கடமையை நிறைவேற்றி வந்த ரகு ஆகிய இருவரையும் ஒரு துருவமாகவும், வாசு—தந்தை இருவர் பேரிலும் அனுதாபம் கொண்ட தன்னை மற்றொரு துருவமாகவும் உருவகம் செய்து கொண்டான் ராஜா.

குடும்பத்தில் விழுந்த விரிசல் வரவரப் பெரிதாகி வருவது கண்டு, அது முற்றிலும், பிளந்து விடாமலிருக்க, தன்னால் ஒட்டுவேலை ஏதும் செய்ய முடியுமானால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்ற நப்பாசை ராஜாவிடம் வளர்ந்து பெருகியது. வாசுவுக்காகப் பரிந்து பேசிப் பொல்லாப்படையவும் மனம் இடந்தரவில்லை. தன்னை இன்னமும் ஒதுக்கி வைத்திருக்கிறார்களே யென்ற வெறுப்புணர்ச்சி, அசட்டுத் துணிவும் வேகமும் கொண்ட வாசுவை, விபரீதமான விளைவுகளுக்கு வழி காட்டி விடக்கூடாதே யென்று ராஜா ஏங்காத நாளில்லை.

ஆஸ்பத்திரியில் பிரசவமாகி, தனக்கு ஆண் குழந்தை பிறந்த செய்தியை வாசு, ராஜாவுக்கு மட்டும் எழுதியிருந்தாலும் சர்மாவரை அந்த விஷயம் எட்டி விட்டது. பலரும் பங்கு போட்டுக் கொண்டு மகிழ வேண்டிய ஒரு நிகழ்ச்சியை, பயத்துக்கும் கவலைகளுக்கும் மத்தியில் தன்னைத் தனியாகத் தான் அநுபவிக்க நேர்ந்தது குறித்துப் புலம்பியிருந்த வாசுவின் கடிதம் ராஜாவின் நெஞ்சைப் பிழிந்தது. தனக்குப் பிறந்த குழந்தை தக்காமல் போனது குறித்து, துயரத்தில் ஆழ்ந்த தன் தந்தை சர்மா, இந்தப் பேரனின் பிறப்பாலாவது மனமாற்றம் அடையமாட்டாரா என்று ராஜா எதிர்பார்த்தான். எதிர்காலத்தின் பேரில் நம்பிக்கை வைத்து மனத்தைத் தேற்றிக்

கொள்ளுமாறு வாசுவுக்குக் கடிதமெழுதத் தான் அவனால் முடிந்தது.

* * *

அடுத்த இரண்டாம் மாத மத்தியில் சர்மாவின் அறுபதாண்டு நிறைவு விழா வர விருந்தது. அதை விமரிசையாகக் கொண் டாட வேண்டுமென்று ரகு எழுதியதை அனுசரித்து ராஜாவும் அதற்கான ஏற்பாடு களைத் துவக்கினான். சர்மா, முதலில் மறுத்தா லும், அதிக ஆடம்பரமின்றி அதை நிகழ்த்து வது குறித்துத் தன் விருப்பத்தை வெளியிட் டார். இதற்கான அழைப்புக் கடிதங்கள் அனுப்பப்பட்ட போதும், வாசுவை வரச் சொல்லிக் கடிதமெதுவும் எழுதப்படவில்லை. அதுபற்றிச் சர்மாவைக் கேட்கும் துணிவு ஒரு வருக்காவது இல்லை!

அறுபதாண்டு கல்யாணத்துக்கு உறவினர் களும் பிரமுகர்களுமாகக் குழுமியிருந்தனர். இம்மாதிரி வைபவங்களி லெல்லாம் தன்னை விலக்கி வைக்கும்படி ஒரு செய்து கொண்டு விட்டானே என்ற ஆற்றாமை ராஜாவைக் கப்பியது.

மணப் பந்தலில் அமர்ந்திருந்த தன் பெற் றோர்களையே கண் கொட்டாமல் பார்த்தான் ராஜா. தான் பெற்ற பிள்ளைகளிலொன்று 'தறுதலை'யாகி, உயிரோடு இருக்கும், இறந் தது போலானது குறித்துத் தாயுள்ளம் தத்த ளிப்பதை, தன் தாயின் நீர் முட்டி நின்ற கண் களிலிருந்து ராஜா தெரிந்து கொண்டான். பக்கத்திலிருந்த தந்தை சர்மாவின் சிந்தனைகள் எங்கோ லயித்திருப்பது போல், அவர் பார்வை தெரிவித்தது. 'மண்ணிடைப் பிறந்து வாழும் வாழ்வில் பண்பான அன்பை வளர்க்காமல் வைராக்கியத்தையே வளர்த்து வரும் இவ ருடைய போக்குக்கு எல்லையே யில்லையா!' என்ற எண்ணப் பெருக்கில் ராஜா நிலைகுலைந்து போனான். பூரண நிலவிலிருந்து ஏதோ ஒரு சிறு பகுதி தெறித்து விழுந்தது போலச் சூழ்நிலை அவனுக்குத் தோற்றம் தந்தது.

சிந்தனை யலைந்து, செயலற்று நின்ற நிலை யிலே வாசற்புறமிருந்து சைக்கிள் மணி யடித்த ஓசை கேட்டது. விரைந்து வந்த ராஜா சிவப்பு சைக்கிளுடன் தந்திச் சேவகன் நிற்பது கண்டதும் திடுக்கிட்டுப் போனான். மறுகணம் ஏதாவது வாழ்த்தாகவும் இருக்கக் கூடும் என்ற நினைவில் தந்தியை வாங்கக் கையை நீட்டினான்.

விலாசதார் இல்லாததால் திரும்ப வந்த 'ரிப்ளை பெய்ட்' தந்தி யொன்றும், தந்தி மணியார்டர் தொகையாக ரூபாய் முப்பதும் அவன் கைகளில் விழுந்தன. கலவரம் கொண்ட வனாகத் தந்தியைப் பிரித்துப் படித்தான் ராஜா.

"இது கிடைத்தவுடன் மனைவி குழந்தை சகிதம் புறப்பட்டு முகூர்த்த நேரத்துக்குள் வந்து சேரவும். கிளம்பி விட்டதற்குத் தந்தி கொடுக்கவும்."

வாசுவுக்குச் சர்மா அனுப்பிய தந்தியாக அது இருக்கக் கண்ட ராஜா, எல்லையற்ற பெரு வியப்பில் மூழ்கி விட்டான். இந்த முடிவைச் சில நாட்களுக்கு முன் செய்திருந்தால் வாசுவும் வந்திருக்கக் கூடுமே! தன்னை அழைக்கவில்லை என்றதால் ஏற்படும் விரக்தியை மறக்க வேண்டி அவன் எங்கு சென்றானோ என மறுகி னான் ராஜா. தந்தி வந்த செய்தி உண்டு பண்ணிய பரபரப்பில் ரகு உள்படப் பலரும் வெளி வாசலுக்கு வந்து விட்டனர். ராஜா விடமிருந்து தந்தியை வாங்கிப் பார்த்த ரகு வும் அசையாச் சிலையாகி விட்டான்!

இந்தத் திகைப்பு நீங்குமுன் தெருவில் வண்டி வந்து நின்றது. அழைப்பில்லா விட்டாலும், அந்த வைபவத்தில் கலந்து கொள்வது என்ற தீர்மானத்தில், சர்மாவின் தந்தியைப் பாரா மலேயே கிளம்பி வந்த வாசுவும், அவனைத் தொடர்ந்து கைகளில் குழந்தையுடன் அவன் மனைவியும் வண்டியிலிருந்து இறங்கி வந்தனர். யாவரும் பேச்சற்று நின்ற நிலையில் ஒரு அதிசய மான மௌனமே அவர்களை வரவேற்றது!

தன் கையிலிருந்த தந்தியை வாசுவிடம் கொடுத்தான் ரகு. அதைப் படித்த வாசு, தலை தெறிக்கும் வேகத்தில் உள்ளே சென்று மணப் பந்தலில் அமர்ந்திருந்த சர்மாவின் முன் நெடுங்கிடையாக விழுந்து வணங்கி "அப்பா! என்னை மன்னித்து விடுங்கள்" என்று கதறி னான். அவனைத் தொடர்ந்து வாசுவின் மனைவி யும் குழந்தையை மாமியாரின் காலடிகளில் வைத்துவிட்டு வணங்கி எழுந்தாள்.

தன் பிள்ளை வழித் தோன்றலான பேரனைக் கைகளிலெடுத்துக் கொண்ட வாசுவின் தாய் பரவச நிலையிலாழ்ந்து விட்டாள். தன் வைராக் கியம் நெகிழ இடம் தந்து, பாசம் பற்றிக் கொண்ட உள்ளத்துடன் வீற்றிருந்த அறுப தாண்டு இளைஞரான சர்மாவை வியப்பு விரிய வைத்த கண்களால் யாவரும் கண்டனர்.

இந்த நேரத்துக்குத் தவம் கிடந்த ராஜா தன் தந்தையுருவிலே விளங்கிய தெய்வத்துக்கு மனம் குளிர அஞ்சலி செய்தான்.

சுப வேளை நெருங்கியதால் கொட்டு மேளம் ஒலிக்கத் தொடங்கியது!

அட்டைப்பட விளக்கம்

## கதையும் வாழ்வும்

கவி ரவீந்திரர் எழுதிய அற்புதமான காதல் நாடகங்களில் சிறந்தது சித்ரா. சித்ராங்கதா என்ற அழகற்ற அப்பெண் மன்மதனைக் கருதித் தவங்கிடந்து அழகைப் பெறுகிறாள். அந்த அழகை, நீர்நிலையில் தோன்றிய தன் பிரதிபிம்பத்தில் கண்டு மயங்கினாள்.

இந்த ரஸமான கட்டத்தைப் படித்துக் கொண்டிருந்த ரங்கதுரை, புஸ்தகத்தில் தோன்றிய சித்ராவே உயிர் பெற்று வந்தாற்போல் பிரமை கொண்டான். இதற்குக் காரணம் அவ்விடத்தில் இந்துமதி தோன்றியதுதான்.

இந்த ரஸமான நிகழ்ச்சியை இவ்வாறு அட்டைச் சித்திரமாக வழங்குகிறார் நமது ஓவியர் மணியம்.

# தமிழ் கூறும் நல்லுலகம்

கல்கத்தா பாரதி தமிழ் சங்கத்தில் கல்கி நினைவு தினம் அனுஷ்டிக்கப் பட்டது. ஆங்கரை ஸ்ரீ ஜயராமன் கல்கியின் மேதையைப் பற்றிக் கவிதை புனைந்துரைத்தார்.

மற்றும் பல அன்பர்கள் கல்கி அவர்களுடன் அவர்கள் கல்கத்தாவில் கழித்த நாட்களையும், அன்னார் தமிழ் உலகுக்குத் தொண்டு செய்த விதத்தையும் பற்றிப் பேசிக் கல்கிக்கு அஞ்சலி செய்தார்கள்.

பின்னர் தலைவர் ஸ்ரீ ஓ. எஸ். வி. மணியம் கல்கியைப் பற்றியும், அன்னாருடன் தாம் திருச்சியில் கல்லூரியில் கழித்த நாட்களையும் பற்றியும் குறிப்பிட்டார். கடைசியில் யாவரும் எழுந்து நின்று பேராசிரியர் கல்கி ஆத்மா சாந்தி யடைய அஞ்சலி செய்தனர்.

★

ஜம்ஷெட்பூரில் "அமரர் கல்கி" யின் நினைவு நாளை முன்னிட்டு டெல்கோ தமிழ்ச் சங்கம், டெல்கோ மாதர் சங்கம் இவைகளின் ஆதரவின் கீழ் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. அக் கூட்டத்தில் ஸ்ரீமதி பானுமதி, ஸ்ரீ சேஷகிரி, ஸ்ரீ பாலசுப்பிரமணியம், ஸ்ரீமதி கோமதி, ஸ்ரீ எஸ். ஒய். சுப்பிரமணிய அய்யர், ஸ்ரீ சீனிவாசன் ஆகியோர் பங்கெடுத்துக் கொண்டு திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் நம் நாட்டுக்கு அரசியல், சமூகம், கலை ஆகிய துறைகளில் இயற்றியுள்ள சாதனைகளைத் தெளிவாக எடுத்துரைத்தனர். கூட்டத்துக்குத் தலைமை தாங்கிய ஸ்ரீ கே. எஸ். கோபால கிருஷ்ணன் அவர்கள் கல்கியுடன் அவருக்கு ஏற்பட்ட தொடர்பை மிக்க ஹாஸ்யத்துடன் எடுத்துரைத்தார். பின்னர் கல்கி தொகுத்த சாகித்தியங்களில் சிலவற்றை ஸ்ரீமதி பானுமதி, ஸ்ரீமதி ராமநாதன், ஸ்ரீமதி மீனாட்சி ஆகியவர்கள் பாடிச் சபையோர்களை மகிழ்வித்தனர். மாதர் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீமதி லீலா கோபாலகிருஷ்ணன் அவர்கள் வந்தனோபசாரம் கூறினர்.

★

கல்கத்தா தென்னிந்தியச் சங்கத்தின் ஆதரவிலே திக்கி சுத்தா அவர்கள் "நவீன சுவயம்வரம்" "தில்லிக்குறவஞ்சி" என்ற இருஹாஸ்யக் கதா காலட்சேபங்களைச் சென்ற டிசம்பர் 28 ம் தேதி நிகழ்த்தியிருக்கிறார். இயல்பாகவே கவிதைத் திறனும் நகைச்சுவையும் பெற்ற திரு சுத்தாவின் இவ்விரு கதைகளையும் கேட்டுக் கல்கத்தாவாசிகள் பெரிதும் மகிழ்ந்தார்கள்.

★

இலங்கை கொழும்பில் மகாகவி பாரதியாரின் 74-வது ஜெயந்தி விழா பண்டித க. பொ. இரத்தினம் அவர்கள் தலைமையில் 19—12—55 அன்று வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பொதுவாகவே இலங்கை பாரதி இளைஞர் சங்கத்தார் பல பேச்சாளர்களை வரவழைத்துப் பேசச் செய்தும், இசையரங்குகள் ஏற்பாடு செய்தும் பாரதியின் புகழைப் பரப்பும் அரும்பணி புரிந்து வருவது அறிந்து மகிழ்கிறோம்.

# படித்துப்பாருங்கள்

## Madras (in Maps and Pictures)

மேல் நாடுகளைப் பற்றியும் அந்த நாடுகளிலுள்ள பெரிய பட்டணங்களையும் நதிகளையும் பற்றியும் பேசிக் கொள்வது, தெரிந்து கொள்வது பெருமையாக எண்ணிக் கொண்டிருந்த காலமுண்டு. அதே சமயம் பிறந்த நாட்டின் பெருமையைப் பற்றியோ, நகரங்களைப் பற்றியோ, நதிகளைப் பற்றியோ தெரியாது. ஆனால் இப்பொழுது காலம் மாறிவிட்டது.

சுதந்திரம் வந்த பிறகு நம் நாட்டைப் பற்றியும், பட்டணங்களைப் பற்றியும், நாட்டு வளங்களைப் பற்றியும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் மக்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆர்வத்தை விருத்தி செய்யும் முறையில் சென்னை சர்க்கார் விளம்பர இலாக்காவினர் சென்னை மாகாணத்தைப் பற்றிய நூலைத் தேசப் படங்களுடனும் புகைப்படங்களுடனும் விளக்க உரையுடனும் தயாரித்திருக்கிறார்கள். சென்னை ராஜ்யப் பிரிவினை, மக்கள், பேசும் மொழிகள், நீர் வளம், நிலவளம், தொழில் வளம் இவற்றைப் புள்ளி விவரங்களுடன் வெளியிட்டிருக்கிறார்கள்.

படங்களின் வாயிலாகவே, சென்னை மாகாணத்தில் ஜில்லா வாரியாகத் தொழிற்சாலைகள், கனிப் பொருள்கள், விவசாயம், மழை விவரம், கால்நடை அபிவிருத்தி, காடுகள், மீன்பிடிக்கும் இடங்கள், கல்விச் சாலைகள், வைத்திய உதவி முதலியவற்றைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

சென்னை ராஜ்யம் இந்தியாவில் தொழில் வளத்தில் மூன்றாவதாகச் சிறந்து விளங்குகிறது. இந்தியாவிலுள்ள 89 பருத்தி ஆலைகளில் 38 ஆலைகள் சென்னை மாகாணத்தில் கோயமுத்தூரில் இருக்கின்றன. கோயமுத்தூர் 'தென்னிந்தியாவின் மாஞ்செஸ்டர்'ராக விளங்குகிறது. இந்தியாவில் 80 தோல் பதனிடும் ஆலைகளில் 50 ஆலைகள் வட ஆற்காடு, மதுரை ஜில்லாக்களில் இருக்கின்றன என்ற வியக்கத்தக்க விஷயங்களை அறிகிறோம். நீர்வளத்தைப் பெருக்குவதற்காகச் சர்க்கார் செய்து வரும் அரிய சாதனைகளான கீழ் பவானி, சாத்தனூர், மணிமுத்தாறு, கிருஷ்ணகிரி, மாளம்புழை நீர்த்தேக்கங்களைப் பற்றி யெல்லாம் விரிவாக நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

இந் நூல் சென்னை மாகாணத்தின் விசேஷங்களனைத்தும் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்குப் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இந் நூலைச் சிறப்பாகத் தயாரித்து வெளியிட்ட சென்னை சர்க்கார் விளம்பர இலாகா பெரிதும் பாராட்டுவதற்குரியது.

Madras in Maps & Pictures வெளியீட்டோர்: சென்னை சர்க்கார் விளம்பர இலாகா, சென்னை; விலை ரூ. 2-0-0. —பி. எஸ். மணி

# ரகுபதி  ராகவ

## 8. இல்லை என்பாரும் உண்டு என்பாரும்

**[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]**

**ராஜாஜி**

கொள்கையில் நான் ஒரு அத்வைதி என்று என்னைப் பற்றிச் சொல்லலாம். ஆயினும் நான் த்வைத மார்க்கமும் சரியே என்பேன். அத்வைதிகள் பிரபஞ்சத்தை மாயை என்பார்கள். ஒவ்வொரு கணமும் பிரபஞ்சம் மாறி மாறி வருகிறது. இப்படி வேறுபட்டு வேறுபட்டு வரும் பிரபஞ்சத்தை நிலையில்லாத பொருள் என்றுதான் சொல்ல வேண்டும். எனினும், மாறுபட்டு வரும் நிலையில் மாறுபடாத ஒரு சத்து இருந்தே வருகிறது. ஆனபடியால் பிரபஞ்சத்தைப் பொய் என்று சொல்லுவதற்கும் இல்லை. உலகம் பொய்யும் மெய்யும், இரண்டுமே என்பேன்.

பண்டிதர்கள் 'இவன் ஒரு அநேகாந்த வாதி', அதாவது ஒரு நிச்சயமான முடிவு இவனுக்கு இல்லை, என்று என்னைக் குறை கூறலாம். "இப்படியிருக்குமானால் ஒரு முடிவு; அப்படியிருக்குமானால் மற்றொரு முடிவு" என்று ஒருவன் வாதித்தால் அவனைப் புலவர்கள் 'ஸ்யாத்' வாதி என்று பெயரிட்டு இருக்கிறார்கள். (வடமொழியில் 'ஸ்யாத்' என்பது தமிழில் 'ஆயின்' என்கிற இடைச்சொல்.) என்னுடைய ஸ்யாத் வாதம் இந்தப் புலவர்கள் சொல்லும் ஸ்யாத் வாதம் அல்ல, என் கொள்கை ஒரு தனி ஸ்யாத் வாதம்.

என்றால் புலவர்களோடு ஸம்வாதம் செய்ய முடியாது. என்னுடைய நீண்ட அநுபவத்தில் நான் கண்டது என்னவென்றால், என்னுடைய திருஷ்டி முனையிலிருந்து பார்த்தால் நான் சொல்வது முற்றிலும் நியாயமேயாகும். ஆனால் என்னோடு வாதம் செய்பவர்களுடைய நோக்கில் நான் சொல்வது தவறு என்றே படும். ஒரே பொருளை இருவர் ஆராயும் போது, ஒரே விஷயம் இரு பட்சத்திலிருந்தும் இரு விதமாகத் தோன்றும். இரு பாலாருடைய அபிப்பிராயமும் சரியே என்று சொல்ல வேண்டியதாகிறது. இதை நான் நன்றாகக் கண்டிருக்கிறபடியால், என் வார்த்தையில் குற்றம் சொல்கிறவர்களை அக்கிரமக்காரர்களாக நான் பாவிப்பதில்லை. குருடர்கள் ஏழு பேர்கள் யானையைக் காணப்போன கதை தெரியுமே. ஒவ்வொருவனுக்கு ஒவ்வொரு விதமாக ஏழு விதமாகப் புலனாயிற்று அல்லவா! ஏழு பேர்கள் கண்டதும் உண்மையே, ஏழு பேர்கள் கண்டதும் தவறே. அதைப் போலவே பிரபஞ்ச ரகசியமும். அவரவர்களுடைய பார்வையைப் பொறுத்து ஒரு மெய்ப்பொருளானது அநேக ரூபங்களாகக் காணப்படுகிறது. இந்த உண்மையை நான் அறிந்திருப்பதனாலேதான், முஸல்மான்களும் கிறிஸ்தவர்களும் நம்மைப் போலவே உண்மை மார்க்கத்திலேதான் இருக்கிறார்கள் என்பேன்.

முந்தியெல்லாம் என் அபிப்பிராயத்திலிருந்து வேறுபட்டவர்களைக் கண்டு நான் வருத்தம் அடைவேன். இப்போது அவ்வாறில்லை. அவர்கள் பார்வையைக் கொண்டே என்னையும் அவர்களையும் நோக்கும் அறிவு எனக்கு வந்திருக்கிறது. ஆனபடியால் என் அபிப்பிராயத்துக்கு

மாறு பட்டவர்களிடம் அன்பு செலுத்த என்னால் முடிகிறது. உலகம் முழுவதையும் என் அன்புப் பசிக்கு உணவாக்க ஆசைப்படுகிறேன். என்னுடைய அநேகாந்த வாதமானது ஸத்யம் அஹிம்சை என்ற இரட்டைக் கொள்கையிலிருந்து தோன்றியதாகும்.

கடவுளை நான் எப்படிக் கண்டு வழிபடுகிறேனோ அப்படியேதான் கடவுளைப் பற்றி நான் விவரிப்பதும். அதுவன்றி நான் எப்படிப் பேச முடியும்? எனக்குக் கடவுள் சிருஷ்டி கர்த்தாவும் ஆவான், சிருஷ்டி என்பதே யில்லாத கேவலப் பொருளும்— அதாவது மாறுதலற்ற தனி மெய்ப் பொருளும் — ஆவான். உண்மை அநேக உருவங்கள் கொண்டது என்ற என் கொள்கையிலிருந்து இந்த விதமாக எல்லாம் தோன்றுகிறது.

ஜைனர்கள் கூறும் நியாயப்படி கடவுளுக்கு சிருஷ்டித் தொழில் என்பது இல்லை என்றும் சொல்லுவேன். அதோடு கூடவே, இராமானுஜர் சித்தாந்தப் படுத்தியபடி ஆண்டவன் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தான் என்றும் சொல்லுவேன். கருத்துக்கு அடங்காத ஒரு பொருளைப் பற்றிப் பேசுகிறோம் அல்லவா? சொல்லி விளக்க முடியாத ஒரு பொருளைச் சொல்லி விளக்கப் பார்க்கிறோம். அறிவுக்கு எட்டாத ஒரு பொருளை அறியப் பார்க்கிறோம். இதனாலல்லவோ நம்முடைய பேச்சும் வாதமும் குழறுபடுகிறது. ஒன்றுக் கொன்று முரண்படுகிறது.

ஆகையினாலேதான் பரம்பொருளை இது அல்ல அது அல்ல என்று வேதங்கள் விளக்குகின்றன. நம்மால் அறிந்து கொள்ளக் கூடிய எதுவும் கடவுளைப் பற்றிய விளக்கமோ உவமையோ ஆகாது. இந்தக் காரணத்தைக் கொண்டு, கடவுள் உண்டு என்பது பற்றி ஐயப்படுவதற்கில்லை. நாம் இருப்பது உண்மையானால் நம்மைப் பெற்றோரும் அவர்களைப் பெற்றோரும் உண்மையானால் பிரபஞ்சத்தைப் பெற்றவனும் உண்மை. அவனில்லையேல் நாமும் இல்லைதான். இதனாலேயே உலகத்தில் அனைவரும் ஒரு கடவுளைப் பல பெயர்கள் இட்டு வழிபட்டு வருகிறார்கள். பரமாத்மா, ஈசுவரன், யஹோவா, சிவன், விஷ்ணு, ராமன், அல்லாஹ், க்ஹுதா முதலியவாறு எண்ணற்ற நாமங்கள். அவன் ஒரு தேவனுமாய் இருக்கிறான். பல தேவர்களுமாய் இருக்கிறான். அணுவுக்கும் சிறியவன். இமயத்தைக் காட்டிலும் பெரிய வடிவம் கொண்டவன். கையில் எடுத்த ஒரு துளி நீரிலும் அவன் இருக்கிறான். ஏழு சமுத்திரங்களும் அவனைக் கொள்ளும் பரிமாணம் இல்லை. புத்திக்கு எட்டாதவன். பக்தியே அவனைக் காண முடியும்.

வாதங்கள் பல உண்மைகளைச் சாதிக்கும். உண்மையல்ல என்று பல விஷயங்களை நிரூபிக்கும். நாஸ்திகன் ஒருவன் வாதித்து என்னைத் தோல்வியுறச் செய்யலாம். ஆனால் என் புத்தியை முந்திக் கொண்டு என் பக்தி பறந்தோடுகிறது. உலகமெல்லாம் இல்லையென்றாலும் நான் "கடவுள் உண்டு, கடவுள் உண்டு, கடவுள் உண்டு, என்றும் உண்டு" என்று சொல்லுவேன்.

இல்லை என்று சொல்ல விரும்புகிறவர்கள், அப்படியே சொல்லிக் கொண்டு போகட்டும். ஆண்டவன் கருணைக்கு எல்லையில்லை. அவன் எதையும் பொறுப்பான். அவனுடைய ஆட்சியை நாம் ஒப்புக் கொள்ளுவதற்காக நம்முடன் அவன் போர் செய்து வெற்றி கொள்ள அவனுக்கு ஒரு சேனை வேண்டியதில்லை. எப்படியாயினும் நடந்து கொள்ளுங்கள் என்று விட்டிருக்கிறான். அவன் கருணையே நம்மைக் கொள்ளை கொண்டு அவனை வணங்கச் செய்கிறது. 'அவனிட்டபடி.' என்று வணங்காத மூர்க்கருக்கு அவன் சொல்லுவது: 'சரி, அப்படியே போ. என் ஞாயிறு உனக்கும் வெயில் தரும். என் வானம் உனக்கும் மழை தரும். உன் இஷ்டப்படி போ.' இவ்வாறு விட்டிருக்கிறான். கருணாமூர்த்தியான கடவுளை இல்லை என்பார், இல்லை என்றே சொல்லிப் போகட்டும். அவன் உண்டு என்று நம்பும் கோடிக் கணக்கான அறிஞர்களில் நான் ஒருவன். அவனை வணங்குவதும் அவனைத் துதிப்பதுமே என் ஆனந்தம்.

*யங் இந்தியா 21—1—26*

# வங்க இலக்கிய மகாநாடு

"சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந் திங்கு சேர்ப்பீர்" என்றார் பாரதியார். அவர் வாக்கை வங்காளிகள் நிறைவேற்றி விட்டனர். வங்காளத்திலிருந்து சென்னைக்கு வந்து இலக்கிய மகாநாடு நடத்தி வெற்றி பெற்றனர்.

அகில இந்திய வங்காளி இலக்கிய மகாநாடு டிஸம்பர் 31, ஜனவரி, 1, 2 ஆகிய தேதிகளில் சென்னையில் கோலாகலமாக நடைபெற்றது.

மூன்று தினங்களும் அகில இந்தியாவிலும் இருந்து பல அறிஞர்கள் மகாநாட்டில் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினர். இந்த இலக்கிய மகாநாட்டில் வங்காளம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளிலும் உள்ள இலக்கிய வளங்களைப் பற்றிய விரிவான சர்ச்சைகள் இடம் பெற்றன.

மகாநாட்டை யொட்டி, கண்காட்சியும், கலைக் காட்சியும், குழந்தைப் பகுதியும் ஏற்பாடு செய்திருந்தனர்.

கலை நிகழ்ச்சிகளில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, ஸ்ரீ பங்கஜ்மல்லிக், ஸ்ரீ திலீப்குமார், ஸ்ரீ சமனிசங்கர சாஸ்திரி, ஸ்ரீ சுகேந்துகோஸ்வாமி ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

இலக்கிய மகாநாட்டில் கவர்னர் ஸ்ரீ பிரகாசா, ராஜாஜி, ஆந்திர முதன் மந்திரி ஸ்ரீ கோபால் ரெட்டி, ஸ்ரீ பி. எம். தாஸ், ஸ்ரீ ராய்சௌத்ரி, ஸ்ரீ ராஜமன்னார், ஸ்ரீ பி. முகர்ஜி, கனம் பக்தவத்ஸலம், கனம் சி. சுப்பிரமணியம், ராஜா முத்தைய செட்டியார், தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், ஸ்ரீ தேவன், ஸ்ரீ தேபேஷ்தாஸ், ஸ்ரீ அமல் கோஷ் ஆகிய இன்னும் பல அறிஞர்களும் பங்கு பற்றி மகாநாட்டை அமோகமாக நடத்தினார்கள்.

மகாநாட்டு நிகழ்ச்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் உள்ள படங்களில் காணலாம்.

1. 2. மகாநாட்டு நிர்வாகிகள், ராஜாஜி ஸ்ரீ கோபால் ரெட்டி கவர்னர் ஸ்ரீபிரகாசா ஆகியவர்களை வரவேற்கின்றனர். 3. ராஜாஜி பேசுகிறார். அவருக்கு அருகில் அமர்ந்திருப்பவர்கள் ஸ்ரீ தேபேஷ் தாஸும், ஸ்ரீ ராய் சௌத்திரியும். 4. ஸ்ரீ பங்கஜ்மல்லிக் பாடிக் கொண்டிருக்கிறார்.





# வட இந்திய யாத்திரை - 24

பெப்சு ராஜ்யத்தின் தலைநகரமான பாட்டியாலாவுக்குச் சென்ற ஜூன் மாதம் இருபத்து மூன்றாம் தேதி சென்றோம். தற்சமயம் பெப்சு ராஜ்யத்தின் முதன் மந்திரியாக இருக்கும் ஸ்ரீ விருஷபான் தம்முடைய ராஜ்யத்துக்கு விஜயம் செய்து சிறப்பிக்கும்படி அகில இந்தியப் பத்திரிகையாளர்களை அழைத்திருந்தார். அவர் அழைப்பை மறுக்க முடியாமல் ஏற்றுக் கொண்டுதான் நாங்கள் பாட்டியாலாவுக்கு விஜயம் செய்தோம்.

பஞ்சாபின் தலைநகரமான சண்டிகர் நகரிலிருந்து பாட்டியாலாவுக்கு வரும் போது நாங்கள் இதுவரையில் யாத்திரையில் அனுபவிக்காத பல விசேஷ அநுபவங்களைப் பெற்றோம். ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குச் செல்வதற்கு வசதியான முதல் வகுப்புப் பெட்டி ஒன்றைப் பத்திரிகையாளர் கோஷ்டிக்காக இந்திய சர்க்கார் ஏற்பாடு செய்து வைத்திருந்தனர். அந்தப் பெட்டியில் சௌகர்யமாக ஏறிக் கொண்டு சுகமாகப் பிரயாணம் செய்து வந்தோம். ஆனால் சண்டிகருக்கு அந்த முதல் வகுப்புப் பெட்டி வரவில்லை. அதற்காகப் பிரயாணத்தை நிறுத்த முடியுமா? பிரயாணிகளுடன் பிரயாணிகளாகப் பிரயாணம் செய்வது என்று தீர்மானம் செய்தோம்.

பிரயாணிகளுடன் பிரயாணிகளாகப் பிரயாணம் செய்வது என்று தீர்மானம் பண்ணியது என்னவோ சுலபம்தான்; அதைக் காரியத்தில் நிறைவேற்றுவது அவ்வளவு சுலபமாக இல்லை. இரவெல்லாம் கண் விழித்திருக்கவும், ஏராளமான பெட்டி படுக்கைகளுடன் ஒரு பிளாட்பாரத்திலிருந்து இன்னொரு பிளாட்பாரத்துக்கு ஓடவும், புளி மூட்டையைப் போல ரயில் பெட்டிகளில் அடைபட்டு அவதிப் படவும், பதினாயிரக் கணக்கான மூட்டைப் பூச்சிகளால் கடிக்கப்படவும், ஸ்டேஷன் மாஸ்டர், டிரைவர், கார்டு, டிக்கட் பரிசோதகர், போர்ட்டர்கள் எல்லாருடனும் யுத்தம் செய்யவும், சகோதரப் பிரயாணிகளுடன் குஸ்தி போடவும் வேண்டியதாகி விட்டது. அப்பப்பா! அதை இப்பொழுது நினைத்தால் கூடப் பயங்கரமாக இருக்கிறது.





இந்த இடத்தில் நமது புகழ்பெற்ற ரயில்வே நிர்வாகத்தின் அழகைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. தேசத்தில் ரயில் வண்டிகள் தண்டவாளத்தின் மேல் ஓடிக்கொண்டிருக்கின்றன. பிரயாணிகள் தங்கள் அவசர வேலைகள்

# பாட்டியாலா நகரம்



நிமித்தம் வேறு வழியின்றி ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருக்கிறார்கள். அதன்மூலம் கோடிக்கணக்கான ரூபாய்கள் சர்க்காருக்குக் கிடைத்து வருகிறது. அவ்வளவுதான்! உண்மையில் பிரயாணிகளுக்கு வேண்டிய சௌகரியங்கள் கவனிக்கப்படவே இல்லை என்பதை அன்று நாங்கள் சண்டிகரிலிருந்து பாட்டியாலாவுக்குப் போய்ச் சேருவதற்குள் நன்றாகப் புரிந்து கொண்டோம்.

இந்திய சர்க்காரின் விசேஷ அழைப்பைப் பெற்று அகில இந்தியப் பத்திரிகையாளர்கள் வட இந்தியாவில் பிரயாணம் செய்தார்கள். பத்திரிகையாளருக்கு என்று பிரத்தியேகமாகப் பிரயாணத் திட்டம் ஆறு மாதங்களாகப் போடப்பட்டது. அந்தப் பிரயாணத் திட்டத்தை முன் கூட்டியே எல்லா ஸ்டேஷன் மாஸ்டர்களுக்கும் அது சம்பந்தப்பட்ட முக்கிய அதிகாரிகளுக்கும் தெரிவிக்கப்பட்டது. பத்திரிகையாளர்கள் கண்ணில் நிர்வாக ஊழல்கள் படக்கூடாது என்பதற்காக எவ்வளவு முன் ஏற்பாடுகளுடன் திட்டங்கள் போட்டுச் செய்யலாமோ அவ்வளவையும் அற்புதமான முறையில் செய்திருந்தார்கள். இவ்வளவு ஏற்பாடுகள் செய்திருந்தும் சண்டிகருக்குப் பத்திரிகையாளரின் பிரயாணப் பெட்டி வந்து சேரவில்லை. எங்களுடன் வந்திருந்த இந்திய சர்க்காரின் பிரதிநிதி அது சம்பந்தமாகச் சண்டிகர் ஸ்டேஷன் மாஸ்டரைப் போய் விசாரித்த போது அவரிடமிருந்து நல்லமுறையிலே பதில் கிடைக்கவில்லை. நாம் யார் என்பதையும் தமக்குச் சர்க்கார் அளித்திருக்கும் விசேஷ அதிகார பத்திரத்தை அந்த ஸ்டேஷன் மாஸ்டரிடம் எடுத்துக் காட்டிய பிறகு ஸ்டேஷன் மாஸ்டர் அலறிப் புடைத்துக் கொண்டு பழைய பைல்களைத் தேடினர். தம்முடைய தவற்றை உணர்ந்து வருந்தினர். என்ன வருந்தி என்ன பயன்! பத்

பகீரதன்

மணியம்

திரிகையாளர் பிரயாணம் செய்யும் பெட்டியை அங்கு கொண்டு வர முடியுமா! விசேஷமான அதிகாரம் பெற்ற சர்க்கார் அதிகாரிகளே ரயில்வே அதிகாரிகளிடம் ஒரு விஷயத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுவதற்கு இந்தப் பாடுபட்டால் சாதாரண மக்கள், அதிலும் அதிகமான எழுத்து அறிவும் உலக அனுபவமும் இல்லாத கிராமத்து மக்கள் எந்தப் பாடுபட வேண்டும் என்பதைக் கூற வேண்டியதில்லை என்று நினைக்கிறேன்.

பத்திரிகையாளர் கோஷ்டியில் பலருக்குச் சண்டிகரிலிருந்து பாட்டியாலாவுக்குப் போவதற்குள் ஏற்பட்ட அனுபவத்தில் மேற்கொண்டு யாத்திரையைத் தொடர வேண்டும் என்ற ஆசையே குறைந்து போய் விட்டது.

எப்படியோ சண்டிகரிலிருந்து பாட்டியாலாவுக்கு ரயில் பிரயாணத்தில் எத்தனை விதமான கஷ்டங்கள் உண்டோ அத்தனையும் அனுபவித்துக் கொண்டு இராத் தூக்கம் இல்லாமல் பாட்டியாலா போய்ச் சேர்ந்தோம்.

** ** **

பாட்டியாலாவில் நாங்கள் எதிர்பார்த்ததற்கு நேர்மாறாக எல்லாம் நடைபெற்றன என்பதைச் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. அதாவது ரயில் பிரயாணத்தில் நாங்கள் அடைந்த கஷ்டம் எல்லாவற்றையும் பாட்டியாலா ரயிலடியில் கால் வைத்தவுடனேயே மறந்து விடும்படி ஆகி விட்டது. காரணம் பெப்சு சர்க்காரின் பொதுஜன உறவு அதிகாரி எங்களிடம் காட்டிய அன்பும் பண்பு நிறைந்த மரியாதையும் தான்.

பழைய பாட்டியாலா மன்னர்கள் அரமனைகளில் ஒன்று இப்போது பெப்சு ராஜ்ய சர்க்காரின் விருந்தினர் விடுதியாக இருக்கிறது. கண்ணையும் கருத்தையும் கவரும் முறையில் பிரும்மாண்டமாகக் கட்டப்பட்டிருந்த அந்த விசாலமான அரமனையில் பத்திரிகையாளர் கோஷ்டியைச் சேர்ந்த நாங்கள் தங்கினோம்.

விருந்தோம்பும் குணத்தில் சிறந்த எத்தனையோ இடங்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால் பாட்டியாலாவைப் போல் விருந்தோம்பலை நான் வேறெங்கும் பார்த்ததில்லை. எங்களைக் கவனித்துக் கொள்வதற்காக நியமித்திருந்த அதிகாரிகள் எங்களிடம் காட்டிய அன்பு தாயின் அன்பைக் காட்டிலும் சிறந்தது என்று தான் சொல்ல வேண்டும். அன்பு மிகுதியால் அந்த அதிகாரிகள் எங்களைப் படுத்திவைத்த பாடு கொஞ்ச நஞ்சமல்ல. முதலில் அரமனைக்குள் நுழைந்ததுமே "இங்கு உங்களுக்குப் பல அசௌகர்யங்கள் இருக்கும். தயவுசெய்து பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்றார்கள். பிறகு, "இந்த அரமனையில் யார் யாருக்கு எங்கே சௌகர்யமோ அங்கே இருந்து கொள்ளலாம்" என்றார்கள்.

பத்திரிகையாளர்கள் தங்கள் பெட்டி படுக்கைகளை வேலையாட்கள் சுமந்து வர சமஸ்தான மன்னர்கள்போல ஜம்மென்று நடந்து சென்று அங்கங்கே ஒரு அறையில் தங்கினார்கள். பிறகு ஒருவரை ஒருவர் தேடிப் பிடிப்பதே பகீரதப் பிரயத்தனம் ஆகிவிட்டது. அவ்வளவு பென்னம் பெரிய அரமனை அது! ஒரு மூலையில் இருந்து இரைந்து சத்தம் போட்டால்கூட இன்னொரு மூலையில் இருப்பவர்களுக்கு ஒன்றுமே கேட்காது.

இன்னும் எங்களுக்கு அங்கு ஏற்பட்ட அசௌகர்யங்களைச் சொல்லி முடியாது! அறையில் போய் உட்கார்ந்ததும் ஒரு நல்ல அலங்காரத் தொழிலாளி வந்து நல்ல அலங்காரம் செய்தார். சலவைத் தொழிலாளி வந்து அழுக்கு உடைகளை எடுத்துப் போனார். டாக்டர் வந்து உடலைப் பரிசோதித்துப் பார்த்தார். "உம்" என்று மூச்சு விட்டால் ஒரு ஆள் "என்ன வேணும்!" என்று கேட்டு எதிரில் வந்து நின்றான். இந்த உலகில்தான் இருக்கிறோமா என்று பிரமை ஏற்படும்படி இருந்தது உபசரணைகள். பத்திரிகையாளர்களில் சிலர் சமஸ்தான மன்னர்களாகவே மாறி விட்டனர்.

இந்த ஆரம்ப அசௌகரியங்களைத் தொடர்ந்து இன்னும் பல அசௌகரியங்கள் ஏற்பட்டன. அரிசிச் சாதம் வேண்டியவர்களுக்கு அரிசிச் சாதம்; கோதுமைச் சப்பாத்தி வேண்டியவர்களுக்குக் கோதுமைச் சப்பாத்தி; பழமும் பாலும் வேண்டியவர்களுக்குப் பழமும் பாலும்; காப்பி வேண்டியவர்களுக்குக் காப்பி; டீ, கோக்கோ, ஓவல்டின், இன்னும் பான வகைகளில் யார் யார் எதை எதை விரும்பினார்களோ அவர்களுக்கெல்லாம் அவரவர்கள் இஷ்டப்படி தாராளமாகக் கிடைத்தன.

இவ்வளவுடன் பத்திரிகையாளர் கோஷ்டியார் பெப்சு ராஜ்யத்துக்கு எதற்காக விஜயம் செய்தார்களோ அதற்கு வேண்டிய அசௌகர்யங்களையும் செய்து கொடுக்க அவர்கள் பின் வாங்கவில்லை. அதாவது நாங்கள் எந்தெந்த இடங்களுக்குப் போக வேண்டுமோ அந்தந்த இடங்களுக்கெல்லாம் அதற்கேற்ற வாகன வசதிகள். காட்டிலும், மேட்டிலும், கால்வாய் ஓரத்திலுமாகப் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது. அந்த இடங்களுக்குச் சௌகர்யமான 'ஜீப்' கார்கள். அந்தந்த இடங்களைப் பற்றி விவரமாகக் கூறும் பொறுப்பு வாய்ந்த உயர்தர அதிகாரிகள். நாங்கள் மேலே யாத்திரை செய்யப்போகும் இடங்களில் எல்லாம் இந்தமாதிரி அசௌகர்யங்களைச் செய்து கொடுக்கக்கூடிய பொறுப்பு வாய்ந்த சர்க்கார் அதிகாரிகள் இருக்க வேண்டும் என்று பகவானிடம் தெரிவித்துக் கொண்டோம்.

பாட்டியாலா சர்க்கார் விருந்தினர் விடுதியில் தங்கி மன்னர்கள்போல மகிழ்ச்சியுடன் காலம் கழிக்கும் பாக்கியம் பத்திரிகையாளர்களுக்குக் கிடைக்குமா! அரமனைக்குள் புகுந்த ஒரு மணி நேரத்துக்குள்ளாகவே அங்கிருந்து கிளம்ப வேண்டியதாயிற்று. ஆகவே அவசரம் அவசரமாக எல்லாக் காரியங்களையும் முடித்துக் கொண்டு கிளம்பி விட்டோம்.

பாட்டியாலாவைப் பற்றிச் சொன்னேன் அல்லவா! பாட்டியாலா நகரம் பெயர்பெற்ற நகரம்தான்! அந்த நகரைச் சுற்றிப் பார்க்க ஆரம்பித்தோம். நகரில் முதலில் நமது கவனத்தைக் கவர்வது அங்குள்ள கட்டடங்கள்தான். கம்பீரமான கட்டடங்கள். இரண்டு மாடி மூன்று மாடிகளையுடைய அழகான கட்டடங்கள். நமது பண்பாட்டுக்கு இசைந்து அமைந்த உயரிய கட்டடங்கள். அந்தக் கட்டடங்கள் எல்லாம் அரமனைகள்போல் காட்சி யளித்தன. பிறகு அந்தப் பெரிய அரமனை போன்ற

# உஸ்பெக் கலைஞர்கள்



ஒரு நாட்டுக்கும் மற்றொரு நாட்டுக்கும் நட்பை வளர்ப்பது கலைகளே என்று சொல்லுவார்கள் பெரியோர்கள். அம் முறையில் நம் நாட்டிலிருந்து பல கலைஞர்கள் கோஷ்டிகள் பிற நாடுகளுக்கும், பிற நாடுகளிலிருந்து நம் நாட்டுக்கும் வந்து போவது பாரதம் சுதந்திரமடைந்த நாளிலிருந்து ஏற்பட்டு வருகிறது. இப்பொழுது ருஷ்யாவிலுள்ள உஸ்பெக் மாகாணத்தைச் சேர்ந்த கலைஞர்கள் பாரதத்துக்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் வருகிற ஜனவரி 10ம் தேதி சென்னை அண்ணாமலை மன்றத்திலும், 11, 12ம் தேதிகளில் கலா மண்டபத்திலும் தங்கள் நாட்டு நடனங்களாலும், பாடல்களாலும் நம்மை மகிழ்விக்கப் போகிறார்கள். இந்த அரிய வாய்ப்பைப் பெருவாரியான தமிழ் மக்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற நோக்கத்துடன் வரவேற்புக் குழுவினர் இக் கலைக் காட்சிகளின் கட்டணங்களை மிகக் குறைவாகவே வைத்திருக்கிறார்கள். தமிழ் நாட்டுக் கலைஞர்களும் உஸ்பெக் கலைஞர்கள் நம் பாரதக் கலைகளின் சிறப்பைக் காணும்படி நிகழ்ச்சிகள் நடத்தப் போகிறார்கள். இக் கலை நிகழ்ச்சிகள் இரு நாட்டினுடைய நட்புறவை வளர்ப்பதில் பெரிதும் துணைபுரியும் என்று நம்புகிறோம். மேலே உஸ்பெக் கலைஞர்களின் நாட்டியக் காட்சிகளைக் காணலாம்.

---

கட்டடங்களுக்கு இடையில் அமைந்துள்ள அழகான சாலைகளின் காட்சி நம் கவனத்தைக் கவ்வுகிறது. அனேகமாக எல்லாச் சாலைகளிலும் இருபுறமும் வரிசை வரிசையாக மரங்கள் இருக்கின்றன. அதிசயமாகக் காட்சி அளிக்கும் மரங்கள், செக்கச்செவேல் என்று மஞ்சள் வர்ணம் கலந்த தங்கமயமான பூக்கள் குலுங்குவது. சில மரங்களின் இலைகளே மலர்களைப் போல் மனத்துக்கு மகிழ்வளிக்கக் கூடியதாக இருக்கின்றன. அந்த மரங்களும், சாலைகளும், அதையொட்டிய கட்டடங்களும் பாட்டியாலாவுக்குப் புது அழகையும், சோபையும் அளிக்கின்றன. சமஸ்தான மன்னர்களின் தலை நகரம் என்பதற்கு வேண்டிய எல்லா லட்சணங்களும் மிளிர்கின்றன.

பாட்டியாலா சாலைகள் எல்லாமே அழகுடன் காட்சி தருகின்றன. ஆனாலும் நாங்கள் தங்கியிருந்த அரமனையை ஒட்டியுள்ள சாலைகளின் அழகே, அழகு! அதன் அழகைப்பற்றி என்னவென்று சொல்வது! "சாலையாவது சாலை! அழகாவது அழகு!" என்று சொல்லிவிட்டு ஆச்சரியத்தால் வாயை மூடிக்கொள்ள வேண்டியதுதான். அதி காலையில் ஒரு அழகு, நடுப் பகலில் ஒரு அழகு, இரவு வேளைகளில் இன்னொருவித அழகு. இராத்திரியில் மேற்படி சாலையில் இரு புறமும் நேர் நேராகச் சித்திர விசித்திரங்களுடன் கூடிய தீபஸ்தம்பங்களில் மின்சார விளக்குகள் ஜகஜ்ஜோதியாய்ப் பிரகாசிக்கின்றன. மொத்தத்தில் இந்தச் சாலைகளைப் பார்க்கும்போது "இவைகள் அல்லவோ சாலைகள்! சாலைகள் இருந்தால் இப்படியல்லவோ இருக்க வேண்டும்!" என்று வியக்கத் தோன்றுகிறது. பாட்டியாலா நகரத்தில் நிர்மாணித்திருக்கும் சாலைகளைப் போல் பாரத தேசத்தில் உள்ள ஒவ்வொரு நகர சபையின் சாலைகளும் எப்பொழுது மாறுமோ என்று ஏக்கம் உண்டாகிறது.

அடுத்தபடியாகச் சாலைகளும் வீதிகளும் எவ்வளவு சுத்தமாக வைக்கப்பட்டிருக்கின்றன என்பது நமது கவனத்துக்கு வராமல் இராது. "இது என்ன பட்டணம்! ஒரு குப்பை கூளம் புழுதி இல்லாமல்!" என்று ஏமாற்றமடைவோம். அந்தச் சாலைகளில் காரில் போனால், காரில் போவது போலவே தோன்றவில்லை. விமானத்தில் பறப்பது போலவும், படகில் மிதப்பதுபோலவும் தான் தோன்றுகிறது. நமது சென்னை நகர் சாலைகளில் காரில் போய் விட்டுத் திரும்பினால் அன்று பூராவும் காரில் போவது போலவே இருக்கும். இரவில் படுக்கையில்கூடத் தூக்கித் தூக்கிப் போடும். பார்ப்பதற்குச் சிமெண்ட் ரோடும், தார் போட்ட சாலைகளுமாகத்தான் காட்சி அளிக்கும். ஆனால் மூக்கை மூடிக் கொள்ளாமல் சாலையில் போக முடியாது. அதிலும் பஸ்ஸில் பிரயாணம் செய்து விட்டாலோ கேட்க வேண்டியதில்லை. ஒரு பஸ் 'ஸ்டாப்'பிலிருந்து இன்னொரு பஸ் ஸ்டாப்புக்குப் போய் நின்றவுடன் பஸ் முழுவதையும் புழுதி மூடிவிடும். இந்த அதிசயமான அனுபவங்களை எல்லாம் பாட்டியாலா வீதிகளில்

காண முடிவதில்லை. என்ன நகரம் வேண்டிக் கிடக்கிறது போங்கள்!

பாட்டியாலா பஞ்சாபை ஒட்டித்தான் இருக்கிறது. பஞ்சாபில் நாங்கள் பார்த்த சீக்கிஸ்தான் கிளர்ச்சி சுவர் ஒட்டிகளைப் பார்க்க முடிகிறதா! அங்கு கேட்ட சீக்கிஸ்தான் கோஷங்களையும் கேட்க முடிகிறதா! என்று கவனிக்கத் தொடங்கினோம்.

பஞ்சாபில் நாங்கள் கேட்ட "சீக்கிஸ்தான் கோஷ"த்தைப் பாட்டியாலாவில் கேட்கவில்லை. காரணம் பெப்சுவில் சீக்கிஸ்தான் கோஷம் போடத் தடை கிடையாது. அதனால் சீக்கியர்கள் சீக்கிஸ்தான் கோஷமிடும் உரிமை கோரிச் சத்தியாக்கிரகம் செய்ய வில்லை. என்றாலும் அமிருதசரஸில் நடைபெற்ற சீக்கிஸ்தான் கிளர்ச்சிக்குப் பெப்சுவில் இருந்து எண்ணற்ற சீக்கியத் தொண்டர்கள் சென்று கொண்டிருந்ததைப் பார்த்தோம்.

இந்த இயக்கத்தில் ஏன் இவ்வளவு உற்சாகமாகச் சீக்கியர்கள் ஈடுபட்டு வருகிறார்கள்!

சமஸ்தான மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் சீக்கியர்கள் நல்ல செல்வாக்குடன் இருந்தார்கள். இப்பொழுது அவ்வாறு சாதி உணர்ச்சியைக் கிளப்பிக் கொண்டு செல்வாக்குப் பெற முடியவில்லை. அதனால் ஏராளமாகப் பொருளை வாரி வழங்கிச் சீக்கிஸ்தான் கிளர்ச்சியைக் கிளப்பி விட்டு, சீக்கியர்கள் தாங்கள் இழந்த செல்வாக்கை மீண்டும் பெறுவதற்குக் குறுக்கு வழிகளில் இறங்கி யிருக்கின்றனர்.

இந்தத் தகராறு எல்லாம் தீர்ந்து போக வேண்டுமானாலும் "மகா பஞ்சாப்"தான் சரியான மார்க்கம் என்று பெப்சு முதன்மந்திரி விருஷபான் அபிப்பிராயப்படுகிறார்.

மந்திரி சபையில் உள்ள இதர மந்திரிகள் பெரும்பாலோர் சீக்கியர்களும், சீக்கிய அநுதாபிகளுமாக இருப்பதால் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனாலும் இன்று இல்லாவிட்டாலும் ஒருநாள் மகாபஞ்சாப் வந்துதான் தீரும். சீக்கிஸ்தான் போன்ற கிளர்ச்சிகள் அழியத்தான் போகின்றன.

பாட்டியாலாவுக்கு நாம் வந்தது அங்குள்ள சர்க்கார் என்னென்ன முன்னேற்றங்களைச் செய்து வருகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்காகத்தான். அவர்கள் செய்து வரும் சாதனைகளைப் பார்ப்பதற்கு முன்னால் பெப்சு ராஜ்ய சர்க்காரைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்வது நல்லதல்லவா!

பெப்சு ராஜ்யத்தின் மந்திரி சபையின் நிலைமையைப் பற்றிச் சென்ற அத்தியாயத்தில் நேயர்கள் தெரிந்து கொண்டிருப்பார்கள். பெப்சு ராஜ்யத்தின் பொருளாதாரம் எப்படி இருக்கிறது என்பதைப் பார்ப்போம்.

பெப்சு ராஜ்யத்தின் வருஷ வருமானம் ஒன்றரைக் கோடி. செலவு ஆறு கோடி. ஐம்பத்தைந்து ஐம்பத்தாறு வருஷ பட்ஜெட்டில் எட்டேகால் கோடி ரூபாய் வரவு எதிர்பார்க்கிறார்கள். செலவோ பத்தேகால் கோடிக்கு உயர்ந்து இருக்கிறது. வரவுக்கு மேல் செலவு செய்து மத்திய சர்க்கார் உதவியையும் பெற்று நாட்டைச் சீர்திருத்தி நிலையான சர்க்கார் ஏற்படுத்த அரும்பாடு பட்டு வருகிறார்கள்.

சர்க்கார் வருமானத்தில் பெரும்பகுதி சுங்க வரி, நில வரி மூலமாகத்தான் கிடைக்கிறது.

சீக்கியர்கள் எல்லாரும் தாராளமாகக் குடிக்கிறார்கள். பெப்சுவில் மதுவிலக்கு இல்லை. இருந்தாலும் கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்கள் ஏராளம். கள்ளச்சாராயம் காய்ச்சுபவர்களுக்கு மதுவிலக்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒன்றுதான் போலிருக்கிறது.

பெப்சுவில் கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்களின் எண்ணிக்கையைக் கேள்விப்பட்டவுடன் எனக்குத் தமிழ் நாட்டின் நிலைதான் கண் முன் தோன்றியது. தமிழ்நாட்டில் சிலர் "மதுவிலக்கு வந்ததால்தான் கள்ளச் சாராயம் காய்ச்சுகிறார்கள்" என்று சொல்லுகிறார்களே அவர்கள் அறியாமையை எண்ணிச் சிரிக்கத்தான் தோன்றியது. திருடுகிறவர்கள் எப்பொழுதும் திருடிக் கொண்டுதான் இருப்பார்கள். அவர்களைச் சீர்திருத்த முயல வேண்டியதுதான் அறிஞர்கள் கடமையே ஒழிய அதற்காகப் போலீஸ் ஸ்டேஷனையே எடுத்துவிட வேண்டும் என்று சொல்லுவது நியாயமா! அது வடிகட்டின அறியாமை அல்லவா!

** ** **

பெப்சுவின் சர்க்கார் செலவுகளைப் பார்த்தால் பழைய சமஸ்தான மன்னர்கள் செலவு போல்தான் இருக்கிறது. சர்க்கார் சிப்பந்திகளுக்கு மொத்த வருமானத்தில் ஐம்பத்து நாலு பங்கு சம்பளமாகவே கொடுத்து வருகிறார்கள். இதற்கு அவர்கள் எந்தக் காரணம் சொன்னாலும் நிர்வாகச்செலவு பாதிக்கு மேலே இருப்பது அநியாயம்தான். பழைய சமஸ்தான

தர்பார்தான் இதற்குக் காரணமாயிருக்கலாம். இந்தியாவிலேயே அதிகச் சம்பளம் பெறும் போலீஸ்காரர்கள் பெப்சுவில்தான் இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். ஒரு போலீஸ்காரருக்கு எழுபத்தைந்து ரூபாய் சம்பளம்.

காரணம், பெப்சுவில் சட்டத்தை நிலைநாட்டுவதுதான் முக்கியப் பிரச்னையாக இருக்கிறது. அதற்காக அவர்கள் போலீஸைப் பலம்வாய்ந்ததாகச் செய்து வருகிறார்கள். என்ன பலம் பொருந்தியவையாகப் போலீஸை மாற்றி அமைத்தாலும் அங்குள்ள கொள்ளைக்காரர்களை அழிப்பதற்கு வேண்டிய முழு முயற்சியும் இன்னும் சரியாக எடுத்துக் கொள்ளப்படவில்லை என்பதை அங்குள்ள அதிகாரிகள் சொல்லுவதிலிருந்தே தெரிந்து கொள்ள முடிகிறது. "கொள்ளைக்காரர்களின் கூட்டத்தைப் பிடித்து விட்டோம். அவர்களைத் தனித்தனியாகப் பிரித்து விட்டோம். அவர்கள் பலத்தைச் சிதைத்து விட்டோம். வெகு விரைவில் அவர்களை அடியோடு ஒழித்து விடுவோம்" என்று சொல்கிறார் பெப்சு முதன் மந்திரி விருஷபான். அவர் முயற்சி வெற்றி பெற்றால் தேசத்தின் எதிர்காலம் மிகுந்த நம்பிக்கை யளிக்கக் கூடியதாயிருக்கும் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

கொள்ளைக்காரர்களின் கொடுமைகளைப் பற்றி நேயர்களுக்கு அதிகம் சொல்ல வேண்டியதில்லை. கொள்ளைக்காரன் மான்சிங்கைப் போல் பிரபலமான தேவிசிங் என்ற கொள்ளைக்காரன் இன்னும் தன் கூட்டத்துடன் அங்கு நடமாடிக் கொண்டுதான் இருக்கிறான். அவனைப் பிடிப்பதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்து வருகிறார்கள் என்று அறிந்தோம். பொதுவாக, பெப்சுவிலும் அதைச் சுற்றியுள்ள இடங்களிலும் கொள்ளைக்காரர்கள் சுதந்திரமாக நடமாடுவதற்குக் காரணம் சர்க்காரிலேயே உயர்ந்த பதவியில் உள்ள சிலரின் உதவியால்தான் என்று பலரும் அபிப்பிராயப்படுகிறார்கள். இந்த அவச் சொல்லைப் போக்கச் சர்க்கார் பாடுபட்டு வருகிறது.

பெப்சுவில் விவசாயம்தான் முக்கியமான தொழில். எண்பது சதவிகித மக்கள் விவசாயிகள்தான். கோதுமை, கடலை, சோளம் ஆகிய தானியங்களை அவர்கள் பயிர் செய்கிறார்கள். பெப்சுவில் மட்டும் சுமார் எட்டு லட்சம் ஏக்கர் நிலம்,விவசாயத்துக்கு உபயோகமான நிலம் திருத்தப்படாமல் இருக்கிறது. அதில் இரண்டு லட்சம் ஏக்கரில் விவசாயம் செய்யலாம். ஆனால் மக்கள் கொள்ளைக்காரர்களின் பயம் காரணமாக விவசாயத்தில் அதிக கவனம் செலுத்தாமல் இருக்கிறார்கள். கிராமங்களில் நிம்மதியாக வாழ முடியாமல் கிராமங்களைக் காலி செய்து விட்டு நகர்ப்புறத்தில் வந்து குடியேறி யிருக்கிறார்கள்.

** ** **

பெப்சு ராஜ்யத்தின் கிராமப் பகுதிகளில் எல்லாரும் ஒரு விஷயத்தைப் பற்றி இடைவிடாமல் பேசிக் கொண்டிருந்தார்கள். இது நாடு சுதந்திரம் பெற்ற சமயத்தில் 1947–48ம் ஆண்டுகளில் நடைபெற்ற சம்பவங்கள்.

அந்த ராஜ்யம் பாகிஸ்தான் எல்லைக்கு வெகு அருகில் உள்ள இடம். எல்லைப்புறத்தைச் சேர்ந்த கிராமங்களில் சுதந்திரம் வந்தவுடன்

திடீரென்று மக்கள் ஊரை விட்டு ஓடிப் போனார்களாம். அவர்கள் வீடுகள் இடிக்கப்பட்டன. சில வீடுகள் அஸ்திவாரம் வரையில் இடிக்கப்பட்டுத் தரைமட்டமாகி விட்டன. மேற்படி வீடுகளில் இருந்த சாமான்கள் எல்லாம் சூறையாடப் பட்டன. அவர்களுடைய நிலங்களில் இருந்த கோதுமைகள் எல்லாம் அறுவடை செய்யப்பட்டன. கோதுமை போன இடம் தெரியவில்லை.

முதன் முதலில் ஓடிய குடித்தனக்காரர் தம் குடும்பத்தை ஊரில் விட்டு விட்டுத் தாம் மட்டும் ஓடினார். அவர் வீட்டுப் பெண்மணிகள் மகா பயங்கரமான கொடுமைகளுக்கு உள்ளானார்கள் என்று வதந்தி.

கொஞ்ச நாட்கள் வரையில் இந்த அக்கிரமங்களைக் கேட்பாரே இல்லாமல் இருந்ததாம்.

இதற்குக் காரணம் பலவிதமாகச் சொல்லிக் கொள்கிறார்கள். "இந்து முஸ்லீம் தகராறு" என்கிறார்கள் சிலர். "கொள்ளைக்காரர்களின் அட்டூழியம்" என்று கூறுகிறார்கள் வேறு சிலர். "ஏது! தடியை எடுத்தவன் எல்லாம் தண்டக்காரன் என்று ஆகி விட்டது; அக்கிரமத்துக்குத்தான் காலம் போயிருக்கிறது" என்று சொல்லும் அளவுக்கு நிலைமை விபரீதமாக வளர்ந்து விட்டதாம்.

அந்த நிலைமை அடியோடு மாறி விட்டது. அதை மாற்றி விட்டார்கள் பெப்சு சர்க்கார்.

இந்தச் சம்பவங்களைக் கேட்டதிலிருந்து ஒரு விஷயத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது. இது போன்ற அக்கிரமங்கள் தேசத்தில் எந்தப் பகுதியில் எந்த உருவத்தில் நடந்தாலும் அதைத் தடுப்பதற்கு மக்கள் முயற்சி செய்ய வேண்டும். "நம்மால் என்ன செய்ய முடியும்!" "நடக்கிறது நடந்து விட்டுப் போகிறது" "சர்க்கார் இருக்கவே இருக்கிறது" என்று இருந்து விடக் கூடாது. இத்தகைய மனோபாவம் தேசத்தில் வளர்ந்தால் சுதந்திர இந்தியாவை வளமுள்ள நாடாக மாற்ற முடியுமா! அக்கிரமங்கள் நடந்து வரும் பிரதேசத்தில் படித்தவர்கள், வக்கீல்கள், பெரிய மனிதர்கள் என்று இருப்பவர்கள் உண்மையான விவரங்களைச் சேகரித்துப் பத்திரிகைகளில் பகிரங்கப் படுத்த வேண்டும். சர்க்காருக்குத் தெரிவித்து ஆவன செய்ய வேண்டும்.

இவ்வாறெல்லாம் பெப்சுவில் பலர் செய்து தான் இப்பொழுது கிராமங்களில் அமைதியை நிலைநாட்டியிருக்கிறார்கள். தேசத்தின் மீது பற்றுள்ள பல பெரியார்களின் தன்னலமற்ற தொண்டு நல்ல பலன் அளித்திருக்கிறது. அங்குள்ள மக்கள் பயத்தைப் போக்குவதற்கும், அவர்கள் உற்சாகத்துடன் கிராமங்களில் குடியேறி விவசாயத்தில் ஈடுபடுவதற்கும், எட்டு லட்சம் ஏக்கர் நிலத்தைத் திருத்துவதற்கும் பெப்சு சர்க்கார் அரும்பாடு பட்டு வருகிறார்கள். பக்ரா நங்கல் சாதனையில் இருபது பங்குக்கு அதிகமாகப் பெப்சு சர்க்கார்தான் பயன் அடையப் போகிறார்கள்.

நம் பக்கங்களில் காணாத ஒரு அதிசயக் காட்சியை அங்குள்ள சில கிராமங்களில் காண முடிகிறது. அதாவது நிலங்களில் ஒட்டகம் பூட்டி ஏர் உழும் விந்தையைப் பார்க்க முடிகிறது. இந்தக் காட்சியை இனி ஒவ்வொரு கிராமத்திலும் காணும் வாய்ப்பைச் சர்க்கார் ஏற்படுத்தி வருகிறார்கள்.

இன்னும் ஒரு அதிசயம். தாயின் அன்பைப் பெற முடியாத குழந்தைகள் பெப்சு கிராமத்தில் இருக்கும் குழந்தைகள். காரணம் அங்குள்ள சூழ்நிலை அப்படி இருந்து வந்திருக்கிறது. சதா பயமும் திகிலும் சூழ்ந்து தாய்மார்கள் குழந்தையிடம் அன்பு காண்பிக்கக்கூட முடியாத நிலையில் இருந்து வந்தார்கள். இப்பொழுது நிலைமை மாறிவிட்டது. இந்த நாட்டின் எதிர்காலச் செல்வங்களாகிய குழந்தைகளைப் பெருமையோடு வளர்க்கப் போகிறார்கள் தாய்மார்கள். மக்கள் குதூகலத்துடன் வாழ்ந்து வரப் போகிறார்கள்.

இன்னும் ஐந்து வருஷங்களுக்குள் பெப்சு இந்தியாவில் உள்ள வளமான சமஸ்தானங்களில் ஒன்றாக மாறப் போகிறது என்பதில் சந்தேகமில்லை. அதற்கு வேண்டிய ஆக்க வேலைகளில் பெப்சு சர்க்கார் ஈடுபட்டு உழைத்து வருகின்றனர். பெப்சுவின் அரசியலில் எத்தனையோ குறைபாடுகள் இருந்தாலும் ஆக்க வேலையில் அவர்கள் ஒருமுகமாக ஈடுபட்டு உழைத்து வரும் அற்புதத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

பெப்சுவில் காட்டையழித்து நிலம் திருத்தும் அற்புத சாதனைகளையும், காட்டையழித்துத் திருத்திய நிலங்களை உடனே விவசாயத்துக்குப் பயன்படும்படி ஏற்பாடு செய்து வரும் பிரமிக்க வைக்கும் விந்தைகளையும் அடுத்த இதழில் காணலாம். (தொடரும்)



மேலே: சென்னை ராஜ பவனத்தில் சீன உப ஜனாதிபதிக்குக் கவர்னர் ஸ்ரீபிரகாசா அளித்த சிற்றுண்டி விருந்தில் தலைவர் ராஜாஜியும், பாரதத்தின் உப ஜனாதிபதி ஸ்ரீ ராதாகிருஷ்ணனும் கலந்து கொண்டனர். நடுவில்: இந்திய சோவியத் கலாசாரக் கழகத்தின் சார்பில் திரு டி. கே. ஷண்முகம் ஸ்ரீமதி கங் சிங் லிங்குக்கு மலர் மாலை சூட்டி வரவேற்கிறார். கீழே: ராஜ பவனத்தில் நடைபெற்ற விருந்தில் சீன உபஜனாதிபதி பேசுகிறார். கூட்டத்தில் தலைவர் ராஜாஜி, மத்தியபிரதேச கவர்னர் ஸ்ரீ பட்டாபி சீதாராமய்யா, மேயர் திரு ராமனதய்யர் முதலியோர் அமர்ந்திருப்பதைக் காணலாம்.

## சென்னையில்
## சீன உப ஜனாதிபதி

சீனக் குடியரசின் உப ஜனாதிபதி ஸ்ரீமதி கங் சிங் லிங் சென்ற வாரம் சென்னை நகருக்கு விஜயம் செய்தார். விமான நிலையத்தில் சென்னை கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்களும், தொழிலாளர்களும் பொது மக்களும் சென்று ஸ்ரீமதி கங் சிங் லிங் அவர்களுக்குக் குதூகலமான வரவேற்பு அளித்தனர்.

சென்னையில் பல்வேறு அலுவல்களில் ஸ்ரீமதி கங் சிங் லிங் ஈடுபட்டிருந்தார். பல பொதுநல ஸ்தாபனங்களுக்குச் சென்று அவைகளின் சேவைகளைப் பாராட்டினார். அடையாற்றில் உள்ள அவ்வை இல்லத்துக்கு ஆயிரம் ரூபாய் நன்கொடை வழங்கினார்.

ஸ்ரீமதி கங் சிங் லிங் பங்கெடுத்துக் கொண்ட சில நிகழ்ச்சிகளைப் படத்தில் காணலாம்.






நெருக்கடியான பட்டணத்து ரோடுகளிலும்
காட்டுப்புறத்துக் கரடுமுரடான பாதையிலும்

# வக்கீல் வரதராஜன்



கோமதி ஸ்வாமிநாதன்

சோர்வும் களைப்பும் நிறைந்த முகத் தோற்றத்துடன் நடராஜன் வீட்டுக்குள் நுழைந்து முற்றத்தில் கிடந்த கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்தான்.

அவனைப் பார்த்ததும் செல்லம்மாள், "ராஜா! இன்றைக்கு என்னடா சொன்னாங்க!" என்று கேட்டாள்; குரலில் ஆவல் தொனிக்க.

"என்னத்தைச் சொல்லுவாங்க! பத்து நாட்களாக நான் நடந்ததுதான் மிச்சம்! இந்தா அம்மா! நம்மைப் போன்ற பாட்டாளிகள் எல்லாம் தலைதூக்கணும்னு ஏழை பணக்காரங்க என்கிற வித்தியாசமே இருக்கக் கூடாது. இந்தப் பண்ணை யாருடைய பணக் கொழுப்புக்குப் பயந்து எனக்குத் தர வேண்டிய வேலையை அவர் சிபாரிசு பண்ணிய வேறு ஒருத்தருக்குக் கொடுத்துட்டாங்க!" நடராஜன் சாதாரணக் குரலில் பேசவில்லை; பிரசங்க பாணியில் ஆவேசமாகப் பேசினான்.

மகனின் இத்தகைய பிரசங்கத்தைக் கேட்டுக் கேட்டுச் செல்லம்மாள் காதுகள் மரத்திருந்தன. 'நீ இப்படிக் கூச்சலிட்டுத் திரியும்வரை உனக்கு வேலை வெட்டி ஒன்றும் கிடைக்காது' என்று சொல்லத் துடித்தாள். ஆனால் நொந்து போயிருக்கும் அவன் உள்ளத்தை மீண்டும் புண்படுத்த விரும்பவில்லை.

"ராஜா! இப்படியே காலம் போகாது. வக்கீல் வரதராஜன் உன்னைப் போன்ற எத்தனையோ பிள்ளைகளுக்கு வாழ வழி வகுத்துக் கொடுத்துக் கை தூக்கி விட்டிருக்கிறார் என்று சொல்கிறாங்க. அவரிடம் போய்......"

நாராயணன் பெயரைச் சொன்ன பிரஹ்லாதனைக் கண்டு சீறி எழுந்த ஹிரண்யன்போல் கட்டிலிலிருந்து எழுந்து நின்றான் நடராஜன். அவன் முகம் ஜிவு ஜிவு என்று சிவந்தது. வெறிச் சிரிப்பு ஒன்று அவன் உதடுகளிலிருந்து வெளிப்பட்டது. "வக்கீல் வரதராஜன்......! அம்மா! அவன் பணக்காரன்! முதலாளி வர்க்கத்தின் முக்கியப் பிரதிநிதி. பாட்டாளிகளின் பரம வைரி! ஏழைகளின் எதிரி! அவனிடம் போயா என்னைச் சரணடையச் சொல்கிறாய்! என்னை அப்படி மானமில்லாதவனென்றா நீ நினைத்து விட்டாய்! ஒரு முழக் கயிறு, ஒரு துளி விஷம், ஓடிவரும் ரயில், பட்டினிப் பிசாசு இவைகளை அரவணைக்க நான் தயார்! ஆனால் அந்தத் திமிர் பிடித்த, பண மமதை கொண்ட பாதகனிடம் போய் நான் பல்லைக் காட்டுவேனென்று நீ கனவிலும் நினைக்காதே!"

பேச்சை முடித்து ஒரு பெருமூச்சு விட்டான். அவனுடைய நண்பர்கள் குழாமாகவோ அல்லது பொது மேடையாகவோ இருந்தால் சடசடவென்ற கை தட்டல் ஒலி பரவியிருக்கும். ஆனால் நைந்துபோன உள்ளத்துடன் மகனின் எதிர்கால வாழ்வில் நம்பிக்கை வைத்திருக்கும் ஒரு ஏழைத் தாயாருக்கு, அவனுடைய அர்த்தமில்லாத அடுக்கு மொழிப் பிரசங்கத்துக்கும் ஆவேச உளறல்களுக்கும் ஆசையுடன் கரகோஷம் செய்வதற்குத் தோன்றுமா!

## 2

ஆனந்தபுரம் நகரமுமில்லாமல், கிராமமுமில்லாமல், நடுவாந்திரமான ஊர். ஆனால் செழிப்பான ஊர். நடராஜனின் தகப்பனார் நாராயணன் அங்கு ஒரு சிறு வெற்றிலைப் பாக்குக் கடை வைத்து வாழ்க்கையை நடத்தி வந்தார். மிகவும் சிரமப்பட்டு மகனைப் பள்ளியிலும் சேர்த்தார். ஆனால் அவன் வாழ்வுக்கு ஒரு நல்ல வழி வகுத்துக் கொடுக்க முடியாமலே காலமாகி விட்டார்.

பள்ளிப் படிப்பை முடித்துக் கொண்டு நடராஜன் உத்தியோக வேட்டையில் இறங்குவானென்று எதிர்பார்த்தாள் அவன் தாயார் செல்லம்மாள். ஆனால் நடராஜனோ நண்பர்களின் கூட்டங்களில் வீராவேசப் பிரசங்கங்கள் செய்வதிலும் வெட்டி வம்பு அடிப்பதிலும் ஈடுபட்டான். நண்பர்கள் குழாத்தில் அவன் பேச்சைக் கேட்க நாலுபேர் எப்பொழுதும் இருக்கத்தான் செய்தார்கள்.

"ராஜா! உனக்கு விஷயம் தெரியுமா? நம் வரதராஜன் தம் ரைஸ்மில்லை மூடி விடப் போகிறாராம்! ஒரு வேளை பெரிய அளவில் நகரத்தில் கொண்டு போய் ஆரம்பிக்கலாம் என்றிருக்கிறாற் போல் இருக்கிறது. ரைஸ்மில்லை மூடிவிட்டால் இந்த ஊரிலே முப்பது பேருக்காவது வேலை போய் விடும் பாவம்!" என்று ஆரம்பித்தான் ராமானுஜம்.

அவ்வளவுதான். "ஆஹா! அப்படியா விஷயம்! இதை நாம் சகித்துக்கொண்டிருக்க முடியுமா? ஆனந்தபுரத்தில் இந்த அட்டகாசத்தை அடக்க ஆள் இல்லை என்று நினைத்து விட்டாரா! இதோ நான் இருக்கிறேன்! அவர் மில்லை மூடினாரானால், இந்த ஊரிலே பாட்டாளி மக்களின் ரத்த வெள்ளம் தெருத் தெருவாக ஓடும் என்பது நினைவிருக்கட்டும்!" என்று சம்பந்தமில்லாமல் ஆவேசக் கர்ஜனை செய்தான் நடராஜன். உடனே ஒரு கோஷ்டி பின்தொடர, கோஷங்கள் வானைப் பிளக்க வக்கீல் வரதராஜன் வீட்டை நோக்கி நடந்தான். ஒரு கணத்தில் ஒரு பெரிய தலைமைப் பதவியை அடைந்து விட்ட எண்ணம் அவன் மனத்திலே நிலவியது.

வக்கீல் வரதராஜன் ஆனந்தபுரத்து செல்வந்தர்களில் ஒருவர். பக்கத்து நகரத்தில்



தொழில் புரிந்தாலும் தினசரி தம் காரிலேயே நகரத்துக்குப் போய் வருவார். ஒருவருடனும் அதிகமாகவோ அனாவசியமாகவோ பேச மாட்டார். அவர் நல்லவரா பொல்லாதவரா என்றுகூட அநேகருக்குத் தெரியாது. ஆனால் அவருடைய அந்தஸ்தையும் செல்வத்தையும் கண்டு பொறாமைப்பட மாத்திரம் அநேகர் இருந்தார்கள்.

நடராஜன் கோஷ்டியுடன் வந்தபொழுது வரதராஜன் தம் மாளிகையின் முகப்பில் நின்றுகொண்டிருந்தார். "ஸரஸ்வதி மில்லை மூடாதே!" என்று கோஷித்தான் நடராஜன். அவன் நண்பர்களும் உச்ச ஸ்தாயியில் பின்பற்றினார்கள். வரதராஜன் புன்சிரிப்புடன் அந்த கோஷ்டியின் மீது பார்வையை வீசினார். நாராயணனையும் அவர் மகன் நடராஜனையும் ஓரளவு அவருக்குத் தெரியும்.

"அடேடே! இதற்குத்தானா இந்த கோஷம்! ...சரி, இது என் சொந்த விஷயம். மில்லை மூடத்தான் போகிறேன்!" என்றார். அவர் பேச்சில் கண்டிப்பு தொனித்தது.

"கூடாது!" என்ற கோஷம் மீண்டும் வானைப் பிளந்தது.

"ஏன் கூடாது! எனக்கு அந்த இடம் தேவையாக இருக்கிறது. அதற்குப் பக்கத்தில் இன்னொரு கட்டடமும் எழுப்பி, ஒரு தீக்குச்சித் தொழிற்சாலை ஏற்படுத்தப் போகிறேன். இந்தக் கிராமவாசிகள் இருநூறு பேர்களுக்கு, அதுவும் பெண் பிள்ளைகளுக்கு வாழ்வு காண்பிக்கலாமென்ற ஆசையினால்தான்! இப்போது தெரிகிறதா, நான் ஏன் அரிசி மில்லை இங்கிருந்து அகற்றப் போகிறேன் என்று! உங்களில் யாருக்கும் அதில் வேலை வேண்டியிருந்தால், நீங்கள் யோக்கியமாக வேலை செய்யக் கூடியவர்கள் என்று உங்களுக்கே நம்பிக்கை இருந்தால் நீங்களும் வரலாம்" என்று கம்பீரமாகச் சொல்லி விட்டு உள்ளே திரும்பினார்.

நடராஜன் முகத்தில் ஈயாடவில்லை. அவமானத்தால் அவன் மனம் வெதும்பியது. வரதராஜன் இப்படிப்பட்ட வெடிகுண்டைத் தூக்கிப் போடுவார் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை! வரதராஜன் மேல் அன்பும் மரியாதையும் ஏற்படுவதற்குப் பதிலாக அளவில்லாக் குரோதமும் வெறுப்பும் ஏற்பட்டன. தன்னை ஏதோ முன்னேற்பாடாக அவமானம் செய்து விட்டார் என்றே அவன் எண்ணினான்.

## 3

நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. வரதராஜனின் டிரைவர் மருதமுத்து ஒரு நாள் பதை பதைக்க ஓடி வந்தான். "எஜமான், அநியாயத்தைக் கேளுங்க. நடராஜன் நம்மிடம் ரொம்ப வாலை ஆட்டுறான்" என்றான்.

"என்னடா சமாசாரம்!" என்று கேட்டார் வரதராஜன்.

"எஜமான்! நம் காரைக் குளத்தங்கரையிலே நிறுத்திக் கழுவிக் கொண்டிருந்தேன். என் துண்டு காற்றிலே பறந்து போயிடுச்சுங்க. எடுக்க ஓடினேன். அதுக்குள்ளே நாராயணன் மகன் நடராஜன் எங்கிருந்தோ வந்தான். பிசாசு பிடிச்சவன் மாதிரி நம் காரை வேகமாகத் தண்ணிருக்குள்ளே தள்ளிவிட்டு ஓடிவிட்டான். நம்ப ஆட்களை அனுப்பி......"

வரதராஜன் குறுக்கிட்டார். "சின்னப் பையன்! என் மேல் காண்பிக்க வேண்டிய ஆத்திரத்தை என் கார் மேலே காண்பித்தான் போலிருக்கிறது!...போனால் போகிறான் போ! ......இதைப் பெரிய விஷயமாகப் பேசிக் கொண்டு அலையாதே!" என்றார் அலட்சியமாக.

மருதமுத்துவின் மீசை படபடத்தது! "என்னங்க எஜமான்! அந்தப் போக்கிரியை நீங்க இப்படிக் கண்டிக்காமல் விட்டுக்கிட்டே இருந்தால் கொலை கூடப் பண்ணிடுவானுங்க! போனிலே ஒரு வார்த்தை சொல்லி உள்ளே தள்ளுங்க! போனமாதம் நம் பங்களா முகப்பிலிருந்த சிலையை உடைச்சபோதே நீங்கள் ..."

"உஷ்......" என்றார் வரதராஜன். "மருதமுத்து! துவேஷத்தையும், வெறுப்பையும், கண்டிப்பாலும், பதில் துவேஷத்தாலும் எடுக்க முடியாது! அப்படிச் செய்தால் அது மேற்கொண்டுதான் வளரும்! ஒன்று, அதைக் காலம் மாற்ற வேண்டும்! அல்லது அன்பு மாற்ற வேண்டும். அவன் சின்னப் பையன்! அவனைச் சிறையில் தள்ளி அவனிடம் இருக்கும் கொஞ்சம் மனிதப் பண்பையும் கொன்றுவிட நான் தயாரா யில்லை!" என்று சொல்லி மருதமுத்துவை அனுப்பினார் வரதராஜன்.

## 4

வீட்டிலே கஞ்சிக்கும் வழியில்லை என்ற கதியும் சீக்கிரமே வந்தது. தாயார் பட்டினி கிடக்கிறாள் என்று தெரிந்தபோது மனம் துடித்தான் நடராஜன். அப்போதாவது வரதராஜனின் உதவியை நாடும்படியும், அவருடைய தீக்குச்சி தொழிற்சாலையில் ஒரு மேற்பார்வையாளர் வேலை காலியிருக்கிறதென்று கேள்விப்பட்டதாகவும் சொல்லிக் கெஞ்சினாள் செல்லம்மாள். அப்போதும் அவன் உள்ளம் சீறியது. ஆனால் உதடுகள் அந்தச் சீற்றத்துக்கு உருவம் தர மறுத்தன. சென்னைக்குப் போய் எப்படியும் ஒரு வேலை தேடிக் கொள்ளச்

சாமர்த்தியம் உண்டென்று சொல்லி விட்டு, வீட்டிலுள்ள தட்டுமுட்டுச் சாமான்களை யெல்லாம் விற்றுக் கிடைத்த பணத்தின் உதவியால் சென்னைக்குப் பயணமானான். தாயாரின் கண்ணீரால் அவன் பிரயாணத்தைத் தடை செய்ய இயலவில்லை.

சென்னைக்கு வந்து ஒரு வாரமாயிற்று. உள்ளங்கால்கள் தேய்ந்தனவே தவிர உத்தியோகம் கிடைக்கும் வழி தென்படவில்லை. கையிலிருந்த காசு எல்லாம் காலி. வாழ்க்கை கசந்தது. தோல்வியுடன் ஊர் திரும்ப அவன் விரும்பவில்லை. கடைசியாக ஒரு இடம் ஏறிப் பார்த்து விட்டுப் பிறகு விடுதலைக்கு வழி தேடுவோம் என்ற விரக்தியுடன் ஒரு காரியாலயத்துக்குள் நுழைந்தான்.

காரியாலய நிர்வாகி அவனுடைய மனுவை வாங்கிப் பார்த்தார். அவனுடைய கல்வி அறிவு அத்தாட்சிகளையும் பார்த்தார். சில நிமிஷங்கள் சிந்தனையில் ஆழ்ந்தார். "மிஸ்டர் நடராஜன்! உங்களைப் போன்ற ஒரு இளைஞர் இப்போது எங்களுக்கு அவசியமாகத் தேவையாக இருக்கிறது. இன்றைக்குள் அந்த இடத்தை நாங்கள் பூர்த்தி செய்தாக வேண்டும். அது கொஞ்சம் பொறுப்புள்ள வேலையாதலால், நீங்கள் இன்னும் இரண்டு மணி நேரத்துக்குள் ஒரு கண்யம் வாய்ந்த நபரிடம் இருந்து உங்கள் நடத்தை, குணம் முதலியவற்றுக்கு ஒரு அத்தாட்சிக் கடிதம் வாங்கி வந்தால் உங்களை எடுத்துக் கொள்வதில் எனக்கு ஆட்சேபணையில்லை. தாமதமாக வந்து எங்களைக் குறை கூறுவதில் பிரயோசனமில்லை" என்றார் அன்பு கலந்த குரலில்.

நடராஜன் இத்தகைய எதிர்பாராத அதிர்ஷ்டத்தைக் கண்டு பிரமித்தான். ஆனால் மறு விநாடியே, இரண்டுமணி நேரத்துக்குள் எங்கு போய், யாரிடம் கடிதம் வாங்குவது என்று நினைத்தபோது அவன் ஆனந்தம் ஒரேயடியாக மறைந்து விட்டது. "அப்படியே ஆகட்டும், சார்!" என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தான்.

சென்னை நகரம் அவனுக்குப் புதிது. முன் பின் தெரிந்தவர்கள் அங்கு யாருமில்லை. குறிப்பாகக் காரியாலய நிர்வாகி கேட்ட அளவு அத்தாட்சி கொடுக்கக் கூடிய நபர் இல்லவே இல்லை. ஒன்றும் தோன்றாமல் சித்தம் போனவாறு நடக்கத் தொடங்கினான். சில விநாடிகளில் கிரீச் என்ற பலத்த சத்தத்துடன் அவன் குதிகால்களைத் தொட்டவாறு ஒரு கார் வந்து நின்றது. அப்போதுதான் இவ்வுலக சிந்தனைக்கு வந்த நடராஜன் எகிறிக் குதித்து ஒதுங்கினான். "ஏன் ஐயா! உனக்கு விழ எங்கள் கார்தானா அகப்பட்டது!" என்ற கோபக்குரல் அவன் செவிகளைத் தாக்கியது.

குரல் பழகியதாக இருந்தது. சட்டென்று திரும்பினவன் சிலையாக நின்று விட்டான்.

அந்தக் கார் வக்கீல் வரதராஜனின் கார். பின் ஆசனத்தில் அமர்ந்திருந்த வரதராஜன் வழக்கமான புன்சிரிப்புடன் நடராஜனைப் பார்த்தார். டிரைவர் மருதமுத்துவின் மீசை மாத்திரம் பட படவென்று துடித்தது.

மின்னல் வேகத்தில் நடராஜனின் உள்ளத்தில் பல சிந்தனைகள் ஓடின. கணப்பொழுதிலே ஒரு முடிவுக்கும் வந்தான். கைகளைக் கூப்பிக் கொண்டு வரதராஜன் அருகில்



வந்தான். "சார்! நான் ஒரு அனாதையாக இங்கு நிற்கிறேன். நீங்கள் மனசு வைத்தால் என் வாழ்க்கைப் பாதையில் ஒளி வீசலாம்! ஆனால் உங்களை அணுகவே நான் வெட்கப்படுகிறேன்" என்று தயங்கியபடியே கூறினான்.

வரதராஜன் குறுக்கிட்டார். "நடராஜா! இப்படிக் காரில் வந்து உட்கார். போய்க் கொண்டே பேசுவோம்" என்றார்.

நடராஜன் திகைத்தான். "சார்! உங்களுக்குச் சமமாக உட்கார எனக்கு யோக்கியதை இல்லை, சார்! நான் உங்களுடைய அன்புக்குக் கொஞ்சம்கூடத் தகுதியில்லாதவன். ஆனாலும் தாங்கள் அதைப் பொருட்படுத்தாது..." என்று இழுத்தான் அவன்.

மீண்டும் அவனை முடிக்க விடாமல் வரதராஜன் பேசினார்: "இந்தா, நடராஜா! மனிதன் எப்போதுமே தீயவனாக இருப்பதில்லை. காலம் என்னும் மருந்து உன் உள்ளத்துக்கு ஒரு நல்ல உதவி செய்திருக்கிறது என்று நினைக்கிறேன். உனக்கு என்னாலான உதவி செய்ய நான் தயாராக இருக்கிறேன். பிறருக்கு இதமாக நடக்கும் நேரம் தான் மனித வாழ்க்கையிலேயே பொன்னான நேரம்! வா, இப்படி உட்கார்!" என்று கதவைத் திறந்தார். கண்களில் நீர் வழிய நடராஜன் பயபக்தியுடன் உள்ளே வந்து உட்கார்ந்தான். மருதமுத்து காரை ஓதுப்புறமாகக் கொண்டு போய் நிறுத்தினான்.

விஷயம் முழுதும் கேட்ட வரதராஜன் புன்முறுவல் செய்தார். "கண்ணப்பா கம்பெனி தானே! அதன் உரிமையாளர், மானேஜர் எல்லோரையும் எனக்கு நன்றாகத் தெரியும். நான் அவர்களிடமிருந்து தான் சரக்குகள் வாங்குகிறேன். சிபாரிசுக் கடிதம் ஒன்றும் எழுதித் தரவேண்டாம்! நானே நேரில் வந்து சொல்கிறேன். போதுமா! உனக்குத்தான் அந்த வேலை! மருதமுத்து! நேரே கண்ணப்பா கம்பெனிக்குப் போ!" என்றார்.

"சார்! நீங்கள் அன்பின் உருவம்! அன்பு வழியைக் கடைப்பிடிக்கும் மகான் சார்! இந்தத் துவேஷம் நிறைந்த ஆத்மாவுக்கு அபயம் அளித்துக் காப்பாற்றிய வள்ளல் சார்!" என்றான் நாத் தழுதழுக்க.

அப்போது பின்புறம் திரும்பிய மருதமுத்துவை வரதராஜன் அர்த்தபுஷ்டியுடன் பார்த்தார். அவன் அன்பின் தத்துவத்தை அந்தப் பார்வையிலே கண்டான்.



கோயமுத்தூர் திரு S. திருநாவுக்கரசு முதலியார் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி **தனலக்ஷ்மி** அவர்களுக்கும் கோபிசெட்டிபாளையம் திரு G. P. **கந்தசாமி** B. A. அவர்களுக்கும் சென்ற நவம்பர் மாதம் 25-ந் தேதி கோவை C. S. & W. Mills கல்யாண மண்டபத்தில் திருமணம் நடைபெற்றது. பல பிரமுகர்கள் விஜயம் செய்து சிறப்பித்தார்கள்.

வாழ்க மணமக்கள் !

# பொங்கல் வாழ்த்துக்கள் !

★

**கனம் ராஜாஜி** - பேராசிரியர் **ரா. பி. சேதுப்பிள்ளை** ஆகியோர் அவர்கள் கைப்பட எழுதிய வாழ்த்துரைகள் அப்படியே பிளாக் செய்யப்பட்டு **ஓவியர், மணியம்** அவர்களின் மூவர்ண கலர் முகப்புச் சித்திரத்துடனும், இருவர்ணக் கலர் கவருடனும் வெளியிடப் பட்டிருக்கின்றன.

**தனி வாழ்த்து ஒன்றின் விலை அணா 4**
**கழிவு 25%**

**ரூபாய் ஐந்துக்குக் குறையாத ஆர்டர்களுக்கு 50% கழிவு**

மாதிரியும், வி. பி. பி.யும் இடையாது

★

இடைக்குமிடம் :

**தமிழ் நூல் பிரசுராலயம்**
2, மெமோரியல் ஹால் தெரு,
பி. டி. சென்னை - 3



# நரை மயிர் உங்கள் வயோதிகத்தை எடுத்துக் காட்டுகிறது

உண்மையில் நீங்கள் எவ்வளவு வாலிபராய் இருந்த போதிலும் நரை மயிர் உங்கள் வயதை அதிகப்படுத்தியே காண்பிக்கும். இந்த நிலைமையிலிருந்து தப்ப ஹென்ருல் ஒன்றுதான் சுலபமான சாதனம். சக்தி வாய்ந்த சரக்குகளினுல் தயாரிப்பாகிய ஹென்ருல் நரையை நிரந்தரமாக அகற்றுகிறது.

ஹென்ருல் எண்ணெய் ரூபத்திலும் (Oily) எண்ணெய் பற்றற்றதாயும் (Nongreasy) கிடைக்கும்.
முதிர்ந்த நரைக்கு சக்தி வாய்ந்த ஹென்ருல் போமேட் உபயோகியுங்கள். ஹென்ருல் நரையை ஒழிக்கிறது எங்கும் கிடைக்கும்.

PEARLINE-PARIS LTD. P.O. Box 493. BOMBAY.

**ஹென்ருல்**
நரையை அகற்றுகிறது

# ஆற்றங் கரையினிலே




பேராசிரியர்: ரா. பி. சேதுப்பிள்ளை

## 52. புதுவைமா நகர் (தொடர்ச்சி)

புதுவைமாநகரின் பெருமையைக் கேள்வியுற்றார் ஒரு புலவர். வளமார்ந்த அந்நகரில் வாழும் வள்ளல்களைக் கண்டால் வறுமை நோய் ஒழியும் என்று கருதினார். நம்பிக்கையோடு வழி நடந்து நண்பகலில் ஒரு சத்திரத்தை நண்ணினார். அதன் முகப்பில் 'காத்தான் சத்திரம்' என்று எழுதியிருந்தது. காத்தான் என்ற சொல் கவிஞர் உள்ளத்தில் களிப்பை விளைத்தது. "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்று பண்டைப் புலவர் பாடிய முறையில் ஆருயிர் மருந்தாகிய அன்னம் அளித்துப் பசியால் நலிந்து வாடும் உயிர்களைப் பாது காத்து வரும் இந்த அறச் சாலையை நிறுவிய பேரறிவாளன் காத்தான் எனப் பெயர் பெற்றது சாலப்பொருத்த முடையதன்றோ என்று எண்ணி இன்புற்றார். திண்ணையிலே மேலாடையை விரித்துப் படுத்தார்.

"இம்மையேதரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையேசிவ லோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே."

(கூறை - ஆடை)

என்று பாடிக் கொண்டே கண்ணயர்ந்து உறங்கி விட்டார். பகற்பொழுதும் மறைந்தது. இரவில் நெடுநேரம் கழிந்தது. கவிஞர் கண் விழித்தார். அங்கும் இங்கும் பார்த்தார். கடும் பசியால் துடித்தார். அவ்வேளையில் மடைப் பள்ளியிலிருந்து எழுந்த நறும் புகை ஒருவாறு அவர்க்கு ஆறுதல் அளித்தது.

இலை போட்டுச் சோறு படைத்தார்கள். அப்பொழுது விடி வெள்ளி எழுந்து விட்டது. பசி ருசி யறியாதாதலால் படைத்த உணவைப் பாவலர் புசித்து முடித்தார். மறுபடியும் திண்ணையில் அமர்ந்து அங்கிருந்த பணியாளர்களோடு பேசக் கொடுத்தார். அவர்களில் ஒருவன் சொன்னான்: "காத்தான் இருந்தவரையில் எங்களுக்குக் கவலை என்பதே இல்லை; காலந் தவறாமல் எல்லோர்க்கும் அவன் இனிய உணவளித்துக் காத்தான். பசித்து வந்தோரைக் கண்டால் அவன் மனம் பதைக்கும். பாடுபட்டுத் தேடிய பெருஞ் செல்வத்தை யெல்லாம் இந்தச் சத்திரத்துக்கு எழுதி வைத்தான். அவன் காலஞ் சென்றபின் இதைக் கவனிப்பார் யாருமில்லை. ஒவ்வொரு நாளும் அரிசி வருவதற்குள் அந்தி மாலை வந்து விடுகிறது. வந்த அரிசியைக் குத்தித் தீட்டி உலையேற்றி வெந்து சோறாக்குவதற்குள் விடிந்து போகிறது" என்று வருந்திக் கூறினான். அவன் சொல்லிய செய்தி கேட்டுச் சிந்தை நொந்தார் செந்தமிழ்க் கவிஞர். காத்தான் சத்திரம் கேட்பாரற்றுக் கிடக்கும் நிலையினைக் குறித்து ஒரு கவி பாடினார்.

"கற்றோர் நமக்குநவாக்
காத்தான்தன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதில் அரிசிவரும்—குத்தி
உலையிலிட ஊர்அடையும்
ஓர்அகப்பை சாதம்
இலையிலிட வெள்ளி எழும்"

என்று அவர் பாடிய பாட்டு காளமேகக் கவிஞரது பாணியில் அமைந்தது.

இப்படி அறச்சாலைகள் தூர்ந்தும் அழிந்தும் கிடக்கக் கண்டு வருந்தினார் ஆனந்தரங்கர். புதுவைப் பெருஞ் சாலையில் புதியதோர் சத்திரம் நிறுவினார். வழி நடந்து செல்லும் ஏழையர் இளைப்பாறி வயிறார உணவருந்துதற்கு ஏற்ற வசதிகள் செய்தருளினார். அந்நாளில் அடையாத வாயிலகமாய் விளங்கிய அறச்சாலை 'பிள்ளை சாவடி' என்னும் பெயரோடு புதுவைக் கருகே இன்றும் நின்று நிலவுகின்றது.

புதுவைமாநகரின் செழுமைக்கு அடிப்படையாக அமைந்த கடல் வாணிகத்தைப் பற்றி ஆனந்தரங்கரது 'தினசரி' விளக்கமாகக் கூறுகின்றது. புதுவைத் துறைமுகத்தில் அடுத்தடுத்துப் போக்குவரவு புரிந்து கொண்டிருந்த கப்பல்களில் இந்தியப் பெயர் பெற்ற கலங்களும் சில உண்டு என்பதை அத் தினசரியில் காணலாம். 'லெட்சுமணப் பிரசாத்' என்பது ஒரு கப்பலின் பெயர். ஒருகால், பதின்மூன்று யானைகளைத் 'தெனசரிம்' என்ற ஊரிலிருந்து அக்கப்பல் ஏற்றி வந்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது. அக்காலத்தில் புதுவைக்கும் மணில்லாவுக்கும் இடையே வர்த்தகத் தொடர்பு இருந்தது. "மூகம்மதுஷா" என்னும் பெயருடைய கப்பல் பலமுறை மணில்லாவுக்குச் சென்று வந்தது. புதுவையில் ஆட்சி புரிந்த டூப்ளே துரையின் கப்பல் ஒன்று 'சந்திரநாகூர்' என்று பெயர் பெற்றிருந்தது. ஆனந்தரங்கருக்கு 'உரிய கப்பல் 'ஆனந்தப் புரவி' என்னும் பெயரோடு புதுவைக்கும் இலங்கைக்கும் இடையே போய்க் கொண்டிருந்தது. எனவே தமிழ் நாட்டுத் துறைமுகங்களில் இயங்கும் கலங்களுக்கு நாட்டு மொழியிலே பெயரிடும் வழக்கம் இருநூறாண்டுகளுக்கு முன்னமே உண்டு என்பது இனிது விளங்கும்.

களவு செய்வாரைக் கடுமையாகத் தண்டிக்கும் முறை தமிழ் நாட்டில் நெடுங் காலமாக நிலவி வந்தது. "கள்வனைக் கொல்லுதல் கடுங்கோலன்று செங்கோல் முறையேயாகும்" என்று சிலப்பதிகாரம் சொல்லுகின்றது. புதுவை மாநகரிலும் களவுக்குக் கொலைத் தண்டனை விதிக்கப் பட்டதென்பது 'தினசரி'க் குறிப்பால் விளங்குவதாகும். "புதுவைப் பட்டணத்திலே பலநாள் திருடிய கள்ளன் ஒரு நாள் அகப்பட்டான். குற்ற விசாரணை முடிந்த பின்பு அவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. பட்டணத்தின் நடுவே கடைத் தெருவிலே தூக்கு மரம் நட்டு எல்லோரும் பார்க்கும் வண்ணம் பட்டப் பகலிலே அவனைத் தூக்கிட்டுக் கொன்றது பிரஞ்சு அரசாங்கம். அவனுக்குத் துணை புரிந்தவர் இருவர். அவர்கள் காது இரண்டையும் அடியோடு அறுத்து ஊருக்கு வெளியே துரத்தினார்கள்.

மகமதியர் ஆட்சி புரிந்த காலத்தில் துறைமுக நகரங்கள் 'பந்தர்' என்னும் பெயர் பெற்றன என்பது ஆனந்தரங்கரது 'தினசரி'யால் புலனாகின்றது. பரங்கிப்பேட்டை என்று இப்போது வழங்கும் ஊர் 'மகமது பந்தர்' என்னும் பெயர் பெற்றது. சென்னைமா நகரம் பார்சாபந்தர் ஆயிற்று. முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே இடப்பட்ட அப்பெயர் இன்றும் சென்னையில் உள்ள ஒரு தெருப் பெயரிலே ஒட்டிக் கொண்டிருக்கின்றது. பச்சையப்பன் பள்ளியின் அண்மையில் உள்ள கடைத் தெரு 'பந்தர் தெரு' என்றே இன்றளவும் வழங்கி வருகின்றது.

புதுவைக் கவர்னராயிருந்த டூப்ளே துரை சிறந்த மதி நலம் வாய்ந்தவன்; மனத் திட்பம் உடையவன் என்று மனமாரப் புகழ்ந்துள்ளார் ஆனந்தரங்கர். "இந்த நாட்டிலே என்ன நடக்கப் போகிறதென்பது அவரைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அவர் மனத்தில் உள்ள எண்ணம் அவர் எழுதும் பேனாவுக்கும் காகிதத்துக்கும்தான் தெரியும். அவ் எண்ணத்தை அவர் போட்டுக் கொண்டிருக்கும் தொப்பி அறிந்துவிட்டால் அதை நூறு துணுக்காகக் கிழித்துப் போடுவார்" என்பது ஒருநாட் குறிப்பிலே கண்ட செய்தி.

அவரை நாள்தோறும் பார்க்க வந்த துரைகள் பலர். அன்னார் பெயர்கள் தமிழர் நாவில் சரியாக வரவில்லை. பிரஞ்சு மொழியை அறிந்திருந்த ஆனந்தரங்கருக்கும் இந்தத் தொல்லையிருந்ததாகத் தெரிகின்றது. "இன்று காலமே தரங்கம்பாடிச் சின்னத்துரை — பேர் விளங்கான் — வந்தான். ஆள், கழுக்கு மழுக்கென்று மணலிலே பிடுங்கி எடுத்த வள்ளிக் கிழங்கு காட்டமாய் இருக்கிறான். பிரஞ்சு நன்றாய்ப் பேசுகிறான்" என்ற செய்தியைத் தினசரியிலே காணலாம்.

இவ்வாறு ஒரு தமிழ்ப் பெருமகன் சுவையாகத் தமிழிலே எழுதிவைத்த நூல் இதுகாறும் சரியாக வெளிவரவில்லை. தமிழகத்தோடு சேர்ந்துள்ள புதுவை நாடு இப்பணியை மேற்கொண்டு புகழ் பெறுவதாக.

## பாக் செய்யப்படாத வில்லைகளை வாங்குவதில் ஜாக்கிரதையாய் இருங்கள்!

பாக் செய்யப்படாத வில்லைகள் வயிற்றுக் கோளாறு செய்யும் அமிலப் பொருள்களை உண்டாக்கக்கூடியதால், புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை ஆவியினின்றும் நீர்த்திவலைகளினின்றும் பாதுகாக்கும் பொருட்டுத் தனித்தனியாக சீல் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் புதிய 'ஆஸ்ப்ரோ' அபாயமில்லாதது. இது இருதயத்தையோ, வயிற்றையோ பாதிக்காது. துர்ப்பழக்கம் ஏற்படுத்தக் கூடிய மருந்துகள் இதில் கிடையாது.

நவீன முறையில் சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட புதிய 'ஆஸ்ப்ரோ' துரிதமாக வேலை செய்கிறது. அதனால் தலைவலி, உடம்புவலி, ஜலதோஷம், ஜுரம் முதலியவைகளினின்றும் நிவாரணமளிக்க, சாப்பிட்ட மூன்று வினாடிகளில், அதனுடைய வேலையைத் துரிதமாக ஆரம்பிக்கிறது.

**அபாயமில்லாத துரித நிவாரணம் உங்களுக்குக் கிடைக்கும் — புதிய 'ஆஸ்ப்ரோ' வினால்**




'ஆஸ்ப்ரோ' ஸீல்டட் துண்டுகளிலேயே வாங்குங்கள்.

★ வயிற்றுக் கோளாறு உண்டாக்கும் அமிலப் பொருள்களிலிருந்து காப்பாற்றும்.

★ எப்பொழுதும், எந்த சமயத்திலும், எந்த இடத்திலும் எளிதாக உபயோகிக்க கையில் எடுத்துச் செல்லக் கூடியது.

★ நவீனமான, ஆரோக்கியமான மூன்று வில்லைகளின் விலை இரண்டு அணாதான்.

278

கடைகளில் விற்கப்படும் எல்லா 'ஆஸ்ப்ரோ' வில்லைகளும் புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளே.

# நான்தான் டீ

நான் நாட்டிற்குச்
செல்வத்
தைக்கொண்டு
வருகிறேன்



என் கதை சிலருக்கு கட்டுக் கதையாகத்தோன்றலாம்; ஆனால் அது முற்றிலும் உண்மையே! தோட்டத்தில் வளர்ந்த நாளில் என்னைச் சுற்றி ஏகாக் கணக்காக வளரும் தேயிலை அனைத்தையும் மக்கள் குடிக்கமுடியுமென்று கனவிலும் நான் எண்ணவில்லை...இந்த நாட்டை விட்டு வருஷாவருஷம் கடல் கடந்து கோடிக்கணக்கான வீடுகளில் சந்தோஷமூட்டுவேன் என்றும் நினைக்கவேயில்லை.

இன்று, என்னுடைய தாய்நாட்டுக்கு 147 கோடி ரூபாய் கொடுக்க வேண்டுமாயினும் வெளிநாட்டு மக்கள் தேநீர் குடிக்காமலிருக்க முடியவில்லை. நம்நாட்டு ஏற்றுமதி வியாபாரத்தில் மிக்க அதிகமாக நாட்டுக்கு சம்பாதித்துக் கொடுத்தது நான்தான்.

இதுமட்டுமல்ல மத்ய, ராஜ்ய சர்க்காருக்கும் ஏற்றுமதி வரி, கலால், விவசாயவரி, சாலை வரி, சுங்கம், வருமான வரி முதலியன மூலம் நிறைய பணம் கொடுக்கிறேன். என் உதவியினால் எங்கள் அரசாங்கம் இத்தனை திட்டங்களை நிறைவேற்றுவது கண்டு நான் பெருமிதம் கொள்கிறேன்...என்னுடைய நாட்டின் செல்வத்தையும் பலத்தையும் நாளுக்கு நாள் பெருக்கும் திட்டங்கள்.




**நான்தான் டீ — தேசப்பணி செய்கிறேன்**

கல்கியின்

# அமர தாரா



அத்தியாயம் 21

## இந்துவும் சித்ராவும்

மறு நாள் காலை நான் அரண்மனை வாசக சாலையைப் பார்த்த போது பிரமித்துப் போனேன். ஏராளமான புத்தகங்கள் குவிந்து கிடந்தன. எல்லாப் புத்தகங்களும் தங்க பாண்டியனின் தந்தை வாங்கிச் சேர்த்தவை என்று தெரிந்ததும் எனக்கு மிகவும் வியப்பாக இருந்தது. அவர் மீது ஒரு வித மரியாதை ஏற்பட்டது.

சற்று நேரம் புத்தகங்களை யெல்லாம் பிரித்துப் பார்த்துக் கொண்டிருந்து விட்டுக் கையில் கவியரசர் தாகூர் எழுதிய ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு வெளியே கிளம்பினேன். கொஞ்ச தூரம் அலைந்த பிறகு சுசீலா தேவி தன் வீட்டுக்கு வரச் சொல்லிக் கூப்பிட்டது நினைவுக்குவந்தது. பாதிரித் தோட்டம் எங்கே இருக்கிறது என்று விசாரித்துக்கொண்டு அங்கேபோனேன்.

அந்தத் தோட்டத்தைப் பார்த்ததும் சுசீலா தேவியின் வீட்டுக்குப் போகும் எண்ணம் மறந்து போய் விட்டது. அத்தனை அழகான சோலையை நான் பார்த்ததே இல்லை.

முத்து முத்தாகப் பூத்துச் சொரிந்திருக்கும் புன்னைமரங்களும், வானத்தை அளாவி நின்ற கமுகு மரங்களும், சரம் சரமாகத் தங்க நிறத்தில் பூத்திருந்த கொன்றை மரங்களும் என் கண்களுக்கு விருந்தாக இருந்தன. எல்லாப் புஷ்பங்களின் மணமும் கலந்து தென்றலில் மிதந்து வந்து தலை கிறுக்கும்படி செய்தது. ஒரு மரத்தின் பொந்திலிருந்து சில தேனீக்கள் வந்து போய்க் கொண்டிருந்தன. அடி மரத்தில் காதை வைத்துக் கொண்டு கேட்ட போது "ஙொய்" என்ற சப்தம் வந்தது. அதற்குள் தேனடை இருக்கிறது என்று தெரிந்தது. இப்படி நான் வேடிக்கை பார்த்துக் கொண்டே நின்றேன்.

பிறகு சற்றுத் தாழ்வாக வளர்ந்திருந்த ஒரு மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்து, கையில் கொண்டு வந்திருந்த புத்தகத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன். கவியரசரின் சித்ரா என்ற கதை அது. அந்தச் சித்ராவைப் பற்றிப் படித்த போது எனக்கு முதல் நாள் பார்த்த பெண்ணின் முகம் நினைவுக்குவந்தது. 'சே! இந்தக் கதைக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம்?' என்று நினைத்துக் கொண்டே மேலே படிக்க முயற்சித்தேன். சில பக்கங்கள் படித்த பிறகு மறுபடியும், 'அந்தப் பெண் இங்கே இருந்தால் பேசிக் கொண்டிருக்கலாமே!' என்று தோன்றியது. நான் அவளைப் பற்றி நினைக்கக் கூடாது என்று எண்ண எண்ண அதிகமாக அவளைப் பற்றியே மனம் நினைத்தது. கடைசியில் மனம் போன போக்கில் விட்டுவிட வேண்டியதாயிற்று. 'இங்கே அவள் வரக் கூடாதா?' என்று தோன்றியபோது திடீரென்று என் தனிமை மிகவும் பெரிதாக எனக்குத் தெரிந்தது.

"எனக்கும் அம்மா இருந்தால் 'துரைக்குக் கல்யாணம் பண்ண வேண்டும்' என்று சொல்ல ஆரம்பித்திருப்பாள். மணியின் அம்மா பிடிவாதம் பிடித்து அவனுக்குக் கல்யாணம் நிச்சயம் செய்து விட வில்லையா? அடுத்த மாதம் அவனுக்கு விவாகம் நடக்கப் போகிறது. எனக்கு யார் இருக்கிறார்கள்? நானாகத்தான் எல்லாம் செய்து கொள்ள வேண்டும். என்னைப் பற்றிக் கவலைப்படவோ அக்கறை எடுத்துக் கொள்ளவோ யார் இருக்கிறார்கள்? நான் எப்படி இருந்தால் யாருக்குக் கவலை?" என்று நினைத்தேன்.

எனக்கே என்னுடைய புதிய நினைப்புகள் திகைப்பூட்டுவனவாக இருந்தன. சோர்வுக்கு இடம் கொடுக்கக் கூடாது என்று தலையைக் குலுக்கி இந்த எண்ணங்களை உதறிவிட்டுப் புத்தகத்தில் கவனம் செலுத்த முயன்றேன். அந்தச்



ஆனந்தி

சமயத்தில் எதிரே இருந்த மரத்தில் சலசல வென்று சத்தம் கேட்டது. நிமிர்ந்து பார்த்தேன். ஒரு குரங்கு வந்து கொண்டிருந்தது.

"வா! வா! துணைக்கு ஒருவரு மில்லையே என்று நினைத்தேன்!" என்று அந்தக் குரங்கைப் பார்த்துக் கூறினேன்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. அந்த மரத்துக்கு நான்கு அடிகள் தள்ளி அந்தப் பெண் — அந்தப் பெண் என்ன? — இந்துமதி நின்றுகொண்டிருந்தாள். என் கையிலிருந்த புத்தகம் நழுவிக் கீழே விழுந்தது!

மகாகவி தாகூர் தாம் எழுதியுள்ள 'சித்ரா' என்ற கதையில் ஒரு அற்புதமான பாத்திரத்தைச் சிருஷ்டித்திருக்கிறார். சித்ரா அழகற்ற பெண். அர்ஜுனனைக் கண்டு காதல் கொள்கிறாள். அர்ஜுனன் அவளுடைய காதலை நிராகரித்து விடுகிறான். தான் அழகாக இல்லை என்பதனாலன்றோ தன்னை நிராகரித்தார் என்று மனம் நொந்த சித்ரா, மன்மதனையும் வஸந்தனையும் நோக்கித் தவம் செய்து, ஓராண்டு காலம் ஒப்பற்ற பேரழகியாய் விளங்க வரம் பெறுகிறாள்.

திவ்ய சௌந்தரியம் பெற்ற சித்ரா தன் அழகைக் கண்ணாடி போல் மின்னும் ஏரித் தண்ணீரில் பார்த்து மகிழ்வதை அர்ஜுனன் பார்க்கிறான்.



பின், அர்ஜுனன் நினைக்கிறான்: ''நான் அப்பொழுது கனவு கண்டேனா, அல்லது அந்த ஏரியின் அருகே கண்ட காட்சி உண்மையிலேயே நிகழ்ந்தது தானா? நான் அந்தப் புல் தரையில் மாலை வேளையில் உட்கார்ந்து கடந்துபோன நாட்களைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தேன். அப்போது இருள் மூடிய வனப் பிரதேசத்திலிருந்து அழகே உருவான ஒரு பெண் தோன்றினாள். அவள் ஏரிக் கரையோரமாக இருந்த ஒரு பாறையின் மீது ஏறி நின்றாள். அவள் பாத ஸ்பரிசம் பட்டதற்குப் பெரு மகிழ்ச்சியடைந்து பூமியின் உள்ளம் கூடப் பொங்கிப் பெருகியது போல் தோன்றியது. அவள் கண்ணாடிபோல் மின்னிக் கொண்டிருந்த ஏரியின் தண்ணீரில் தன் முகத்தின் பிரதிபிம்பத்தைப் பார்த்தாள். சற்று நேரம் அசையாமல் நின்றாள். பிறகு சிரித்துக் கொண்டாள். தன் பாதங்கள் வரை நீண்டுள்ள அழகிய கூந்தலை அவிழ்த்து விட்டுக் கொண்டாள்......''

இதை நான் பாதிரித் தோட்டத்தின் மரக்கிளையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தேன். அழகற்ற சித்ராவைத் தங்கபாண்டியனின் தங்கை லக்ஷ்மிக்கும், சௌந்தர்யம் பெற்ற சித்ராவை இந்துவுக்கும் என் மனம் ஒப்பிட்டுப் பார்த்தது. ''சே! இது என்ன பைத்தியக்கார எண்ணம்? பெண்களைப் பற்றியெல்லாம் நான் எதற்காக நினைக்க வேண்டும்?'' என்று அந்த எண்ணத்தை நெட்டித் தள்ளிவிட்டு மேலே வாசித்தேன். மறுபடியும் அர்ஜுனன் நினைப்பதுதான் புத்தகத்தில் தொடர்ந்தது. ''ஆசையின் பரிபூரண நினைவு எப்படியிருக்கும் என்று எனக்கு உணர்த்தி விட்டு மறைந்து விட்டாற் போல் பிரமை ஏற்பட்டது.''

இதைப் படித்துக் கொண்டும், நடுநடுவே மனோராஜ்யத்தில் ஈடுபட்டுக் கொண்டும் இருந்தவனுக்கு எதிரே திடீரென்று ஒரு திவ்ய சௌந்தர்யவதியான பெண் நின்றால் எப்படியிருக்கும்? இந்துமதி சித்ராவாகவும், நான் அர்ஜுனனாகவும் என் கற்பனை உருவாயிற்று. நான் அவளைப் பார்த்த அதே கணத்தில் அவளும் என்னைப் பார்த்தாள். 'அவள் முகத்தில் ஏற்பட்ட பிரகாசத்துக்கு என்ன பொருள்?' அந்தத் தோட்டத்தின் சூழ்நிலையும், நான் படித்துக் கொண்டிருந்த விஷயமும் அவளுடைய லாவண்யமும் சேர்ந்து என்னையே மெய்மறந்து போய் விடச் செய்தன.

அவளுடைய திகைப்பைப் பார்த்து, நான் குரங்கைப் பார்த்துச் சொன்னதை அவள் தன்னிடம் கூறியதாக நினைத்துக் கொண்டு விட்டாளோ என்ற சந்தேகம் எனக்குத் தோன்றியது. ஆகவே அவசரமாக, ''மன்னிக்க வேண்டும். நான் உன்னுடன் பேச வில்லை. இந்தக் குரங்கினிடம் பேசினேன்'' என்று கூறினேன்.

அவள் முகத்திலிருந்த ஆச்சரியம் மறைந்து, முகம் சிவந்து விட்டது. பதில் சொல்லாமல் மேலே நடந்தாள். 'நான் பரிகாசம் செய்வதாக நினைத்துக் கொண்டு விட்டாளோ என்னமோ? ஒரு வேளை, ''உன்னைப் பார்த்துத்தான்



## அறிமுகப்படுத்துகிறோம்: புதிய

# பிரௌனி 'க்ரெஸ்டா'

பிரௌனி 'க்ரெஸ்டா' காமிராவை உபயோகித்து நீங்கள் சேர்த்தியான படங்களை எடுப்பீர்கள். செய்வது இன்னம். அதை உபயோகிப்பது மிகவும் எளிது; அதாவது அது முற்றிலும் தானாகவே இயங்குகிறது. தெளிவான லென்ஸ்-டைப் வியூபைண்டரின் வழியாகப் பாருங்கள்; படம் எடுக்கப்படவேண்டிய பொருளுக்கு நேராகக் காண்பித்து பித்தானை அழுத்துங்கள்!

உங்களுடைய கைவிரல் 'க்ளிக்' என்ற சப்தம் செய்தவுடன், காமிரா உயிர்ப் படங்களை உள்ளபடியே எடுப்பதற்கு லென்ஸை திட்டப்படுத்துகிறது அல்லது அருமையான திறந்தவெளிக் காட்சிகளைப் படமெடுக்க சித்தமாக அமைக்கிறது. 'கோடக்' ப்ளாஷ்ஹோல்டரின் உதவியைக் கொண்டு 'க்ரெஸ்டா' காமிரா மிகச் சிறந்த ஸ்னாப்புகளை எடுக்கிறது. ஆகையால் நீங்கள் உங்களுடைய வீட்டிலேயே—இருட்டிய பின்பும்—ஆச்சரியப்படும்படியான குடும்பப் படங்களை எடுக்கமுடியும்!

இக்கணமுதல்—'கோடக்' 120 பிலிமின் ஒவ்வொரு சுருளிலும் நீங்கள் பன்னிரண்டு பெரிய ஸ்னாப்புகளைப் பெறுவீர்கள். உங்களுடைய கோடக் வியாபாரியிடம் செல்லுங்கள். மார்க்கெட்டில் கிடைக்கும் பலவித சேர்த்தியான காமிராக்களிலிருந்து சிறந்ததைத் தேர்ந்தெடுக்க, அவர் உங்களுக்கு உதவியாயிருப்பார்.





### 'பிரௌனி' 127 காமிரா

மிகவும் அழகாக உபயோகிக்கக் கூடியது. எல்லாவற்றிலும் மிகக் குறைந்த விலையுள்ளது! பெரியதும், தெளிவானதுமான வியூபைண்டரின் வழியாகக் குறிபார்த்து, பித்தானை அழுத்துங்கள். .. .. ரூ. 17/8

கான்வாஸ் கேஸ் .. .. .. ரூ. 3/4

### 'பிரௌனி' ரிப்லெக்ஸ் காமிரா ►

எல்லோராலும் விரும்பப்படும் இந்த சிறிய லென்ஸ் மாடல் மிகப் பெரிய வியூபைண்டரை உடையது. காமிராவைத் திட்டப்படுத்த வேண்டாம். குறி பார்த்து படம் எடுக்க வேண்டியதுதான்! வீட்டின் உட்புறத்தில் எடுக்கவேண்டிய ஸ்னாப்புகளுக்கு, காமிராவில் ஒரு 'கோடக்' ப்ளாஷ்ஹோல்டரைப் பொருத்திக் கொள்ளவும்.

கேஸுடன் கூடியது. .. ரூ. 45/-

ப்ளாஷ்ஹோல்டர் .. ரூ. 29/-



### கோடக் "டூஆப்லெக்ஸ்" II காமிரா

பார்க்கத் தோற்றமளிக்கும் இக்காமிரா நவீன முறையிலுள்ளது. அழகாகவும் சுலபமாகவும் வேலை செய்யவல்லது. நீங்கள் பெரிய வியூபைண்டரின் வழியாக குறி பார்த்து பித்தானை அழுத்துங்கள். வீட்டின் உட்புறத்தில் படங்களை எடுக்க காமிராவில் 'கோடக்' ப்ளாஷ்ஹோல்டரைப் பொருத்திக் கொள்ளவும் .. .. .. ரூ. 59/-

லெதர் கேஸ் .. .. .. .. .. ரூ. 12/-

ப்ளாஷ்ஹோல்டர் .. .. .. .. ரூ. 22/12



கூறினேன்'' என்று சொல்லியிருந்தால் அவள் முகம் மலர்ந்திருந்திருக்குமோ என்னவோ!' என்று நினைத்தேன். அவள் போகிறாளே! எப்படிக் கூப்பிடுவது? எப்படியாவது நான் பரிகாசம் செய்யவில்லை என்பதை அவளுக்குத் தெரிவித்துவிட வேண்டும் என்று நினைத்துக் கொண்டே மரத்திலிருந்து இறங்கி, விழுந்த புத்தகத்தை எடுத்துக் கொண்டு இரண்டு அடிகள் எடுத்து வைத்தேன்.

அவள் புன்னை மரத்தடியில் நின்றாள். உடனே எனக்கு நானும் அர்ஜுனனைப் போல் அவள் என்ன செய்கிறாளென்று பார்க்க வேண்டுமென்று தோன்றியது. பக்கத்தில் வளர்ந்திருந்த ஒரு பலா மரத்தின் பின்னால் மறைந்து நின்றேன்.

இந்து குனிந்து கீழே கிடந்த புன்னை மலர்களைப் பொறுக்கத் தொடங்கினாள். பொறுக்குவது போல் பாவனை செய்தாள். பத்துப் பூக்கள்கூடப் பொறுக்கவில்லை. தன் தாவணியின் தலைப்பினால் முகத்தை விசிறிக் கொண்டே நான் உட்கார்ந்திருந்த மரத்தைப் பார்த்தாள். அவள் முகத்தில் ஏமாற்றம் தென்பட்டது. என் மனம் மகிழ்ந்தது. 'அவள் என்னைப் பார்க்க விரும்புகிறாள். அருகில் போய்ப் பேசினால் என்ன?' என்று தோன்றியது. உடனே விரைந்து அவள் அருகில் சென்று நின்றேன். நான் அவளிடம் சொல்ல வேண்டுமென்று நினைத்தது மறந்து போய் விட்டது.

என் பார்வையை அவள் முகத்திலிருந்து திருப்பவே முடியவில்லை. ''பெண்ணே உனதழகைக் கண்டு மனம் பித்தம்...'' என்ற அடி என் மனத்தில் வட்டமிட்டது. அதைச் சொல்லத் துணிவு வரவில்லை.

அவளும் பேசாமல் நிற்கவே, 'அர்ஜுனனுக்குப் பிரமை ஏற்பட்டது போல் எனக்கும் ஏதேனும் பிரமை ஏற்பட்டிருக்கிறதோ?' என்று கூட எண்ணினேன். சுவரில் எழுதிய சித்திரம் மாதிரி ஒரு பெண் அசையாமல், கண்களைக் கூடக் கொட்டாமல் நின்றால் பின்னே என்ன நினைக்கத் தோன்றும்?

நல்ல வேளையாக வெகு நேரம் நான் சந்தேகப்படும்படி வைக்கவில்லை இந்துமதி. ''ஏன் இப்படி என்னை உற்றுப் பார்த்துக் கொண்டே நிற்கிறீர்கள்? பேசத் தெரியாதா? திடீரென்று நீங்கள் ஊமையாகி விட்டீர்களா? வழியை விடுங்கள். நான் போக வேண்டும்'' என்று மூச்சு விடாமல் பேசினாள்.

அவள் பேசிய விதம் எனக்குச் சிரிப்பூட்டியது. நான் பேச வேண்டுமென்று அவள் எதிர் பார்த்தாளென்பதும், நான் பேசாமல் நிற்கவே அவளுக்குக் கோபம் வந்ததென்பதும் எனக்குத் தெரிந்து விட்டதல்லவா? ஆனால் நான் சிரிக்கவில்லை. அவளை வியப்புடன் பார்த்து, ''ஓகோ! பேசும் பெண்மணி தானா நீ? அஜந்தா சித்திரம் என்றல்லவா நினைத்தேன்?'' என்று கூறினேன்.

## அத்தியாயம் 22

# உவகை பொங்கியது

அன்று காலை வரையில் யாரேனும் நான் இவ்விதம் ஒரு பெண்ணைப் பார்த்துப் பேசுவேன் என்று கூறியிருந்தால், நான் ரொம்பக் கோபித்துக் கொண்டிருந்திருப்பேன். அந்தக் கணம் வரை நான் என்ன சொல்வது என்று யோசிக்கவே இல்லை. அஜந்தா சித்திரம் என்ற வார்த்தை என்னையறியாமலேயே உதிர்ந்தது. அதை நினைத்து எனக்கே அதிசயமாக இருந்தது.

அவள் சற்று யோசித்து விட்டு, ஒரு பக்கமாகத் தலையைச் சாய்த்துக் கொண்டு, ''நான்கூட உங்களைப் பற்றி வேறு விதமாகச் சற்று முன்னால் சந்தேகப் பட்டேன். எங்கள் ஊரில் மரக்கிளைகளின் மேல் ஏறி உட்கார்ந்திருந்தால்......'' என்று கூறி மேலே சொல்லத் தயங்கினாள்.

எனக்குப் புரிந்து விட்டது. அவள் தலையைச் சாய்த்துக் கொண்டு நிற்கும் அழகை ரசித்துக் கொண்டே, ''நன்றாகச் சொல்லு! உங்கள் ஊரில் குரங்குகள் தான் மரக்கிளைகளில் உட்கார்ந்திருப்பது வழக்கம். என்னைக் குரங்கு என்று நினைத்தாய் போலிருக்கிறது. அப்படித்தானே?'' என்று கேட்டேன்.

''நான் ஒன்றும் சொல்லவில்லை, நீங்களே தான் சொல்லிக் கொள்கிறீர்கள்.''

''யார் இல்லை என்றார்கள்? அதனால் தான் என்னைத் தேடி வந்த குரங்கை, 'வா! வா' என்று அழைத்தேன். நீ குறுக்கே வந்து கெடுத்து விட்டாய்.''

''நான் என்ன கெடுத்து விட்டேன்? நீங்கள் ஏன் மரத்திலிருந்து கீழே இறங்கினீர்கள்?''

''உன்னைப் பார்த்த உடனே ஏற்பட்ட திகைப்பினால் கையிலிருந்த புத்தகம் நழுவியது. அதை எடுக்க இறங்கினேன்.''

''என்னைத் தொடர்ந்து வருவானேன்?'' என்று கேட்டாள் இந்துமதி.

"நீ இங்கே நிற்கிறாயே, எதற்காக என்று பார்க்க வந்தேன்."

"நான் உங்களுக்காக நிற்கவில்லை."

"நான் உனக்காகத்தான் வந்தேன்."

இந்து இந்தப் பதிலைக் கேட்டுப் பிரமித்துப் போய் விட்டதாகத் தோன்றியது. அவள் துடுக்காகப் பேசியது என் மனத்துக்கு உகப்பாக இருந்தது. அவள் எதை எதிர்பார்த்தாளோ அதை நான் கூறி விட்டேன். அவள் அதை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை.

இரண்டு நிமிடங் கழித்து, "ஏன் போகாமல் நிற்கிறீர்கள்?" என்றாள்.

"பேசக்கூடும் ஏதடி! — நீ
பெண் குலத்தின் வெற்றியடி"

என்று பாடினேன்.

இந்துமதி கேலிச் சிரிப்புடன், "உங்களுக்குச் சொந்தமாக ஒன்றும் சொல்லத் தெரியாதோ?" என்று கேட்டாள்.

நியாயமாக இது எனக்குக்கோபத்தை வரவழைத்திருக்க வேண்டும். என்ன காரணத்தாலோ நேர்மாறாக என் உத்சாகம் அதிகரித்தது.

"எவ்வளவோ தெரியும். ஆனால் உன் முகத்தைப் பார்த்ததும் எல்லாம் மறந்து போய் விட்டது" என்றேன். நான் அவ்வளவு விகசிதமாகப் பேசியது எனக்கே அதிசயமாக இருந்தது. நான்தான் பேசுகிறேனா என்று கூடச் சந்தேகம் ஏற்பட்டது.

"நான் பள்ளிக்கூடத்தில் படித்த போது வாத்தியாரம்மாள் சொல்லுவாள்: 'நான் கேள்வி கேட்டால் சரியாகப் பதில் சொல்லுகிறீர்கள். இன்ஸ்பெக்ட்ரஸ் அம்மாளின் முகத்தைப் பார்த்தால் மறந்து போய் விடுகிறீர்களே!' என்பாள்."

"உங்கள் பள்ளிக்கூடத்துக்கு வந்த இன்ஸ்பெக்ட்ரஸ் அம்மாளின் முகம் அவ்வளவு அழகா யிருந்ததா என்ன?"

இந்தக் கேள்வியை இந்துவால் சமாளிக்க முடியவில்லை. அவளுடைய உள்ளத்தில் பொங்கிய உவகை முகத்தில் ததும்பி வழிந்தது. அவளுடைய கண்ணாடி போன்ற கன்னங்களில் செம்மை படர்ந்தது. ஒரு புருவம் வளைந்து மேலே ஏறியது. மலர ஆரம்பித்த அதரங்கள் சடாரென்று குவிந்தன. என் வார்த்தைகள் அவளுக்கு மகிழ்ச்சி யூட்டிய தென்பதை நான் அறிந்து கொள்ளக் கூடாது என்று அவள் சிரமப்பட்டதாகத் தோன்றியது.

மறுபடியும் பேச்சை மாற்றினாள். "உங்கள் கையில் இருப்பது என்ன புத்தகம்?" என்று கேட்டாள்.

"நீயே பார்த்துத் தெரிந்து கொள்" என்று கூறி அதை நீட்டினேன். அவள் தன்னுடைய பொற் கரத்தால் அதைப் பெற்றுக் கொண்டபோது என் உடல் சிலிர்த்தது. மனம் துள்ளியது.

புத்தகத்தைப் பார்க்காமலேயே, "இதை எப்படித் திருப்பிக் கொடுப்பது?" என்று கேட்டாள்.

"நானே உன் வீட்டுக்கு வந்து திரும்ப வாங்கிக் கொள்கிறேன்."

"எப்போது வருவீர்கள்?"

"இன்று சாயங்காலமே வருவேன். தங்கபாண்டியன் அழைத்துப் போவதாகச் சொல்லி யிருக்கிறான். உங்கள் வீட்டுக்கு வந்து உனக்கு ஒன்றும் காயம்படவில்லையே என்று தெரிந்து கொள்ள எண்ணி யிருந்தோம்."

"இப்போதுதான் அதைத் தெரிந்து கொண்டு விட்டீர்களே?"

"இன்னொரு தடவை நான் தங்க பாண்டியனுடன் வருவதால் உனக்கு என்ன நஷ்டம்?"

"தங்க பாண்டியன் எங்கள் வீட்டுக்கு வரவே மாட்டாரே!"

"ஏன் வரமாட்டார்?"

"எங்கள் குடும்பங்களுக்குள் நீண்ட நாள் மனஸ்தாபம்."

"நீ தங்க பாண்டியனின் மாமாவைப் பற்றிச் சொல்லுகிறாய். வெகு சீக்கிரம் தங்க பாண்டியன் அதிகாரத்துக்கு வந்து விடுவான். சொக்கையா இருந்த இடம் தெரியாது."

"தங்க பாண்டியனுக்கும் எங்களைக் கண்டால் பிடிக்காது."

"இல்லவே இல்லை. உன் தகப்பனாரைப் பற்றி அவன் புகழ்வதற்கு அளவே இல்லை."

"அவர் வர்ணிப்பது என் வளர்ப்புத் தந்தையைப் பற்றி இருக்கும்."

எனக்கு இந்துமதியின் வாயினாலேயே அவளைப் பற்றிய விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று இருந்தது. அவளைப் பற்றி எனக்குத் தெரியும் என்பதை அவள் ஏன் அறிந்து கொள்ள வேண்டும்? நான் வம்பு பேசுபவன் என்று அவள் எண்ணி விடலாம் அல்லவா?

ஆகவே, "மந்திரமூர்த்தி உன் வளர்ப்புத் தந்தையா? சொந்தத் தந்தை வேறு உண்டா?" என்று கேட்டேன்.

அவள் தன்னைப் பற்றிக் கூறிவிட்டு, "என் சொந்தத் தந்தை உயிருடன் இருக்கிறாரா இல்லையா என்று கூடத் தெரியவில்லை" என்று துயரத்துடன் கண் கலங்கக் கூறினாள். என் நெஞ்சம் நெகிழ்ந்தது. என் தந்தையின் ஞாபகம் வந்து விட்டது.

"அதைப் பற்றி வருந்தி என்ன பயன்?" என்று தேறுதல் கூறினேன்.

அவள் கண்களைத் துடைத்துக் கொண்டு, "மாலை புத்தகத்தை வாங்கிக் கொள்ளக் கட்டாயம் வருவீர்கள் அல்லவா? நேரமாகி விட்டது. நான் வருகிறேன்" என்றாள்.

"என்ன புத்தகம் என்று கூட நீ பார்க்கவில்லையே?"

அவள் "சித்ரா" என்று வாசித்தாள். "உனக்கு இங்கிலீஷ் கூடத் தெரியுமா?" என்று கேட்டேன்.

"கொஞ்சம் தெரியும். ஆனால் இது புரியுமோ புரியாதோ?"

"புரியாவிட்டால் பாதகமில்லை. நான் இன்னும் ஒரு மாதம் இங்கே இருக்கப் போகிறேன். தினம் உன் வீட்டுக்கு வந்து படித்து அர்த்தம் சொல்கிறேன்" என்று கூறினேன். அவள் முகம் மலர்ந்ததைக் கண்டு என் அகமும் விரிந்து மலர்ந்தது.

நான் அரண்மனைப் பக்கமாகத் திரும்பிச் சென்றபோது இந்துவுக்குச் சித்ராவைப் படித்து அர்த்தம் சொல்வதைக் கற்பனை செய்து கொண்டே போனேன். அர்ஜுனன் சித்ராவை ஏரிக்கரையில் பார்த்து விட்டு நினைத்துக் கொண்டதைப் படித்து அர்த்தம் சொல்லும் போது அவள் என்ன செய்வாள்? சித்ராவைக் கொடி வீட்டின் அடியில் சந்திக்கும் போது அவர்கள் இருவரும் பேசுவதைப் படித்தால் அவள் முகம் எப்படி மாறும் என்று கற்பனை செய்து பார்த்தேன். அந்தக் கற்பனையே என் உள்ளத்தைப் பூரிக்கச் செய்தது.

இந்துமதியைப் பார்த்த பிறகு நான் பாதிரித் தோட்டத்துக்குச் சென்ற காரணம்கூட எனக்கு மறந்து போய் விட்டது. திரும்ப நான் அரண்மனைக்குச் சென்றதும் தங்கபாண்டியன் நேரம் கழித்து வந்ததற்காகக் கோபித்துக் கொண்டான். சாப்பிட்டு விட்டு இரண்டு பேரும் எங்கள் அறைக்குச் சென்றோம்.

பிறகு தங்க பாண்டியன் பாதாளக் கிடங்கைத் திறந்து சுவடிகள் ஏதேனும் கிடந்தால் எடுக்கச் சொல்வதற்காகச் சென்றான். அவன் திரும்பி வந்த போது மிகவும் சோர்வாக இருந்தான். எப்போதும்போல் கலகலப்பாக

# ஹாஸ்யக் களஞ்சியம்

எல்லாப் போட்டிப் பந்தயங்களையும் ஓராயிரம் ரூபாய்க்கு மேல் போடக்கூடாது என்ற சர்க்கார் தடை உத்தரவின் பேரில் போட்டிப் பந்தயங்கள் நின்று போக ஆரம்பித்துவிட்டன...



....அதேபோல், குதிரைப் பந்தயத்தில் ஒரு குதிரைக்கு மேல் ஓடக்கூடாது என்று சர்க்கார் தடை உத்தரவு போடுவார்களா?





இல்லை. முதல் நாள் மாமாவோடு சண்டை போட்டதனால் அப்படியிருக்கிறானென்று நினைத்துக் கொண்டேன்.

அதன் பிறகு கூட தங்கபாண்டியன் கலகலப்பாக இல்லவே இல்லை. சென்னையிலிருந்த மாணவனான தங்கபாண்டியனுக்கும், குங்குமத்துறை ஜமீனின் வாரிசான தங்கபாண்டியனுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருப்பதாகத் தோன்றியது.

மாலையில் நான் அவனைப் பார்த்து, "மந்திர மூர்த்திப் பண்ணையாரைப் பார்த்து விட்டு வரலாமென்று கூறினாயே? போகலாமா?" என்று கேட்டேன்.

"நானே உன்னிடம் சொல்லவேண்டுமென்று நினைத்தேன். கட்டாயம் போக வேண்டும். உனக்கும் காரியம் இருக்கிறது. அந்தப் பெண்ணுக்கும் அடியொன்றும் படவில்லையே என்று கேட்டு விட்டு வருவதுதான் மரியாதை. அந்த மனிதரின் சிநேகத்தை எப்படியாவது நான் சம்பாதித்துக் கொள்ள வேண்டும்" என்றான். அவன் பேச்சில் ஒரு சோர்வு காணப்பட்டது.

மத்தியானம் அவனிடம் நான் பாதித் தோட்டத்தில் இந்துமதியைச் சந்தித்ததைப் பற்றிச் சொல்ல வேண்டுமென்று இரண்டு தடவைகள் வாயெடுத்தேன். ஆனால் சொல்ல மனம் வரவில்லை. ஏன் என்பது எனக்கே புரியவில்லை. பல வருஷ காலமாக ஒவ்வொரு விஷயத்தையும் பகிர்ந்து கொண்ட நண்பனிடம் இந்துவைப் பற்றிப் பேசத் துணிவு வரவில்லை. ஏதோ ஒன்று அதைத் தடை செய்தது. 'நான் தங்கபாண்டியனிடம் சொன்னால் அவனுக்குப் பிடிக்காதோ என்னமோ?' என்ற எண்ணம் தோன்றியது. 'அவனுக்குப் பிடிக்குமா பிடிக்காதா என்பதைப் பற்றி நான் ஏன் கவலைப்படுகிறேன்?' என்று வியப்பாக இருந்தது. சில சமயங்களில் நம்முடைய மனப்போக்கு நமக்கே புரிவதில்லை அல்லவா?

இப்போது அவர்கள் வீட்டுக்குப் போனால் இந்துமதி காலையில் நாங்கள் பார்த்துப் பேசியதைப் பற்றி ஏதேனும் கூறிவிட்டால் என்ன செய்வது என்று யோசித்தேன். தங்கபாண்டியனிடம்











தஞ்சை கல்யாணபுரம் ஸ்ரீ நவநீதம் என். பத்மநாப அய்யங்கார் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி என். பி. சேஷாத்திரிக்கும், புளியூர் ஸ்ரீ பி. ஜி. ராகவாச்சாரியாரின் குமாரத்தி சௌ. சகுந்தலாவுக்கும் சென்ற 8-12-55 அன்று ஸ்ரீரங்கத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தது. காலையில் நடந்த முகூர்த்தத்துக்கும், மாலையில் நடந்த வரவேற்பு, பாட்டுக் கச்சேரிகளுக்கும் ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் வந்திருந்தனர். பிரதமர் நேருஜியிடமிருந்தும் மற்றும் பல பிரமுகர்களிடமிருந்தும் ஆசிகள் வந்திருந்தன.

சொல்லியிருந்தால் அப்போதே சொல்லியிருக்க வேண்டும். ஆகவே அங்கே போனதும் எப்படியாவது சங்கேதமாக இந்துமதியிடம் நான் காலையில் அவளைச் சந்தித்ததை யாரிடமும் கூறவில்லை என்று தெரிவித்துவிட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டேன். எப்படிச் சொல்லலாம் என்று யோசித்துக்கொண்டே சென்றேன்.

மாலையில் நாங்கள் இருவரும் மந்திரமூர்த்திப் பண்ணையாரின் வீட்டுக்குச் சென்றோம். அங்கு போனதும் ஒரு அம்மாள் வாசலில் வந்து நின்றார். அவரைப் பார்த்த உடனேயே இந்த சௌந்தரியமான முகமுடையவர் தான் இந்துமதியின் அன்னையாக இருக்க வேண்டுமென்று எனக்குத் தெரிந்து விட்டது. இந்துமதி அவ்வளவு களையாக இருப்பதில் அதிசயமில்லை என்று நினைத்தேன். இந்துவின் அன்னை சிறு வயதில் இந்துவைவிட அழகாக இருந்திருக்க வேண்டும். எத்தனையோ கஷ்டங்கள் பட்ட பிறகும், சொல்ல முடியாத வேதனையை உள்ளத்தில் அழுக்கி வைத்துக் கொண்டிருந்த போதிலும் அவருடைய முகத்தில் ஒரு பிரகாசம் இருந்தது. அவரிடம் கொஞ்ச நாட்கள் பழகியபிறகு அவர் காசிலிங்கத்தின் மீது வைத்திருந்த அன்புதான் அப்படி அவர் முகத்தில் சுடர் விட்டுப் பிரகாசித்தது என்று நினைக்கத் தொடங்கினேன்.

எங்களைப் பார்த்ததும் அவர், "பண்ணையார் ஊரில் இல்லையே?" என்றார். அவருக்குப் பின்னால் இந்துமதியின் முகம் தெரிந்தது. அவள் காலையில் பண்ணையார் ஊரில் இல்லை என்று கூறவில்லை என்பதும் ஞாபகம் வந்தது. அவளுடைய பார்வையைப் பார்த்தபோது அவளும் அதே விஷயத்தை நினைத்துக் கொண்டிருக்கிறாள் என்று தோன்றியது. நான் வரவேண்டும் என்றுதான் அதைச் சொல்லவில்லை என்பதைத் தெரிந்து கொண்டேன்.

இந்துமதியின் அன்னை எங்களை உள்ளே வரும்படி அழைத்தார். அந்த அழைப்பை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டோம்.

தங்க பாண்டியன் நான் சொல்ல நினைத்ததைச் சொல்வதற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுத்தான். "இந்தப் பெண்தான் நேற்று காரின் முன்னால் விழப் பார்த்தாள். அடையாளம் தெரிகிறதோ இல்லையோ?" என்று என்னைக் கேட்டான்.

நான் இந்துமதியின் மதிமுகத்தைக் கூர்ந்து பார்த்துக் கொண்டே, "நன்றாகத் தெரிகிறது. ஒரு தடவை பார்த்தால் மறக்கக் கூடிய முகமா?" என்றேன்.

இந்துவும் நான் அவளைப் பார்த்துக் கொண்டே கூறியதைக் கவனித்தாள். ஆனாலும் அவள் நான் கூறியதைப் புரிந்து கொண்டாளா இல்லையா என்பது எனக்குத் தெரியவில்லை.

மறுபடியும் தங்கபாண்டியன் திடுக்கிடும்படி ஒரு விஷயத்தைக் கூறினான். "அடேடே! இது என்ன அதிசயம்? நீ காலையில் வைத்துக் கொண்டு படித்தாயே, அந்த தாகூர் புத்தகம் இந்துமதியின் கையிலும் இருக்கிறதே" என்றான் திகைப்போடு.

நான் ஒரு கணம் திக்கு முக்காடிப் போனேன். மதியானமே அவளிடம் எல்லாவற்றையும் சொல்லியிருக்கலாமே என்று தோன்றியது. ஆனால் அந்தக் கணத்திலேயே சமாளித்துக் கொண்டு, "எனக்கும் அதிசயமாக இருக்கிறது. இந்துமதி ஹைஸ்கூலில் கூடப் படித்ததில்லை என்று சொன்னாயே? தாகூர் புத்தகத்தை எப்படிப் படித்து அர்த்தம்செய்துகொள்கிறாளோ, எனக்குத் தெரியவில்லை!" என்று கூறி இந்துவைப் பார்த்தேன். (தொடரும்)

# நறுமணம் விரும்புகிறவர்களுக்கு...

மைசூர் சந்தன சோப்பினால் ஸ்நானம் செய்வதே ஓர் அலாதியான இன்ப அனுபவம். அதன் மிருதுவான நுரை சருமத் துவாரங்களிலும் ஊடேறி சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்பாகவும் பளபளப்பாகவும் பட்டுப்போல் செய்கிறது. அதன் இன்பமூட்டும் ரம்மியமான மணம் உங்கள் தேகமுழுவதும் பல மணி நேரம் நீடித்துப் பரிமளிக்கும்.




## மைசூர்
## சந்தன
## சோப்

### கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

---

PPY 36 TAM.

"என் தொண்டை ரணத்தினால் என்னால் விழுங்கவே முடியவில்லை"

ஆனால்

# பெப்ஸ்

அதை சமனமாக்கி குணப் படுத்தியது.



பெப்ஸ் தொண்டை மற்றும் மார்பு வலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை கரைக்கும் போதே இந்த ரசங்கள் ஆவியாக மாறி உங்கள் ஸ்வாஸத்துடன் தொண்டை, சுவாசக் குழாய் மூலமாக சுவாசப் பைக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்பஸ்தானத்திற்கே நேராகச் சென்று வேலை செய்கின்றன. இதனால் தான் பெப்ஸை கண்ட ஔஷதமாயும், உலக பிரசித்திப் பெற்றும் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து அடைப்பை நீக்குவதுடன், இன்ப்ளுயன்ஸா மற்றும் ப்ராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.




## PEPS

பெப்ஸ் தொண்டை, மார்பு வலி நிவாரண மாத்திரைகள்
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

மதராஸுக்கு ஸோல் ஏஜண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்






கால அட்டவணைப்படி
இயங்கும்
பஸ்

# சதரன் ரோட்வேஸ் லிட்.

(டி. வி. எஸ். ஸ்தாபனம்)






இந்தியாவிலேயே
தலைசிறந்து
பணியாற்றி விளங்கும்
"கால அட்டவணை"
## லாரி
எமது ஒன்றே

*

வருடந்தோறும்
1½ கோடி மைல்கள்
குறிப்பிட்ட நேரத்தில்
செல்வது எமது சிறப்பு

# சதரன் ரோட்வேஸ்

லிமிடெட்

(ரஸ்தா போக்குவரத்து எமது பணி)

மதுரை

# வர்த்தகர்களுக்கு ஒரு வார்த்தை




'லீப்ஸிக்' பொருட்காட்சியில் இந்திய வர்த்தகக் காட்சியின் முன்புறத் தோற்றம்.

சென்ற வருஷம் சென்னைக்கு அருகில் பெரம்பூரிலுள்ள ரயில் பெட்டி செய்யும் தொழிற்சாலைக்குப் போயிருந்தேன்.

இந்தியா முழுவதற்கும் வேண்டிய ரயில் பெட்டிகளைச் செய்யும் பிரும்மாண்டமான தொழிற்சாலை தமிழ் நாட்டில் எழுகிறதே என்பதில் பெருமிதமும் பெரு மகிழ்ச்சியும் அடைந்தேன். "தொழில் பெருகுது! தொழில் பெருகுது!" என்று என் உள்ளம் ஆயிரம் தடவை சொல்லிக் களிக் கூத்தாடியது!

இவற்றிற்கு அடிநாதமாக வருத்தமும் இல்லாமல் இல்லை!

இதற்குக் காரணம் அங்கு அமைக்கப்பட்டிருந்த பெரிய பெரிய யந்திரங்கள் வெளி நாடுகளிலிருந்து வந்தவை என்பதுதான். மிகப் பாரமான இரும்புச் சாமான்களைத் தூக்கும் 'க்ரேன்'கள், ஆயிரம் டன் பளுவை அழுத்தும் சுத்திகள் முதலிய யந்திரங்கள் பல கிழக்கு ஜெர்மனியிலிருந்தும், மேற்கு ஜெர்மனியிலிருந்தும், ஸ்வீடன் தேசத்திலிருந்தும், இன்னும் பல ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் வந்து இறக்குமதியானவையாக இருந்தன! இப்படித்தான் இந்தியாவில் எங்கெல்லாம் தொழிற்சாலைகள் பெருகியிருக்கின்றனவோ அங்கெல்லாம் வெளிநாட்டு யந்திரங்கள் அதிகமாக இறக்குமதி செய்யப்பட்டு வேலைகள் நடக்கின்றன. அந்த யந்திரங்களை வாங்குவதற்கு, நம் நாட்டு மக்களின் பணம் எவ்வளவு கோடி ரூபாய் வெளிநாடுகளுக்குப் போயிருக்கும் என்று நினைத்துப் பார்த்தேன்! உள்ளத்தில் உற்சாகமிருந்த இடத்தில் சோகமே தலை தூக்க ஆரம்பித்தது.

ஆனால் இச் சோகத்துக்கு அர்த்தமே இல்லை. நம் நாட்டுத் தொழில் வளம் பெருக வெளி நாட்டிலிருந்து பிரும்மாண்டமான யந்திரங்கள் வாங்கித்தான் ஆக வேண்டும். நாம் நம் நாட்டுக்குத் தேவையான பெரியபெரிய யந்திரங்களை நாமே கண்டு பிடித்துச் செய்து முடித்த பின் தான் யந்திரசாலைகள் ஏற்படுத்துவது என்று வைத்துக் கொண்டால் முடியுமா! நாம் எந்த யுகத்தில் முன்னேறுவது! ஆகவே, மேல் நாட்டில், பல நூற்றுக்கணக்கான ஆண்டுகள் ஆராய்ச்சி செய்து பல அதிசய யந்திரங்களைச் செய்திருக்கிறார்கள். அவற்றையெல்லாம் வாங்கி உபயோகப்படுத்தி, யந்திரக் கலையைக் கற்றுக் கொண்டு நமது பொருளாதார சுபிட்சத்தை வளர்த்துக் கொள்ள வேண்டியதுதான் முறை.

ஆனால் இதன் கூடவே, பிற நாட்டு யந்திரங்களை வாங்குவதில் செலவாகும் பணத்தை வேறு முறைகளில் பிற நாட்டிலிருந்து பெற்று விடவும் வேண்டும்! அத்துறையில் நமது வர்த்தகப் பிரமுகர்கள் சற்று தேச பக்தியுடனும் முன் யோசனையுடன் நடந்து கொண்டால், நாம் செலவழிக்கும் 'டாலர்'களையெல்லாம் பெற்று விடலாம் என்ற நம்பிக்கை சமீபத்தில் எழுந்தது.

* * *

இப்போது புதுடில்லியில் பிரும்மாண்டமான அகில உலக யந்திரக் கண்காட்சி நடந்ததல்லவா! அதில் பல நாடுகள் தங்கள் தங்கள் நாட்டில் செய்யப்படும் அற்புத யந்திரங்களைக் காட்சியில் வைத்திருந்தார்கள். பல தேச வர்த்தகர்கள் வந்திருந்து பிற நாடுகளுடன் வர்த்தக ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். இம்முறை ஜெர்மனியார் ஒன்றரைக் கோடி ரூபாய் வரை வியாபாரம் செய்திருக்கிறார்கள் என்று அறிகிறேன்! அப்படியானால் இத்தகைய கண்காட்சிகளினால் எவ்வளவு பயன் ஏற்படுகிறது என்று சொல்லவும் வேண்டுமா?

கிழக்கு ஜெர்மனியிலுள்ள 'லீப்ஸிக்' என்ற இடத்தில் ஆண்டுக்கு இருமுறை இத்தகைய கண்காட்சிகள் நடைபெறுகின்றன! எத்தனை நாட்களாக என்று தெரியுமா! எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் ஆரம்பமாயிற்று.

நம் ஊர்களில் வாரச் சந்தைகள் கூடும் அல்லவா! அம்மாதிரி தான் எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் லீப்ஸிக் நகரில் சந்தை கூட ஆரம்பித்தது. நாளடைவில் கிழக்கு ஐரோப்பா - மேற்கு ஐரோப்பாவிலுள்ள பல நாடுகள் கூடி வர்த்தகம் புரியும் பெரிய சந்தையாக மாறியது. இப்பொழுது நம் நாட்களில் உலக நாடுகள் கூடி வர்த்தகம் புரியும் பெரிய சந்தையாகி விட்டது!

இந்த லீப்ஸிக் கண்காட்சியில் சோவியத் ருஷ்யா, சீனா, போலந்து, செக்கோஸ்லோவேகியா, ஹங்கேரி, பல்கேரியா, ருமானியா, அல்பேனியா, இங்கிலாந்து, பிரான்ஸ், பெல்ஜி

யம், ஸ்விட்ஸர்லந்து முதலிய நாற்பது நாடுகள் கலந்து கொள்கின்றன. 1954-ம் ஆண்டு நடந்த கண்காட்சியின்போதுதான் இந்தியாவும் கிழக்கு ஜெர்மனியும் வியாபார ஒப்பந்தம் செய்து கொண்டன! அப்பொழுதிலிருந்தே நமக்கும் கிழக்கு ஜெர்மனிக்கும் நல்ல வியாபார உறவு இருந்து வருகிறது!

ஆனால் பல நாடுகள் கூடும் இந்தக் கண்காட்சியில் பாரதத்தின் வர்த்தகம் பெருக ஏராளமான வாய்ப்பிருக்கிறது. பல நாடுகளிலிருந்து வர்த்தக தூது கோஷ்டிகளும், பார்வையாளர்களும் வருகிறார்கள். அவர்கள் நேரிடையாக வர்த்தக ஒப்பந்தம் செய்து கொள்ள நல்ல வாய்ப்புக்கள் இருக்கின்றன.

"யந்திர சாதனங்கள் மலிந்த மேல்நாட்டில் நாம் என்ன வியாபாரம் செய்ய முடியும்! நம்மால் அவ்வித யந்திரங்கள் தரமுடியுமா!" என்ற அங்கலாய்ப்பு ஏற்படலாம்.

"யந்திர சாதனங்கள் மலிந்த மேல் நாட்டில் நம் நாட்டு மூலப் பொருள்களுக்கு ஏகக் கிராக்கி யிருக்கின்றன" என்று இந்த லீப்ஸிக் பொருட்காட்சியின் இந்தியப் பிரதிநிதியான ஸ்ரீ எம். பி. ராவ் கூறுகிறார்.

ஆம், சென்ற மாதம் இறுதியில் லீப்ஸிக் பொருட்காட்சியின் டைரக்டர் மிஸ்டர் ஆட்டோ மெயின்ஹார்டு சென்னையில் பத்திரிகை நிருபர்களுக்கு ஒரு பேட்டி யளித்தார். அவர் இந்திய வர்த்தகப் பெருமக்களை இந்தப் பொருட்காட்சியில் கலந்து கொள்ளுமாறு வேண்டிக் கொண்டார்.

மேல் நாட்டில் இந்தியக் கனிப் பொருள்களுக்கு—மூலப் பொருள்களுக்கு நல்ல கிராக்கியிருக்கிறதாம். இரும்பு, மைக்கா, மாங்கனீஸ் முதலியவை விரும்பப்படுகின்றனவாம். இப்படியெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

நான் "தமிழக வர்த்தகர்கள் எத்தகைய பொருள்கள் அனுப்பலாம்!" என்றேன்.

அதற்குத் திரு எம். பி. ராவ், "எத்தனையோ பொருள்கள் அனுப்பலாம். உதாரணமாக, பருத்தி, ஆட்டு ரோமம், கம்பளிகள், பவானி ஜமக்காளங்கள், தோல், சில்க் துணிகள், கைத்தறித் துணிகள், புகையிலை, டீ, காப்பி, வாசனைச் சாமான்கள், மிளகு, சுக்கு, ஏலக்காய், அன்னாசிப் பழங்கள், முந்திரிப் பருப்பு, பாதாம் பருப்பு, மாம்பழங்கள், தோல் செருப்புகள், குழந்தைகள் விளையாடும் பொம்மைகள், தேக்குமரச் சாமான்கள், எண்ணெய்கள், கடலை எண்ணெய், தேங்காய் எண்ணெய், ஊறுகாய், அப்பளாம், தேன், நார்கள், குடிசைத் தொழிற் சாமான்கள் இன்னும் எத்தனை எத்தனையோ!" என்று சொல்லி அடுக்கிக் கொண்டே போனார்.

அவருக்கு மூச்சுத் திணறியதோ என்னவோ! எனக்குத் திணறியது!

"இந்தச் சாமான்கள் எல்லாம் இங்கிருந்து ஜெர்மனி வரைக்கும் அனுப்புவதற்கும், அந்தச் சாமான்களுடன் பொருட்காட்சி முடியும் வரை அங்கிருந்து வியாபார ஒப்பந்தம் செய்து கொள்ளுவதற்கும் முதலில் வேண்டிய போக்கு வரவுச் செலவுக்கான மூலதனமே நம் வர்த்தகர்களில் பெரும்பாலோரிடம் இருக்குமோ, என்னவோ!" என்றேன்.

"வாஸ்தவம், அத்துறையில் உதவ நாங்கள் இருக்கிறோம்!" என்றார் திரு எம். பி. ராவ்.

"என்ன செய்வீர்கள்!" என்றேன்.

"வர்த்தகர்கள் சாமான்களை பம்பாயிலுள்ள பாரத சர்க்காரின் கப்பல் ஏஜெண்டுகளுக்கு அனுப்பி விட்டால், அங்கிருந்து 'லீப்ஸிக்'குக் கொண்டு போகும் செலவைச் சர்க்கார் ஏற்றுக் கொள்வார்கள். அந்தச் சாமான்களை விற்கும் பிரதிநிதிகள் வர இயலா விட்டால்கூட, பாரத சர்க்காரே அவர்கள் சார்பில் பேசி ஒப்பந்த ஆர்டர்கள் வாங்கியனுப்பத் தயாராய் இருக்கிறார்கள்!" என்றார் திரு எம். பி. ராவ்.

கடைசியாக ஒரு கேள்வி கேட்டேன். "இந்தப் பொருட்காட்சி எப்பொழுது நடக்கப் போகிறது!" என்று கேட்டேன்.

"பிப்ரவரி 26-ம் தேதியிலிருந்து மார்ச்சு 8ம் தேதி வரை நடக்கும். அதற்குள் நமது சாமான்கள் எல்லாம் லீப்ஸிக்குக்குப் போய்ச் சேர வேண்டும். அவகாசமே இல்லை. மூச்சு விட நேரமில்லை. இப்பொழுதே புறப்பட ஏற்பாடு செய்ய வேண்டும்" என்று அசாத்தியப் பரபரப்பைப் பார்த்தபோது அவருக்கு மட்டும் இறகுகள் இருந்திருந்தால் அந்த நிமிஷமே லீப்ஸிக்குக்குப் பறந்திருப்பார்போல் தோன்றியது.

* * *

மறுநாள் காலை லீப்ஸிக் பொருட்காட்சியின் திரைப்படம் மிட்லண்டு தியேட்டரில் காண்பிக்கப்பட்டது. சுமார் ஒரு மணி நேரம் யந்திர உலகத்தில் இருந்துவிட்டு வந்தோம்.

நம் தென்னாற்காடு ஜில்லாவில் ஏராளமான பழுப்பு நிலக்கரி யிருப்பதாக நமது பாரத சர்க்கார் கோடி கோடியாக ரூபாய் செலவழித்துக் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஆனால் அதை உடனே வெட்டி எடுத்து உபயோகித்துக் கொள்ள முடியாமல் இருக்கிறது. ஏனெனில் சுரங்கம் தோண்டத் தோண்ட வரும் ஏராளமான தண்ணீரை எப்படி இறைப்பது என்று தெரியாமல் சர்க்கார் தவிப்பதுதான். ஏறத்தாழ இதேமாதிரியான நிலைதான் ஜெர்மனியிலும் இருந்தது. அதை அந்நாட்டு யந்திர நிபுணர்கள் சமாளித்து வெற்றி கண்டிருக்கிறார்கள். அவர்களுடன் பாரத சர்க்கார் ஒப்பந்தமும் செய்து கொண்டிருக்கிறார்கள். அன்று மிட்லண்டு தியேட்டரில் பழுப்பு நிலக்கரி தோண்டும் பெரிய யந்திர சாலையைக் கண்டபோது தென்னாட்டில் இப்படிப்பட்ட தோர் யந்திரசாலை தோன்றும் அல்லவா என்ற பெருமித உணர்ச்சி மனத்தில் எழத்தான் செய்தது.

இத்தகைய பல யந்திர சாலைகள் ஏற்பட இந்திய வர்த்தகர்கள் பெரும் பிரயத்தனம் செய்ய வேண்டும். சென்ற வருடம் லீப்ஸிக் பொருட் காட்சிக்கு அறுபத்தைந்து நாடுகளிலிருந்து பிரதிநிதிகள் வந்திருந்தார்கள் என்றால் இந்த ஆண்டு அதிகமான நாடுகளிலிருந்து பிரதிநிதிகள் வருவார்கள். அவர்களுடன் நமது வர்த்தகப் பெருமக்கள் நல்ல வியாபார ஒப்பந்தம் செய்து கொண்டு நாட்டு நலனுக்காக ஏராளமான டாலர்கள் சம்பாதிக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறோம்.

"திரைகடலோடியும் திரவியம் தேடு" என்று கூறிய நமது முன்னோர்களின் முதுமொழியை நமது இன்றைய வர்த்தகர்கள் கடைப்பிடித்து, பாரத நாட்டின் சிறப்பை உலகெங்கிலும் பரப்புவார்கள் என்று நம்புகிறோம்!

# கால்கேட் குளோரோபில்*
# ஈறுகளை பலப்படுத்துகிறது
## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப் பலப்படுத்துகிறது.

வேறு சாதாரண பற்பசையை விட மிகமிகத் தீவிரமாகவாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொருமுறையும், சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனாமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற்பசையிலும் இதைவிட வீரியகுளோரோபில் இல்லை**

குழந்தைகள் விரும்பும் மதுரமான சுவை. மதுரமான இனிய சுவையுள்ள கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை குழந்தைகள் கூட விரும்புவார்கள்.




**குளோரோபில் டூத்பேஸ்டின் பூரண நன்மைகளைத்தரும் விசேஷ கால்கேட் சூத்திரம்!**

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.



# தக்ஷிண ரயில்வே & இண்டக்ரல் கோச் பாக்டரி

வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்
படும் ரயில்வே இயந்திர சாதனங்களின்

## காட்சிக் கூடம்

**பெரம்பூர் காரேஜ் ஒர்க்ஸ் ரயில்வே ஸ்டேஷன் சமீபத்தில்**

எல்லா வேலை நாட்களிலும் காலை 10 முதல் 1 மணி வரையிலும் மாலை 2 முதல் 5 மணி வரையிலும் சனிக்கிழமைகளில் 10 முதல் 1 மணி வரையிலும் பொதுமக்களின் பார்வைக்குத் திறந்து வைக்கப்படும். ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற விடுமுறை நாட்களிலும் காட்சிக் கூடம் மூடப்படும்

*பல பிரபல தொழில் பிரமுகர்கள் காட்சிக் கூடத்தைப் பார்வையிட்ட பின் அவர்கள் தெரிவித்த அபிப்பிராயங்களில் சிலவற்றைக் கீழே தருகிறோம்.*

★ "சிறு தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்கள் எவ்விதம் ரயில்வேக்களுக்கு உதவலாம் என்பதை இக்காட்சி தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது."

★ "இந்திய வியாபாரிகள் இதைப் பார்த்து எப்படி இந்தியத் தொழில்களை அபிவிருத்தி செய்யலாம் என்று தெரிந்து கொண்டு அவைகளைக் கடைப்பிடிக்கட்டும்."

★ "நமது தொழில் முன்னேற்றத்துக்காக ஏற்படுத்தப்பட்ட இக்காட்சியைப் பார்த்து பரம திருப்தி அடைந்தேன்."

★ "நன்கு அமைக்கப்பட்ட பொருட்காட்சி."

★ "இக்காட்சிசாலையில் வைக்கப்பட்டுள்ள சில ரக அபூர்வமான சாமான்களை சிறு மூலதனத்துடன் நடத்தப்படும் தொழிற்சாலைகள் உற்பத்தி செய்யக்கூடும்."

★ "தொழிற்துறையிலுள்ள எல்லா பகுதியையும் ஒருங்கே காணுமாறு நன்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது."

★ "எங்களுக்கும் மற்றும் வருங்கால உற்பத்தியில் ஈடுபடக் கூடியவர்களுக்கும் எத்தகைய தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டியிருக்கும் என்பதை உங்கள் காட்சிசாலை மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. வந்தனம்"

*நீங்கள் இன்னும் இந்தக் காட்சிக் கூடத்தைப் பார்க்காவிடில் விரைவில் விஜயம் செய்து காட்சிக்கு வைக்கப்பட்டுள்ள 1,236 பொருள்களை பார்வையிடக் கேட்டுக்கொள்வதோடு, அவைகளில் எந்தப் பொருள்களை நீங்கள் உற்பத்தி செய்து ரெயில்வேக்களுக்கு சப்ளை செய்ய முடியும் என்பதையும் நிர்மாணிக்கக் கோருகிறோம். காட்சிப் பொருள்களின் காட்லாக் காட்சிக்கூடத்தில் 0—12—0 விலைக்குக் கிடைக்கும்.*

*மேலும் விவரம் தெரிந்து கொள்ள விரும்பினால் காட்சிக் கூடத்தின் நிர்வாகிக்கு எழுதிக் கேளுங்கள். போன்: 61653*

கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ்,
தக்ஷிண ரயில்வே, சென்னை - 23

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு: செம்மங்குடி ஸ்ரீனிவாச ஐயர்

கீர்த்தனம் 17 ராகம் : வஸந்த தாளம் : ஆதி

### பல்லவி

மால்மருகா ஷண்முகா முருகா குஹா (மால்மருகா)

### அனுபல்லவி

நான் மறை ஸார ஓங்கார ஸ்வரூபா
மாமயில் வாஹனே ஸ்வாமி ப்ரதாபா (மால்மருகா)

### சரணம்

வெள்ளி மலைநாதன் கௌரி பால
வேறு துணை காணேன் வந்தேனையாளாய்
வள்ளி தெய்வானை மணாள தயாளா
வணங்கும் ராமதாஸன் நம்பியனிதானா (மால்மருகா)

வஸந்த ராகம் 17-வது மேளமாகிற ஸூர்ய காந்தத்தில் 'பிறந்த ராகமாகக் கொள்வது தான் பொருத்தமாகும். உபாங்க ராகம், ஷாடவ, ரக்தி ராகம், பிராசீன ராகம் (இந்த ராகத்தை 15 வது கர்த்தாவான மாயமாள கௌளையில் ஜன்யமாகவும், பாஷாங்கராகமெனவும் வேங்கடமகியவர்கள் கூறியுள்ளார். ஆனால் 72 மேளகர்த்தா முறை பிரசாரமான பிறகு இதனை 17-வது மேளத்தில் பிறந்ததாகக் கொள்வதுதான் முறை.)

இதன் ஆரோஹணம்: ஸ கா ம தா நி ஸ்ா

அவரோஹணம்: ஸ் நி தாமாகாரிஸா

இது தவிர ஸ ம க ம த நி ஸ்—ஸ நி தா ம கா ரி ஸா. இதில் வரும் ஸ்வர ஸ்தானங்கள், சுத்த ரிஷபம், அந்தர காந்தாரம், சுத்த மத்யமம், சதுஸ்ருதி தைவதம், காகலி நிஷாதம்.

### பல்லவி — 1 களை

1 , , , மா க மா தா\மா , தா நி | ஸ்ா ; ; ஸ் ஸ் | ஸ் நி தா ; மா ||
மால் ம ரு கா - ஷண்மு கா மு ரு கா - - கு

2 ம க ரி ஸ ம க மா த நி நி\மா , தா நி | ஸ்ா ; ; ஸ நி | த நி நிதா,\மா மா ||
ஹா- - மால்- ம ரு கா - - - ஷண்மு கா மு ரு கா - - - - கு

3 ம க ரி ஸம க மா த நி நி\மா , தா நி | ஸ்நி க்ரி ஸ்நி ஸ்நி | த நிஸ் நி த ம க ம ||
ஹா- - மா-ல் மரு கா - - - ஷண்மு கா - - - - முரு கா - - - - - - கு -

ம க ரி ஸம க மா த நி நி\மா , தா நி | ஸ்ா ; ; ; | ; ; ; ; ||
ஹா- - மா -ல்ம ரு கா - - - ஷண்மு கா

### அனுபல்லவி

, , , ஸ்ா த நீ ஸ்ா ; ஸ்ா/ரி | ஸ்ா ; ஸ்ா ஸ்ா | ஸ் நி ரி ஸ் ஸ் நி த நி ||
நான்மறை ஸா ர ஓ ங்கா ர ஸ்வ ரூ - - - பா - - -

மத நி ஸ்ா த நீ ஸ்ா ; ஸ்ா/ம்ா | ம் க் ரி ஸ்ா ஸ்ா | ஸ் நி ரி ஸ் ஸ் நி த நி ||
- - - நான் மறை ஸா ர ஓ ங்கா- - ர ஸ்வ ரூ - - - பா - - -

ம த நி ஸ்ா ஸ் ஸ்ா ஸ் நி தா த ம தா | தா நீ நி த த ம | ம க த ம க ரி ஸா ||
- - - மா ம யில் வா - - ஹ - னே ஸ்வா - மி - ப்ர - தா - - - பா - -

, , , /ஸ்ா ஸ் ஸ்நி /ரிரி ஸ்நிதா,நி மதா | தாநிஸ் நீ,ஸ் நிதா, மா | ம க த ம க ரி ஸா ||
மா ம யில்- வா - - - - -ஹனே ஸ்வா - - - - மி - ப்ர தா - - - பா - -

, , , / ரீ ஸ் ரீ / ரிரி ஸ்நிதா,நி மதா | ரிஸ் நி ஸ் நி த நித | ம த ம க/ கீ த ம
மா மயில் வா - - - - - ஹனே | ஸ்வா - - மி - - ப்ர - | - தா - - பா - -

க ரி ஸ
- தி ரு — மால் ம ரு கா —.

**சரணம்**

, , , மா ம மா மா , மா , மா | மதநீ \ தா / நீ | \ தா \ மா \ கா ; ‖
வெ ள்ளி ம லை நா தன் | கொ - - ரீ - | பா - லா

, , , மா ம மா மா , த \ கா மா | ம த நீ \ தாநிஸ்நீ,ஸ் | நிதா, \ மா \ கா ; ‖
வெ ள்ளி ம லை நா - தன் | கொ - - ரீ - - - - | பா - - லா

, , ,/ மா க ரீ ஸா , ஸா ,க ரிஸஸா | , , , மா த த ம | / நி நி தா \ மா ; ‖
வே று து ணை கா - ணே - ன் | வந்தே னே - | யா - - னாய்

, , ,/ மா க ரீ ஸா , ஸா ,க ரிஸஸா | , , , மா த த ம | தாநிஸ்நீ,ஸ்நிதா, \ மா ‖
வே று து ணை கா - ணே - - ன் | வந்தே னே - | யா - - - - னா - ய் -

, , , ஸ்ா த நீ ஸ்ா ; ஸ்ா / ரீ | ஸ்ா ; ஸ்ா / ஸ்ா | ஸ் நி ரி ஸ் ஸ் நி தா ‖
வ ள்ளிதெய்வா னை ம | ணு ள த | யா - - - ளா - -

ம த நி ஸ்ா த நீ ஸ்ா ; ஸ்ா ஸ்ா | ம் க் ரீ ஸ்ா ஸ்ா | ஸ் நி ரி ஸ் ஸ் நி த நி ‖
- - - வ ள்ளிதெய் வா னை ம | ணு - ள த | யா - - - ளா - - -

ம த நி/ஸ்ா த நீ ஸ்ா ; ஸ்ா ஸ்ா | ம் க் ரீ ஸ்ா/ஸ்ா | நீஸ்ரிஸ்ா,நி தாநிஸ்நீ,த ‖
- - - வ ள்ளி தெய் வா னை ம | ணு - - ள த | யா - - - - ளா - - - -

ம த நி / ஸ்ா த நீ ஸ்ா ; ஸ்ா ஸ்ா | ம் க் ரீ ஸ்ா ஸ்ா | ஸ் நி ரி ஸ் ஸ் நி தா ‖
- - - வ ள்ளிதெய்வா னை ம | ணு - - ள த | யா - - - ளா - -

, , / ஸ் ஸ்ா ஸ் / ஸ்ா ; ஸ் நி த ம தா | தா நீ,ஸ் நிதா, த ம | ம க த ம க ரி ஸா ‖
வ ணங்கும் ரா ம - தா - ஸன் | த லை - ய - ளி - | தா - - - ளா -

, , / ஸ் ஸ்ா ஸ் / ஸ்ா ; ஸ் நி த ம தா | ரி ஸ் நி ஸ் நி த நி த | ம த ம க நீ த ம ‖
வ ணங்கும் ரா ம - தா - ஸன் | த - - லை - - ய - | - ளி - - தா - -

க ரி ஸ
ளா - - மால் மருகா ஷண்முகா




திருக்குற்றாலம்
5—3—52

அருமை......

கம்பரைக் — கடைசிப் பாகங்களைத் தான் — அலசிக் கொண்டிருக்கிறேன். எல்லாரும் பாராட்டுகிற பாடல்களை, எத்தனையோ பாடல்களை, 'தள்ளப்பா தள்ளு' என்று சொல்ல வேண்டியிருக்கிறது. அப்போதெல்லாம் உன் ஞாபகந்தான் வரும். நீயும் உடனிருந்து பார்த்தால் எவ்வளவு சகாயமாய் இருக்கும் என்று எண்ணுவதுண்டு. "ஸ்டைல்" "கம்பர் ஸ்டைல்" என்றெல்லாம் இருக்கின்றன. ஒருவருக்கும் அவைகள் விளங்குகிறதில்லை. அவர்களிடம் இடைச் செருகல்களைச் சொல்லி என்ன பயன்?

"மாயா ஜனகப் படலம் படலம்" என்று மாரடித்துக் கொள்கிறார்கள். அது ஒரு படலமா? மாயா சீதைப் படலம். பிறகு மாயா ராமன், மாயா லக்ஷ்மணன், மாயா பரதன், மாயா கோசலை, மாயா சுமித்திரை என்றெல்லாம் புறப்பட்டுப் புற்றீசல் போல வரவேண்டியதுதானே. மாயா ஜனகப் படலத்திலுள்ள பாடல்களைப் பார்த்தால் இரண்டு கை காணாது!

தமிழின் அற்புதமான ரஸங்கள் ஆங்காங்கு அழகாய் ஓடிக் கொண்டிருக்க, அதைப் பருகாமல் கடல் தண்ணீரையோ கானல் நீரையோ பருகிப் பருகித் திருப்திப் பட்டுக் கொண்டிருக்கிறார்கள்!

டி.கே. சிதம்பரநாதன்



# 'அனஸின்'

வில்லைகளில் கலந்துள்ள **நான்கு** மருந்துகளால் உங்கள் வலியை நிவர்த்தி செய்து கொள்ளுங்கள்

'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசைநார்களில் நோவு இவற்றை நீக்கும்.

அனஸினில் அடங்கிய மருந்துகள் :—

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடைல்ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் நிறுத்துவதற்கு உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' ஜீரணத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல் வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.




லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.



# இதய ரேகை

(சென்ற வாரத் தொடர்ச்சி)

ஜிப்ஸிக் குறவன் இந்தக் கூச்சலைப் பொருட்படுத்தவில்லை. என் கையைத் தன் இரு கரங்களாலும் இறுகப் பிடித்துக் கொண்டு ஆர்வத்துடன் கெஞ்சிக் கேட்டான்: "ஜார்ஜ், அது உங்களுக்கு எப்படித் தெரிந்தது!"

குருட்டுப் போக்காக நான் சொன்னது எப்படியோ சரியாகிவிட்டது என்பதைத் தெரிந்து கொண்டேன். என் ஆனந்தத்தை அடக்க முடியவில்லை. "நீ ஒரே ஒரு கேள்விதானே கேட்கலாம்; இப்போது மீண்டும் கேட்கிறாயே!" என்றேன்.

"ஜார்ஜ், என்மீது சற்று இரக்கம் காட்டுங்கள். பத்தே பத்து நிமிஷம்தான். நான் சொல்வதைத் தயவுசெய்து காது கொடுத்துக் கேளுங்கள்" என்று கெஞ்சினான் குறவன்.

அவன் கண் பார்வையில் அளவற்ற சோகமும் அர்த்த புஷ்டியும் இருந்தன. அவனது பருத்த சரீரம் வலுவற்று கொடிக்கு விழுவது போல் இருந்தது. எனக்கு அவனிடம் இரக்கம் உண்டாயிற்று. அந்த அறையில் கூடியிருந்தவர்களில் யாரை ஏமாற்றினாலும் அவனை நான் ஏமாற்ற விரும்பவில்லை. எனவே "சரி" என்று சொல்லி நான் அவனுடன் கூட வெளியே வந்தேன்.

ஜிப்ஸிக் குறவன் முதலில் பேச ஆரம்பித்தான்: "ஜார்ஜ், நீங்கள் சொன்னது சரிதான். நான் கலியாணம் செய்து கொண்டிருந்தால் இரத்தம் சிந்தித்தான் இருக்கும்" என்றான்.

அவன் குரலில் அழுகைத் தொனி இருந்தது. "உன் சோகக் கதையை நீ என்னிடம் சொல்ல வேண்டுமென்ற கட்டாயம் இல்லை, அப்பா! நான் ஆற்றில் மிதந்துவரும் பூவைப் போல் நிம்மதியாக வாழ்க்கை நடத்தி முடிக்க விரும்புகிறேன். துக்கம் இன்னதென்று தெரிய வேண்டிய அவசியமே ஏற்படா விட்டால் அதுவே எனக்குப் பெரும் ஆனந்தம்" என்று நான் பதில் சொன்னேன்.

அவன் என்னையே உன்னிப்பாகச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, தன் தலையை அசைத்தான். நீங்கள் துக்கம் என்றால் என்ன என்பதைத் தெரிந்து கொள்ளத்தான் போகிறீர்கள்; அதுவும் அயல் நாட்டுக்கு வந்திருக்கிறீர்கள் அல்லவா! அந்நிய நாட்டுப் பெண்மீது நீங்கள் காதல் கொள்ளவும் நேரலாம். உடனே துக்கம் என்ன என்பதையும் தெரிந்து கொள்வீர்கள். எல்லாக் காதலுமே துன்பந்தான். உங்கள் தேசப் பெண்மணி கூட நீங்கள் காதல் கொள்ளத் தொடங்கினதும் வேறு மனுஷியாகி விடுவாள். அவள் உங்கள் கைக்கு எட்டும் பெண்ணாக இருக்க மாட்டாள்" என்று ஜிப்ஸி ரூடி (இதுதான் அவன் பெயர்) புதிர் போட்டான்.

"நீ சொல்வது அதிசயமான தத்துவமாயிருக்கிறதே!" என்றேன். அதற்கு அவன் கூறிய மறுமொழி என்னைத் திகைக்க வைத்தது.

"என்னடா இது ஒரு ஜிப்ஸிக் குறவனுக்கு இதெல்லாம் எப்படித் தெரிந்தது என்று நீங்கள் ஆச்சரியப்படுகிறீர்கள் போலிருக்கு. கலியாணமான பின் நாங்கள் புருஷனும் மனைவியும் வெகு விசுவாசமாக இருப்போம். இந்த மாதிரியான எண்ணங்கள் எல்லாம் எங்களுக்கு அவசியமில்லை. வாஸ்தவம்தான். ஆனால் நான் ஒன்று சொன்னால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள்; நான் இது சம்பந்தமாய் எவ்வளவோ புத்தகங்கள் படித்திருக்கிறேன். நான் அவைகளை வாசிக்காமல் இருந்தால் எவ்வளவோ புண்ணியமாக இருந்திருக்கும்" என்று ரூடி கூறினான்.

"ஏன், நீங்கள் எல்லாருமே இயற்கையாகவே உணர்ச்சி உள்ளம் படைத்தவர்கள்தானே! உங்களுக்கு பிரிட்டிஷ்காரர்கள் புஸ்தகம் மூலம் காதல் துறையில் என்ன போதிக்க முடியும்!"

"ஜார்ஜ், நீங்கள் நினைப்பது தவறு. எங்கள் ஜாதியாரைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் புஸ்தகங்களில் எழுதியிருப்பதைப் படித்து விட்டு நீங்கள் இந்த மாதிரி எல்லாம் நினைக்கிறீர்கள். உணர்ச்சிமிக்க ஜிப்ஸிப் பெண்கள் நிலாவெளிச்சத்தில் அந்நிய ஆடவர்களுடன் காதல் புரிவார்கள் என்று நம்பியிருக்கிறீர்கள். அது முற்றிலும் தவறு. விஷயம் நேர்மாறாகும். வேண்டுமானால் அந்நிய ஜாதி ஆடவர் யாராவது அந்த நோக்கத்துடன் ஜிப்ஸிக் குறப் பெண்களை வந்து அணுகட்டும், பார்க்கலாம். அவனுடைய காதல் லீலை கன்னத்தில் அறையுடன் தான் முடியும்."

தேபேஷ் தாஸ் ஐ.ஸி.எஸ்.

"சரி, அப்படியானால் ஏன் நீ வருந்துகிறாய்?"

"அதுதானே என் கவலையாகி விட்டது" என்று அவன் புதிர் போட்டான். "நாங்கள் காதல் கொள்வதில்லையே, கலியாணம் அல்லவா செய்து கொண்டு விடுகிறோம். ஆனால் நான் அதற்கு முற்றிலும் விரோதமாகக் காதல் அல்லவா கொண்டு விட்டேன்!"

"ஓகோ, அப்படியா! காதல் கொண்டாயாக்கும். காதல் கொண்டதும் உன் இருதய தேவி உன்னை விட்டு வெகு தூரம் சென்று உனக்கு அந்நியளாகி விட்டாளாக்கும்!" என்று நான் விஷயத்தை உணர்ந்து கொண்டவன் போல் பேசினேன்.

ரூடி சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டுப் பதில் சொன்னான்: "இல்லை, இல்லை, அவள் அசலாயிருந்ததால்தான் நான் காதல் கொண்டேன். அவள் அந்நிய ஜாதிப் பெண். மிக அழகான பெண்; முன்பின் தெரியாதவள்."

ஒரு கணம் எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை.

மீண்டும் அவன் பேசத் தொடங்கினான்: "அவள் உங்களைப் போல் நாகரிகம் படைத்த ஒரு ஜாதியைச் சேர்ந்தவள். அவள் ஒவ்வொரு விநாடியும் நவநாகரிகமடைந்து கொண்டே வந்தாள். ஒவ்வொரு விஷயத்திலும் அவளிடம் புதுமை மிளிர்ந்தது. அவளை அடைய வேண்டுமானால் நான் சதா பெரு முயற்சி செய்து கொண்டே இருக்க வேண்டும். அவ்வளவு புதுமையுடையவள் அவள். அவளை நான் ஒரு தடவை 'கலியாண முத்தம்' கொடுத்து என் பெண்டாட்டியாக ஆக்கிக் கொள்ள முடியாது. எங்கள் ஜாதியில் அது வெகு சுலபமாக முடியும்."



"சரி, நீங்கள் இருவரும் கலியாணம் செய்தால் ரத்தம் கெடும் என்றும் சொன்னாயே, அது எப்படி என்பதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே" என்று பேச்சை முடிப்பதற்காக ஒரு கேள்வியைப் போட்டேன்.

அவன் தன் ஆழ்ந்த சிந்தனையிலிருந்து மெல்ல விடுபட்டான். ஏதோ வலிய நிலையிலிருந்து மெல்ல மெல்ல உணர்ச்சிக்கு வருபவன் போல் அவன் கண்ணை விழித்துத் தன் அந்தரங்கத்தைக் கூற ஆரம்பித்தான்.

"நாங்கள் பகலில்தான் கலியாணம் செய்வோம். உள் வட்டத்தில் சிறு பிள்ளைகள் நிற்பார்கள். அவர்களைச் சுற்றி மற்றொரு வட்டமாகப் பையன்களும் பெண்களும் நிற்பார்கள். கடைசி வட்டத்தில் பெரியவர்கள் நிற்பார்கள். உள் வட்டத்தில் மணப்பெண்ணும் மாப்பிள்ளையும் நிற்பார்கள். இருவரும் தங்கள் கைகளை நீட்டிக் கொள்வார்கள். பெண்ணின்

வலது உள்ளங் கையில் சிறிது ரத்தம் வரும்படி கத்தியால் சிறு கீறல் போடப்படும். அதே போல் மாப்பிள்ளையின் இடது கையிலும் கீறி விடுவார்கள். பிறகு அந்த இருவர் உள்ளங் கைகளும் ஒன்றாகச் சேர்த்து ஒருவர் இரத்தம் மற்றொருவர் உடலில் சேரும்படி இறுக்கிப் பிடிக்கப்படும். ஏழு கன்னிப் பெண்கள் அவ்விருவர் கரங்களையும் பட்டுச் சரடால் கட்டுவார்கள். இருவரும் பிறகு புனிதமான 'கலியாண முத்தம்' கொடுப்பார்கள். இனி எப்போதும் நீ எனக்கு, நான் உனக்கு என்பது தான் அதன் அர்த்தம்.''

''ஆகா! எவ்வளவு அர்த்தபுஷ்டியான கலியாணச் சடங்கு!'' என்று நான் வியப்புடன் கூறினேன். நான் அதைப் பாராட்டினேன்.

ஆனால் ரூடியின் மனம் கன்றி விட்டது. ''இம்மாதிரி ரத்தம் கொட்டிக் கலியாணம் செய்ய வேண்டியிருந்ததால்தான் நான் அவளைக் கலியாணம் செய்ய முன் வரவில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா! நான் துக்கத்துடன் வீட்டை விட்டுக் கிளம்ப வேண்டியதாகி விட்டது. எனக்குக் கல்யாணமும் ஆக வில்லை. காதலியும் கிடைக்க வில்லை.''

''பிறகு!'' ஒரே ஒரு வார்த்தைதான் சொன்னேன். ஆனால், இதில் எவ்வளவு கேள்விகள் அடங்கியிருந்தன!

''அவளை நான் முதல் முதலாக அத்திப்பழம் பொறுக்கும்போது சந்தித்தேன். நானும் அத்திப்பழம் பொறுக்கிக் கொண்டிருந்தேன். அத்திப்பழ ஜாம் செய்வதற்கு ஒரு புது முறையை நான் கற்றுத் தருவதாகச் சொன்னதன் பேரில் அவள் என் கூடாரத்துக்கு வந்தாள். அவளுக்கு அதைக் கற்றுக் கொடுப்பது எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. உடனே நான் அவளுக்குப் பலவித பக்ஷணங்களையும் கறி வகைகளையும் செய்யும் வழிகளைக் கற்றுக் கொடுப்பதாகச் சொன்னேன். அப்படி ஏன் சொன்னேன்!''

தானே தனக்குள் பேசுவது போல அவன் பேசினான். ''அவள் அழகுள்ள ஒரு அந்நியப் பெண்ணாயிருந்ததால் அப்படிச் சொன்னாய் போலிருக்கு'' என்று நான் அவன் கேள்விக்குப் பதில் சொல்ல முயன்றேன்.

''இல்லை, இல்லை. மற்ற ஜாதிப் பெண்கள் எல்லாருமே அந்நியப் பெண்கள்தானே. குதிரைகள் பூட்டிய கூடார வண்டி வரிசைகள் எந்த ஊருக்குள்ளே புகுந்தாலும் சரி அங்குள்ள பெண்களுக்கு மனத்தில் ஒரு எழுச்சி ஏற்பட்டு விடுகிறது. அவர்கள் எங்கள் கூடாரங்களைச் சுற்றிச்சுற்றி வருவார்கள். நாங்கள் எப்படி வாழுகிறோம் என்பதைப் பார்க்க விரும்புவதாகச் சாக்குப்போக்குக் கூறுவார்கள். அப்படிக் கூறிக்கொண்டே எங்களை வளைய வளைய வருவார்கள். ஆனால், நாங்கள் அவர்களைத் தேடி அலைய மாட்டோம்.''

''நாங்கள் நெடுகச் சுற்றித் திரிகிறவர்கள் ஆச்சே; ஒரு இடத்தில் நிலைத்து இருக்கமாட்டோம். எங்கள் மனமும் எதிலும் நிலைத்து நிற்பதில்லை. காதல் லீலைகளுக்காக ஆசை பிடித்தலையும் உங்கள் நாகரிகப் பெண்கள்மீது கூட நாங்கள் நியாயமாக ஆசை வைப்பதில்லை. ஆனால் அவர்களுக்கோ என்றால், ஆவல் அதிகம்; எங்கள் கூடார வாழ்க்கைக்கு மத்தியில் வந்திருந்து ஒரு கப் தேநீராவது குடித்தால் தான் அவர்களுக்கு மனம் திருப்தியாகும்.''

அவன் சொல்லிக் கொண்டே போனான். பொழுதும் போய்க் கொண்டே இருந்தது. ''சரி நடந்ததைச் சொல்லு'' என்று அவனைச் சிறிது நெருக்கினேன்.

''நடந்தது என்னவா! என்ன நடக்கும்! எமிலி என் கண்ணுக்கு ஒரு சாதாரணப் பெண்ணாகத் தோன்றவில்லை; ஒரு பெண்மணியாகத் தோன்றினாள்; அவள் ஒரு வெறும் ஸ்திரீயல்ல; அவள் ராணி.''

''சரி, சரி. அந்த மனநிலையில் என்ன நடக்குமோ அது நடந்தது; அப்படித்தானே!'' என்றேன், நான்.

ரூடி பொறுமையை இழந்து விட்டான் போலிருந்தது. ''இல்லை. உங்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. கலியாணம் ஆகாதவரையில் காதல் விளையாட்டு விளையாடுவதில் தவறொன்றும் இருப்பதாக நாங்கள் கருதவில்லை. எமிலியை நான் வெறுமனே ஒரு பெண்ணாகக் கருதி யிருந்தால் அப்போதுகூட விஷயம் சிக்கலாயிராது. ஏதோ கைக்கு எட்டிய சரக்காகக் கருதி ஒன்றிரண்டு நாள் உல்லாசமாக அவளுடன் ஊடாடியிருப்பேன் பிறகு மூன்றாம் நாள் எங்கள் வண்டிகள் கிளம்பும் போது நானும் போய் விட்டிருப்பேன்.''

அவன் உணர்ச்சிகளை அவன் போக்குப் போல் நானும் உணர்ந்துகொள்ள முயன்றேன். அதை எடுத்துச் சொல்கையில் எனக்கே சிறிது கவித்துவமும் வந்து விட்டது. ''நீ அவளைக் காதலிக்கிறாய் என்பதை உணர்ந்ததும் அவள் வானத்து நட்சத்திரமாகி விட்டாள்; நீ எட்டிப் பிடித்து இன்னதென்று அறிய முடியாத தேவதையாகி விட்டாள். உன் காதல் உனக்கும் அவளுக்கும் ஒரு இணைப்புப் பாலத்தை அமைப்பதற்குப் பதிலாக ஒரு தடைச் சுவரை வார்த்து விட்டதாக்கும்!'' என்று நான் கேட்டேன்.

''ஆமாம். நீங்கள் சரியாகச் சொல்லி விட்டீர்கள். அதுமுதல் அவள் ஒரு அபூர்வ சோபையுடன் விளங்கினாள். அவள் ஆழங் கண்டு பிடிக்க முடியாத, அடியும் உச்சியும் எட்டாத ஒரு மாய சக்தியாகி விட்டாள். அவளது பிரகாசமான வெள்ளைநிற உடம்பின் உள்ளே பதுங்கிக் கிடந்த அவள் நெஞ்சத்தின் நினைப்பை எல்லாம் எட்டிப் பிடிப்பதற்கு என் இரு கைகளும் ஒரு நெஞ்சும் போதாது போல இருந்தன. அவள் நீலக் கருவிழிகள் இருண்ட சமுத்திரம் போல் எனக்குத் தோன்றின. சுருண்டு படிந்திருந்த அவள் கூந்தலைத் தடவி முத்தமிடுவது ஒரு அபசாரம் போல் தோன்றியது. என் கைக்கடங்கியவளாயிருந்த அவள் எல்லாக் கட்டுகளையும் மீறி என் கனவுத் தேவதையாகி விட்டாள்.''

நீர்ப்பரப்பின் மறு கரையிலிருந்த மலை உச்சியில் சந்திரன் மறையத் தொடங்கியது. எங்கும் நிலவிய நிசப்தத்துக்கிடையே ஏதோ பட்சிகளின் குரல் அவ்வப்போது ஒலித்தது.

ரூடி தன் வரலாற்றைத் தொடர்ந்தான்:

''அந்த ஊரிலிருந்து நாங்கள் புறப்பட வேண்டிய நேரம் வந்தது. எங்கள் தலைவன் எங்களுக்கு நாற்பத்தெட்டு மணி நேர சாவகாசம்தான் தந்தான். அது எனக்குத் தூக்குத்

## ஊக்கம் சக்திக்கு

வேலை செய்யும் இடத்தில்

விளையாட்டு மைதானத்தில்

கடினமான வேலை, தீவிரமான விளையாட்டு, மற்றும் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பூரண சக்தி பெற உங்கள் உணவுடன் ஏதாவது அதிகப்படி போஷாக்கை சேர்த்துக்கொள்ளுங்கள். ஏதாவது ஒரு ருசிகரமான, பரிபூரண சத்து மிகுந்த ஒரு பானம்.........அது தான் ஓவல்டின்! சந்தோஷமும், சுறுசுறுப்பும் மிகுந்த உங்களுக்கு இது இன்றியமையாததோர் ஊக்கம் ஊட்டும் பானமாகும்.

விநியோகஸ்தர்கள்:
கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ.,
(இந்தியா) லிட்.




அருந்துங்கள் ருசிகரமான

# ஓவல்டின்

ரேடியோ சிலோனிலிருந்து ஓவல்டின் அமெச்சூர் நேரங்களை கேளுங்கள்
(மீடியம்-41. 72 மீட்டர்கள்), சனிக்கிழமைகள் இரவு 8 முதல் 8-30 மணி.
(ஷார்ட்வேவ்-9520 கிலோசைக்கிள் 31 மீட்டர்கள்)
ஞாயிறுகள் இரவு 8 முதல் 8-30 வரை

IV. 460

தண்டனை விதித்தது போலிருந்தது. அவனுக்கு என் முகத்தைப் பார்த்தவுடனே என் கதை எல்லாம் தெரிந்து விட்டது. இதெல்லாம் கூடாது என்று அவன் கண்டிப்பாகக் கூறினான். மற்றவர்களைப் போல் ஜிப்ஸிப் புருஷர்கள் தங்கள் பெண்டாட்டிகளுக்குக் காலையில் காப்பி ஊற்றிக் கொடுத்துப் பள்ளி எழுச்சி பாட மாட்டார்கள். ஜிப்ஸி வாழ்க்கை நீடித்த காதல் லீலை வாழ்க்கை அல்ல. ஜிப்ஸிப் பெண்கள் கலியாணம் செய்வதெல்லாம் கணவன்மார்களுடன் சும்மா சல்லாபம் செய்து கொண்டே இருப்பதற்கல்ல. ஏராளமான பிள்ளைகளைப் பெற்றெடுத்தும், ஊரிலும் காட்டிலும் தங்கள் புருஷன்மாருக்குத் துணையாக இருந்தும், அன்றாட வாழ்க்கையில் வேலை வெட்டிகளைச் செய்தும் கடமைகளைச் செய்வதற்கே கலியாணம் செய்து கொள்கிறார்கள். ஜிப்ஸிப் பெண்கள் இந்தியக் காய்கறிக் கொடிகளைப் போன்றவர்களே தவிர, ஐரோப்பியப் பூஞ்செடிகள் போன்றவர்கள் அல்ல.

''எங்கள் தலைவன் எனக்கு எச்சரிக்கை செய்தான்: 'எமிலி தோட்டத்துக் கொடி. அவள் காதலிப்பாளே தவிர, பிள்ளைபெற்றெடுத்து வேலை வெட்டி செய்ய மாட்டாள். அவள் கலியாணத்தில் மலர் மாலைகளைக் கட்டித் தொங்க விட்டு, புஷ்பங்களை வாரி இறைக்க வேண்டும். கையில் இரத்தத்தைக் கண்டால் அவள் மயக்கம் போட்டு விழுந்து விடுவாள் என்று.''

ரூடி அப்படியே சிந்தனைக் கடலில் ஆழ்ந்து விட்டான். அந்தக் கடலோ சலனமும் சப்தமும் இல்லாமலிருந்தது. அதிலிருந்து ஒரு பெருமூச்சுக்கூடக் கிளம்பவில்லை.

சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, அவன் மீண்டும் பேசத் தொடங்கினான்: ''ஹூம். அது ஒருகால் சரியாகவே இருக்கலாம். எமிலி தீவிரக் காதல் கொண்டவள். ஆங்கிலப் பெண்மணிகளால்தான் அவ்வளவு தூரம் உணர்ச்சி காட்ட முடியும். அதன் உண்மையைக் கவனித்தால் விஷயம் விளங்கும். அவ்வளவு தூரம் ஆசையும் உணர்ச்சியும் இல்லாவிட்டால் அவர்கள் ஏன் அந்நியரைக் கலியாணம் செய்கிறார்கள்! சில சந்தர்ப்பங்களில் அவர்கள் காதலிக்கிற ஆண்கள் அவர்களைப் புறக்கணிப்பது தெரிந்துமல்லவா அவர்கள் இந்தத் துணிச்சலான முயற்சியில் இறங்குகிறார்கள். மதம், இனம் முதலிய பெரிய தடைகளையெல்லாம் முறித்து விட்டு அவர்கள் அந்நியரை விவாகம் செய்வதென்றால், அவர்கள் எவ்வளவு தியாக உணர்ச்சியும் தைரியமும் உள்ளவர்களா யிருக்கவேண்டும்! சரி, மேலே கேளுங்கள். அன்று மாலை என் கூடாரத்தில் அவனுக்கு ஒரு கப் தேநீர் தயாரித்துக் கொண்டிருக்கையில், நாங்கள் அந்த ஊரை விட்டுப் புறப்பட்டுப் போக இருப்பதைச் சொன்னேன். என் தலைவன் என் கலியாணத்தைப் பற்றிக் கூறியதையும் சொன்னேன். நான் அவளிடம் விஷயத்தை எடுத்துக் கூறி நன்றாக விளக்கி, என் நிலைமையைப் புரிய வைத்திருந்தால் ஒருவேளை எல்லாம் சரியாய்ப் போயிருந்திருக்கும். அல்லது அவளாவது என்னிடம் தர்க்கம் செய்து, ஜிப்ஸி வாழ்க்கையை விட்டு விட்டு வந்து விடும்படி வற்புறுத்தி யிருந்திருக்கலாம்

நாங்கள் எங்கள் தலைவனிடம் சென்று சொன்னால் "கலியாண முத்தம்" கொடுத்து விவாகம் பூர்த்தியாகியிருக்கும். ஆனால், என்னால் ஒரு வார்த்தை கூடப் பேச முடியவில்லை. அவன் விட்ட கண்ணீர் என்னை அந்த அறையிலிருந்தே வெளியே போகும்படி செய்து விட்டது. நான் என் குதிரையின் உடலைத் தேய்த்து விடுவதில் ஈடுபட்டு விட்டேன். அவன் வெளியே போனது கூட எனக்குத் தெரியாது."

"அப்படியானால் நீ ஏன் அவனை மறுநாள் காலையில் சந்திக்கவில்லை!" என்றேன்.

"மறுநாள் காலை விடியும்போது நாங்கள் அந்த ஊரில் இல்லை. நான் கண்விழித்தபோது எங்கள் வண்டி வரிசைகள் அதிகாலை முதலே புறப்பட்டுப் போய்க் கொண்டிருந்ததாகத் தெரிந்தது. என் வண்டி அந்த வரிசைகளின் மத்தியில் இருந்தது."

"பிறகு!"

"பிறகு என்ன! ஒன்றுமில்லை. உருவாகாத என் குடும்பத்தில் குல விளக்கு; — குடும்ப விளக்கு என்று கூறுவதற்கு என் கனவுலகத் தேவதை மனைவியாக வில்லையே,—என் வீட்டுக்கு வந்திருந்து என் மனைவியாகச் சம்மதிப்பாளா என்று அவனிடம் கேட்க வில்லையே."

"ஏன் நீ கேட்க வில்லை!"

"நீங்கள் என்னை இன்னும் தெரிந்து கொள்ள வில்லையே. நான் காதல் விளையாட்டுக்கள் நடத்துவதற்காக அழைத்து வந்த எமிலியாக இருந்தால், அவளிடம் நான் தைரியமாகக் கேட்டிருப்பேன். ஆனால், நான் அன்போடு மனமாரக் காதலிக்கும் எமிலியிடம் நான் எப்படி அதைக் கேட்பேன்! உன் வாழ்நாளை எல்லாம் இந்த ஊர்சுற்றி மனிதனுடன் பிணைத்துக் கொள் என்று நான் எப்படிக் கூறுவேன்! நிதரிசன வாழ்க்கையில் அவள் எவ்வளவுக் கெவ்வளவு என் உடலோடு ஒட்டினாளோ அவ்வளவுக் கவ்வளவு என் ஆதர்ச வாழ்க்கையில் அவள் அகலச் சென்று கொண்டிருந்தாள். ஆயினும், அவளுக்காக நான் மிகவும் கவலைப்படுகிறேன். நீங்கள் எல்லாம் உங்கள் காதலை நாகரிகப் போர்வை போட்டு மறைத்துக் கொள்கிறீர்கள்; மீண்டும் மற்றொரு பெண்மீது காதல் கொள்கிறீர்கள்; அதற்கு ஏதோ ஒரு சமாதானம் கண்டு பிடித்துக் கூறிக் கொள்கிறீர்கள். எங்களுக்கு அத்தகைய சமாதானம் ஒன்றும் கிடையாது. வருத்தம்தான் உண்டு. நாங்கள் கலியாணம் செய்து கொள்வதெல்லாம் குடும்ப விருத்திக்குத்தான். அதிலேயே நாங்கள் காலூன்றி விடுகிறோம். கீழே தரையும் மேலே கூரையும் உள்ள ஸ்திரமான வீடில்லா விட்டாலும், ஊரூராய்த் திரிகிற வண்டிகளில் கித்தான் சாக்குப் போட்டு மூடிய கூடாரங்களில் வாழ்க்கை நடத்தினாலும், எங்கள் குடும்பம் ஸ்திரமடைந்து விடுகிறது. அதுதான் எங்களுக்கு நிலையான செல்வமும் ஆகிவிடுகிறது. எனக்கு அந்த பாக்கியம் கிட்ட வில்லையே!"

நான் அவன் மனத்தைத் தேற்றநினைத்தேன். "நீ ஏன் அதற்கு இவ்வளவு வருத்தப்பட வேண்டும்! உன் அன்புக்கு அந்தப் பெண் தன்னைத் தியாகம் செய்து உன்னைப் போன்ற நாடோடி வாழ்க்கைக்கு வரவேண்டிய நிலையில் இல்லாமல் காப்பாற்றினோமென்று திருப்தி



கோலாலம்பூரிலிருந்து (மலேயா) வெளியாகும் ''தமிழ் நேசன்'' என்ற பிரபல தினசரிப் பத்திரிகையின் உதவி ஆசிரியர் ஸ்ரீ பை. கி. ஸ்ரீனிவாச ஐயங்காரின் குமாரரும், கோலாலம்பூர் வாரம் இருமுறைப் பத்திரிகையான ''சங்கமணி''யின் ஆசிரியருமான பைரோஜி நாராயணனுக்கும், செள. வசந்தாவுக்கும் 9–12–55ல் பொன்மலையில் திருமணம் விமரிசையாக நடந்தேறியது. மணமகள், பம்பாய் இண்டஸ்ட்ரியல் பினாஸ்டிக் கார்ப்பொரேஷனின் ஜெனரல் மானேஜர் ஸ்ரீ என். கே. சாரியின் புதல்வி. வாழ்க, பைரோஜி நாராயணன் – வசந்தா!

---

கொள்ளலாமே. அவள் அவளுடைய சூழ்நிலையில் வாழட்டும்; நல்லதுதானே!'' என்றேன்.

அதற்குப் பதில் சொன்ன அவன் குரலில் உணர்ச்சியே இல்லை. ''அவளுக்கு நான் அந்தச் சந்தர்ப்பத்தை அளிக்கத்தானே செய்தேன்; வாதாடவோ, போராடவோ இல்லையே. ஆனால் அப்படி விட்டுவிட்டோமே என்று நான் என்னைச் சபித்துக் கொள்கிறேன். அவ்வளவுதான். ஏன் தெரியுமா!''

கடைசிக் கேள்வியைக் கேட்கும்போது மாத்திரம் அவன் குரலில் கடுமை தொனித்தது. நானும் ஒரு புது நிலைமையைச் சமாளிக்கத் தயாராயிருந்தேன்.

''அவளுக்கு நான் அப்படி அளித்த சந்தர்ப்பத்தால் அவளுக்கு என்ன பலன் கிடைத்தது! அவள் தன் இயல்பான சூழ்நிலையில் சந்தோஷமாக வாழவா செய்தாள்! ஒரு ஜிப்ஸிக் குறவனுடன் காதல் ஊடாட்டம் நடத்தாமலிருந்ததால் அவளுக்கு லாபம் ஏதாவது கிடைத்ததா! இல்லை. இன்று காலையில் அவளை நான் எங்கள் வண்டி வரிசைகளுக்குப் பக்கத்தில் கண்டேன். பசியால் வாடும் இரண்டு குழந்தைகளை ஒரு தள்ளுவண்டியில் வைத்துத் தள்ளிக் கொண்டு வந்தாள். மற்றொரு குழந்தை அவள் கொடுக்கைப் பிடித்துத் தொங்கிக்கொண்டே வந்தது. பசியும் வறுமையும் துயரமும் அவர்கள் முகத்தில் எழுதி ஒட்டியிருந்தன. என் மனத்துக்கிசைந்த அந்த ராணி அப்பிள்ளைகளுக்கு இலவசப் பொழுது போக்குக் காட்டுவதற்காக எங்கள் வண்டிகளுக்கருகே அவர்களை இட்டு வந்திருந்தாள். அவளே கந்தலும் அழுக்குமான துணியைத்தான் கட்டிக் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்தாலே போதும். அவளது சோக வாழ்க்கையைத் தெரிந்துகொள்ளலாம்.''

நான் மௌனமாக இருந்தேன். ஜூடியும் சிறிது நேரம் அப்படியே இருந்தான்.

ஆனால் அவனால் வெகு நேரம் அப்படியிருக்க முடியவில்லை. ''அதுகூட எனக்கு அவ்வளவு வருத்தத்தைத் தரவில்லை. இதுதான் அவள் விதி என்றால், அவள் ஜிப்ஸிக் குறவனின் மனைவியாய் விட்டாலும் அப்படித் தானிருப்பாள். ஆனால், எமிலியிடமிருந்த பெருந்தன்மையான கௌரவப் பண்பு—அவளை நான் ராணி என்று கூறுவதற்கிருந்த பண்பு — மறைந்து மடிந்து போய் விட்டிருந்ததால்தான் எனக்கு அதிக வருத்தம் ஏற்பட்டு விட்டது. மீண்டும் அவள் என் கைப் பிடிக்கு அருகில் வந்தாள். என்ன சோதனை! கடவுளே!''

நான் அவன் கருத்தை ஒப்புக் கொள்ளவில்லை. ''முன்பு பெருந்தன்மையாயிருந்தவள் எப்பொழுதும் பெருந் தன்மையாகவே இருப்பாள். காதல் எப்படி மாறும்!''

''அதுதான் இதில் சோகக் கதை. பெருந்தன்மையுள்ள ராணி அவளிடமில்லை; அவள் இறந்து விட்டாள்.''

அவன் உணர்ச்சி வசப்பட்டு விட்டான். ''நான் மெதுவாக அவள் பையன் கையில் ஒரு பவுனைச் செருகினேன். நான் ஒரு வார்த்தை கூடப் பேச வில்லை. அவளுக்கு நான் யார் என்பது தெரிய வேண்டாம். அவள் மனம் கூச வேண்டாம் என்றே நான் நினைத்தேன். ஆனால் அவள் என்ன செய்தாள், தெரியுமா! சிறிது தூரம் நடந்து சென்றபின் அவள் பையன் கையை விரித்து என்ன இருக்கிறது என்று பார்த்தாள். பவுனைப் பார்த்துவிட்டு என் பக்கமாகத் திரும்பிநின்று சிரித்து, எனக்கு முத்தம் கொடுக்கிற பாவனையில் தன் கையை முத்தம் இட்டுக் கொண்டாள். அது என்னைச் செருப்பால் அடிப்பது போலிருந்தது. நான் ஓடோடிச் சென்று என் கூடாரத்துக்குள் புகுந்துவிட்டேன். முன்பு, நான் அவள் காலடியில் என் இருதயத்தை எடுத்து அர்ப்பணிக்க விரும்பிய கூடாரம் அதுதான்; அவளை நான் முத்தமிட்டால் அது அபசாரம் என்று கருதி ஒதுங்கியிருந்த இடமும் அதுதான்.''

ஜிப்ஸிக் குறவன் பேசி நிறுத்தியதும் நான் சிந்தனையில் ஆழ்ந்தேன். அவன் அமைத்திராத ஒரு குடும்பத்தில், மனைவியாக வாய்த்திருக்கக்கூடிய ஒரு ராணியை நினைத்து ஏன் அவன் இப்படி உருகவேண்டும்! தன் வாழ்க்கையில் அடியெடுத்து வைத்திராத ஒரு பெண் வாழ்க்கையிலிருந்து போய் விட்டாளே என்று ஏன் ஏங்கி உயிர் விடவேண்டும்! இவ்வளவு தூரம் நுட்பமாய் ஆராய்ந்து பார்க்கக்கூடிய அறிவு அவனுக்கு எங்கிருந்து கிடைத்தது! மனித சமுதாயத்தின் எந்தப் பள்ளிக்கூடத்தில் அவன் இதைக் கற்றுக் கொண்டான்!

இவ்வளவு கேள்விகளையும் நான் அவனிடம் கேட்க நினைத்தேன். ஆனால், ஒரு கேள்வி கூடக் கேட்பதற்கு வழியில்லை. நான் தலையைச் சிறிது உயர்த்திப் பார்த்தபோது, அந்த ஜிப்ஸிக் குறவன் தன் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டே வாசல் பக்கமாய்ப் போய்க் கொண்டிருந்தான்.

நான் அவனிடம் ஒன்றும் கேட்க முடியாது. அவன் மனத்துக்கிசைந்த ராணியுடன் அவன் நடத்தவிருந்த குடும்ப வாழ்க்கை ஆரம்பமாவதற்கு முன்னமேயே மறைந்து விட்டதைப் போல் அவனும் மறைந்து விட்டான்.






எஸ்ட்ரெலா பாட்டரீஸ்

எஸ்ட்ரெல்லா பாட்டரிகள் மிகப் பிரகாசமான வெளிச்சத்தைக் கொடுப்பவை, நீடித்து உழைப்பவை, குறைந்த விலையுள்ளவை.

எஸ்ட்ரெல்லா பாட்டரீஸ் லிட்.,

பம்பாய் - டெல்லி - மதராஸ் - கான்பூர் - நாக்பூர் - கல்கத்தா.

NAS

---

# சீக்கிரத்தில் பளபளப்புடன் பிரகாசிக்க

# கிவீ

பூட் பாலிஷ்



# மாங்கல்யம்

சாரங்கனின் இதயத்தின் அடித்தளத்தி லிருந்து ஒரு பெருமூச்சு பொங்கி வெடித்தது.

மனைவியினால் மதிக்கப்படாத கணவனாக உயிர் வாழ்வதைவிடக் கொடிய வேறு துயர் இருக்க முடியாதென்றே அவன் கருதினான். உயிரை அவன் பெரிதாக மதிக்கவில்லை. ஆனால் உயிரைவிட மேன்மையாக மற்றொரு பொருளை மதித்தான். அதுதான் அவனுடைய அன்னை லக்ஷ்மியின் அன்பு.

அந்த அன்புக்காகவே அவன் தன் ஊனத்தையும், மனைவியின் அலட்சியத்தையும் சகித்துக் கொண்டு இவ்வுலகில் உயிர் வாழ்ந்தான்.

அலட்சியம்!

அதற்கும் ஒரு அளவிருந்தால் அவன் சந்திராவை என்றோ மன்னித்திருப்பான்! இன்றும் தான் என்ன! அவள் ஒரு வார்த்தை மன்னிப்புக் கேட்டால் போதும்! அவளை ஏற்றுக் கொள்ளுவதற்குத் தயாராகவே யிருந்தான். ஆனால் அவள் தயாரா யிருந்தால்தானே!...

* * *

அவனது இடது கால் வெட்டி யெடுக்கப்பட்ட பின்னர் சந்திரா அவனோடு பழகுவதையே வெறுத்து ஒதுக்கிவந்தாள். சாரங்கன் ஒரு இனிய உணர்ச்சி நிறைந்த மனிதன். சிறந்த ரசிகன். தானும் ரசித்துப் பிறரையும் ரசிக்கச் செய்யும் இன்பமான மனோ பக்குவமும் உடையவன். அப்பேர்ப்பட்டவன் தன் மனைவியை மனைவியாகவா மதித்தான்! கிரீடத்திற் சூட்டிக் கொள்ளும் விலை மதிப்பற்ற மாணிக்கமாகவே எண்ணி, கண்ணின் கருவூலமெனக் காப்பாற்றி வந்தான். மாணிக்கமெனத் தான் நினைத்தவள், அதே மாணிக்கத்தைத் தாங்கும் பாம்பு போல மாறுகிறாள் என்பதை உணர்ந்த உடனேயே அவனுக்கு வாழ்க்கை சப்பிட்டு விட்டது.

கால் ஒடிந்த நிலையில் வீடு வந்து சேர்ந்த அவனைக் கண்டதும் அவள் முகம் எப்படித் தான் வெறுப்புக் கனலை அள்ளி வீசியது! ஐயையோ! அதை இப்பொழுது நினைத்தாலும் கூட இதயம் சங்கடப் படுகிறதே!

அவனுக்கு நேர் மாறானவள் அவன் அம்மா!

அம்மாவா அவள்! தெய்வம். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வமென்ற மூதுரையின் இலக்கண வடிவம். அன்பின் வற்றாத பிறப்பிடம்!

அந்த அன்னையின் இதயத் துடிப்பைக் கண்

சடக்கெனத் திரும்பிய சந்திரா வேண்டா வெறுப்புடன் பேப்பரை யெடுத்து அவனருகில் வீசியெறிந்து விட்டு, "இனி நான் இங்கிருந்து போகலா மல்லவா!" என்றாள். அதில் ஏதோ உள்ளர்த்தம் ஒளிப்பது போலத் தோன்றியது சாரங்கனுக்கு.

"எங்கே!" என்றான் சாரங்கன் வியப்புடன்.

"என் அப்பா வீட்டுக்கு!" என்று அழுத்தமாகப் பதில் வந்தது.

"தனியாகவா!" என்றான் சாரங்கன். அப்பொழுதும் அவள் தன்னை நிரந்தரமாகப் பிரிய உத்தேசித்திருக்கிறாள் என்பதை உணர்ந்து கொள்ள மாட்டாதவனாக இருந்தான்.

சந்திரா சிரித்தாள்.

"எனக்கென்ன! திடமாகவே யிருக்கிறேன்! துணையெதற்கு! ஸ்டேஷனுக்கு வரச் சொல்லி அப்பாவுக்கும் கூடத் தந்தி அடித்து விட்டேனே!" என்றாள்.

'எனக்கென்ன துணை! நானென்ன நொண்டியா! முடமா!' என்ற பாவனை அவளது பேச்சில் சொல்லாமல் விளங்க வைக்கும் சொல்லாகச் சுட்டது.

"எல்லாம் முன்னேற்பாடாக நடத்தி விட்டாய் போலிருக்கிறது!" சாரங்கனின் குரல் அனலைக் கக்கியது. மைந்தனின் விபரீதக்



குரலைக் கேட்டதும் உள்ளே காரியமாக இருந்த லக்ஷ்மி ஓடோடியும் வந்தாள்.

"ஆமாம்! நடத்தி விட்டேன்! எனக்கு இனிமேல் இங்கே என்ன வேலை!" என்றாள் சந்திரா ஏகத்தாளமாக.

"அப்படிச் சொல்லாதே, சந்திரா! சாரங்கன் உன்னுடைய பொருள். அன்னையை விட அன்பாக அவனைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு உன்னைச் சார்ந்தது. அவனை இந்தமாதிரி பரிதாபமான நிலையில் விட்டுப் பிரிய உனக்கு எப்படி மனம் துணிந்தது!" என்று அன்பொழுகத் தனக்குப் புத்தி சொல்ல வந்த மாமியாரை வெறுப்புடன் நோக்கினாள் சந்திரா.

"அத்தை! என் விஷயத்தில் நீங்கள் வீணாகத் தலையிட்டு உங்கள் மனத்தைப் புண்படுத்திக் கொள்ளாதீர்கள்! நான் சொன்னால் சொன்னதுதான். இங்கே இவரைப் பார்த்துக் கொண்டிருந்தால் ...... எனக்குப் பைத்தியமே பிடித்து விடும்."

"என்ன! என்ன சொன்னாய்!" என்று பதறியவாறே இருக்கையை விட்டு எழுமுயன்றான் சாரங்கன்.

"பொறு! சாரங்கா! பொறு!" என்று தன் மகனை அடக்கினாள் லக்ஷ்மி.

"சந்திரா! நீ பேசுவது ஒரு உத்தமப் பெண்ணின் இதயத்திலிருந்து வரும் வார்த்தைகளாக இல்லை. கேட்பதற்கே எனக்கு நெருப்பாக இருக்கிறது. சாரங்கனை முழுமனத்துடன் விரும்பித்தானே நீ கல்யாணம் செய்து கொண்டாய்! விதி வசத்தினால் அவனுக்கு......."

சந்திரா குறுக்கிட்டாள்.

"அது எனக்கும் தெரியும்! அன்று பிடித்தது. இன்று பிடிக்கவில்லையென்றால் விட்டு விடுங்களேன்! இனியும் இவருடன் வாழ்வதில் என்ன இன்பம் இருக்கிறது! எடுத்ததற்கெல்லாம் ஆள் தேவையாக இருக்கும் ஒரு நொண்டிக் கணவனுடன்......"

பீரங்கியிலிருந்து விசையுடன் வெடித்த குண்டெனப் பாய்ந்தெழுந்தான் சாரங்கன். ஒரு கையால் மின்வேகத்தில் சோபாவின் விளிம்பைப் பிடித்துக் கொண்டு மற்றொரு கையால் சந்திராவை அடிக்க ஓங்கி விட்டான். அடித்தும் விட்டான். ஆனால் அடி விழுந்தது லக்ஷ்மியின் கன்னத்தில். அவள் குறுக்கே புகுந்து விட்டாள். இல்லா விட்டால் சந்திராவைத் தீர்த்துக் கட்டியிருப்பான் சாரங்கன்.

தன் அறை அம்மா மேலே விழுந்து விட்டதைக் கண்டதும் சாரங்கனின் ஆத்திரம் எல்லையைக் கடந்து விட்டது. ஓரடி முன்னே பாய்ந்து சந்திராவைத் தன் இரு கரங்களினாலும் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டான்.

"சாரங்கா!" என்ற கம்பீரமான குரலைக் கேட்டுத் திரும்பினான் அவன்.

பின்னால் அவனுடைய தந்தை நின்று கொண்டிருந்தார்.

"சாரங்கா! நீ முதலில் அவளை விடு! அவள் போகட்டும்!"

"அப்பா!"

"நானும் அதைத்தான் சொல்கிறேன், சாரங்கா! அவளை விடு! பலவந்தப்படுத்தாதே! அவளுடைய மனப் போக்கின்படி விட்டால் தானாகத் திருந்தி விடுவாள்!" என்றாள் லக்ஷ்மி.

"அம்மா!" என்றான் சாரங்கன்.

"ஆம்! அம்மாதான் சொல்கிறேன். என் மேல் ஆணை! விடு!"

சந்திராவின் கைகளைத் தளர விட்டு விட்டான் அவன்.

"சந்திரா! உன் துணிமணிகளை எடுத்துக் கொள். மாமா உன்னை ஊருக்குக் கொண்டு போய் விடுவார். நீ தனியாகப் போக வேண்டிய அவசியமில்லை. அதேபோல என்றாவது உனக்கு இந்த வீட்டுக்குத் திரும்பி வர வேண்டுமென்று தோன்றினாலும் நீ தாராளமாக வரலாம்! உம்! சீக்கிரம் புறப்படு! ரயிலுக்கு நாழிகையாகி விட்டது" என்றாள் லக்ஷ்மி. பிறகு கணவர் பக்கம் திரும்பி, "நீங்கள் சந்திராவை ஜாக்கிரதையாகக் கொண்டு விட்டு விட்டு மறு ரயிலிலேயே திரும்பி வந்து விடுங்கள்!" என்று கூறினாள். பிறகு சாரங்கனை அணைத்துப் பிடித்தவாறு அடுத்த அறைக்குள் கொண்டு சேர்த்தாள்.

அன்று போன சந்திரா அதற்குப் பிறகு திரும்பி வரவில்லை. இன்றோடு அவள் போய் மூன்றாண்டுகள் முடிந்து விட்டன. மனைவியின் அழகிய முகம் சாரங்கன் முன் வட்டமிட்டது.

"சாரங்கா! இந்தக் காற்றிலும், தூற்றலிலும் ஏனப்பா உட்கார்ந்திருக்கிறாய்! உடம்புக்கு வந்தால் என்ன செய்வது!" என்ற அன்னையின் குரலைக் கேட்டதும் தான் உணர்வு பெற்றான் சாரங்கன். அன்னையின் அன்பு பெருகும் அந்த முகத்தை நோக்கினான்.

இந்த மூன்றாண்டுகளுக்குள் அந்த முகத்தில் எவ்வளவு மாறுதல்! நரையோடிய தலையும் சுருக்கம் விழுந்த நெற்றியும் வயதை மிகைப்படக் காட்டினாலும் அன்பு...அதன் ஜ்வலிப்பு அந்த முகத்தில் அன்று போலத்தான் இன்றும் ஒளி வீசியது.

அன்னையின் கட்டளைக்குப் பணிந்த சாரங்கன் மெதுவாக எழுந்து உள்ளே வந்தான்.

கட்டையைத் தரையில் டக்-டக்-என்று ஊன்றியபடியே தன் அருமைச் செல்வம் நடப்பதைக் கண்டு பெற்ற வயிறு பற்றி யெரிந்தது. தினமும் பார்த்துப் பார்த்துப் பழகிய காட்சிதான் அது. ஆனாலும் அதைப் பார்க்கும் பொழுதெல்லாம் லக்ஷ்மியின் வயிறு



கொதித்தது. அங்கத்தைக் குறைத்த பகவான் அவனது வாழ்வையுமா குறைக்க வேண்டும்! சந்திரா நல்ல பெண்தான்! அவளது உள்ளத்தின் அடி அந்தரங்கத்திலே நற்குணம் தான் பதுங்கி யிருந்தது. ஆனால் பணக்காரப் பெருமையும், பெற்றோருக்கு ஒரே பெண் என்ற அபரிமிதமான செல்லமும், அவளைப் பெண்களுக்கே புறம்பானதொரு பெண்ணாக மாற்றி விட்டதே!......

பெற்றவளால் தன் மகனுக்கு என்ன செய்ய முடியும்! உண்பிக்கலாம், உடுப்பிக்கலாம். ஆறுதலான வார்த்தைகள் சொல்லலாம். கவனமாகப் பாதுகாத்துக் கொள்ளலாம். அன்பை அள்ளிப் பொழியலாம். ஆனால், இவைகளினால் மட்டும் இளம் ஆடவனின் உள்ளம் திருப்தி அடைந்து விடுமா!

'தலைவிதியால், நடந்து போன ஒரு விஷயத்துக்கு யாரால் என்ன பரிகாரம் தேட முடியும்!' என்ற பகுத்தறிவு அந்தப் பெண்ணிற்கு இல்லாமல் போய் விட்டதே! சாரங்கன் மட்டும் அன்று அந்த ரயிலில் போயிரா விட்டால்!...

பம்பாயில் ஒரு பிரபல மருந்துக் கம்பெனியுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளும் நிமித்தம் பம்பாய்க்குப் புறப்பட்டான் சாரங்கன். அவனுடைய அப்பா கோபாலன் ஒரு பிரசித்தி பெற்ற டாக்டர். அதோடு நகரத்திலேயே பெரிய மருந்துக்கடை வேறு வைத்திருந்தார். அவன் போன ரயில் பாதி வழியிலேயே கவிழ்ந்து விட்டது.

''லக்ஷ்மி!'' என்றார் கோபாலன். அவரது தொண்டையை யாரோ சோகத் தீயில் பொசுக்கி யெடுத்தது போல வெளி வந்தது அந்த சப்தம். தந்தியைப் பின்புறம் மறைத்துக் கொண்டிருந்தார்.

''என்ன! என்னவென்று சொல்லுங்களேன்! உங்கள் குரல் என்னமோ விபரீதமாகப் படுகிறதே!...'' என்று பதறினாள் அவள்.

''பதறாதே, லக்ஷ்மி! எதுவானாலும் நாம் பதறுவதில் பயனில்லை'' என்றவாறே தந்தியை அவளிடம் கொடுத்தார்.

அன்று அலறிப் புடைத்துக் கொண்டு, விபத்து நடந்த இடத்துக்கு ஓடினார்கள் அந்தத் தம்பதிகள். அந்தப் பயங்கர ரயில் விபத்து சாரங்கனுக்கு உயிர்ப் பிச்சையளித்தது. ஆனால் அவனது இடது காலை நன்றாக முழங்கால் வரையிலும் ஒடித்து விட்டது.

அதையும் பொறுத்தாள் லக்ஷ்மி. ஆனால் மருமகளின் புத்திக் கோணலையும் அதனால் தன் மகன் சாகாமல் செத்துக் கொண்டிருப்பதையும் அவளால் சிறிதும் பொறுக்க முடியவில்லை. அரிசி காணாத உலை நீரைப் போல அவள் உள்ளம் துயரத்தால் மறுகியது.

* * *

ஓடிப்போன சந்திராவும் அங்கே அப்படி உன்னத நிலையில் இருந்து விடவில்லை. ஆடம்பர வாழ்க்கை நடத்திய பெற்றோர்கள் காலமாகிவிடவே, மீதம் உள்ள சொத்துக்களைக் கடன்காரர்கள் பிடுங்கிக் கொண்டுபோய் விட்டனர். சந்திரா கஷ்டம் என்றால் என்ன என்பதை அப்பொழுதுதான் உணர்ந்தாள்.

சந்திரா தற்பொழுது ஏதோ ஒரு ஆபீஸில் மாதச் சம்பளத்துக்கு உழைத்து ஜீவனம் நடத்தி வருகிறாள் என்ற ரகசியம் லக்ஷ்மிக்குத் தெரிந்தது. இந்த நிலையிலும் சந்திரா இங்கே வரவில்லையே என்று லக்ஷ்மி அங்கலாய்த்தாள்.

'பழைய குணம் மாறியிருக்கலாம். மாறினாலும் கூச்சத்தினால் இங்கே வராமல் இருக்கலாம்!' என்று லக்ஷ்மிக்குத் தோன்றியது. அதையும் பரீட்சித்துப் பார்த்து விடுவது என்று எண்ணிய லக்ஷ்மி, தன் புத்திரனுக்கும் கணவருக்கும் தெரியாமலேயே ஒரு காரியம் செய்தாள்.

ஆபீஸில் அன்று காலை வழக்கம் போலத் தன் மேஜையடியில் உட்கார்ந்து 'டைப்' செய்து கொண்டிருந்த சந்திரா தன் ஆபீஸ் விலாசத்துக்கு வந்த தந்தியைக் கண்டதும் அதிர்ச்சியுற்றாள்.

''உன் கணவன் மரணப் படுக்கையிலிருக்கிறான். உடனே வந்தாயானால் அவன் முகத்தையாவது பார்க்கலாம். இல்லாவிட்டால் அதுவும் உன் பாக்கியம்தான்.

லக்ஷ்மி''

* * *

'நான் போகும் ரயில் வண்டி ஏன் விமானம் போலப் பறக்கக் கூடாது! ஐயோ! கடைசியில் பாவி அவரைப் பார்க்கவே மாட்டேனா! ஐயோ, தெய்வமே!' என்று உள்ளுறப் புலம்பினாள் சந்திரா. அடிக்கொரு தரம் மாங்கல்யத்தை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

''அத்தை!......அத்தை! ......அவர்...அவர் உடம்பு...'' என்று கதறியபடியே தன் முன் வந்து விழுந்த சந்திராவை எடுத்தணைத்துக் கொண்ட லக்ஷ்மி, ''பதறாதே, சந்திரா! சாரங்கன் சௌக்கியமாகவே இருக்கிறான்!'' என்றாள்.

அடுத்த அறைக்குள் பேப்பர் படித்துக் கொண்டிருந்த சாரங்கன் சந்திராவின் குரல் கேட்டு ஆச்சரியப்பட்டான். அவன் என்னவென்று நிதானிப்பதற்குள் அவன் காலடியில் வந்து விழுந்த சந்திரா அவனது மடியில் தன் தலையைப் புதைத்துக் கொண்டு பச்சைக் குழந்தை போல விம்மினாள்.

''அம்மா! இதென்ன! சந்திரா எப்படி இங்கு வந்தாள்! எதற்காக அழுகிறாள்!'' என்று வியப்புடன் அன்னையை நோக்கிக் கேட்டான் சாரங்கன்.

லக்ஷ்மியின் முகத்தில் அடக்கமானதொரு புன்னகை நிலவியது.

''சந்திரா! என் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு அந்தத் தந்தியை அடித்தேன். என் தந்தி உன்னை எப்படியும் இங்கே கொண்டு சேர்த்துவிடும் என்று நான் எண்ணியது வீண் போகவில்லை. நீ உன் கணவனை வெறுத்துப் போனாலும் அன்று உன்னிடம் மாங்கல்யம் இருந்தது. தைரியமாக உலவினாய்......அந்த மாங்கல்யத்துக்குக் கேடு வந்துவிட்டதென்றதும் கதறிக்கொண்டு ஓடி வந்துவிட்டாய். அந்த மாங்கல்யத்தின் மேல் வைத்திருக்கும் மதிப்பை அதற்குரியவன் மேலும் வைத்து இனிமேலாவது சந்தோஷமாக யிரு!'' என்றாள் லக்ஷ்மி, குரல் தழுதழுக்க.

சந்திராவின் கண்களில் கண்ணீர் நிரம்பியது




# கல் மனம்



ராஜாஜி

மதுகொண்டபள்ளிக்கு சுவாமியார் ஒருவர் வந்தார். மிக உருக்கமாக உபந்யாசம் செய்வார். ஊருக்கு மத்தியில் பேடராய செட்டியின் செக்கு இருந்த வெளியில் ஊர் ஜனங்கள் கூடினார்கள். சுவாமியாருக்கு மரியாதை செலுத்தி விட்டு உபந்யாசம் கேட்க உட்கார்ந்தார்கள். சுவாமியார் செக்குக் கல்மேல் உட்கார்ந்து கொண்டு ஜீவகாருண்யத்தைப் பற்றி உபந்யாசம் செய்தார். 'ஆடுகளையும் கோழிகளையும் வதம் செய்யாதீர்கள். காய்கறி உணவே நல்லது. நம் உயிர் போலவே எல்லா உயிர்களும், எல்லாப் பிராணிகளும் தேவியின் குழந்தைகள். பிள்ளைகளை இம்சித்தால் தேவி கண்ணீர் விட்டு அழுவாள். நமக்குத் துணையாக இருக்க மாட்டாள். நாம் செய்யும் பாவங்கள் தீருவதற்கு வழியில்லாமல் போகும்' என்றெல்லாம் சொல்லி உபந்யாசம் செய்தார். ஆனால் அந்த ஊரார் கேட்கவில்லை. வழக்கம் போலவே ஆடுகோழிகளை இம்சித்து வந்தார்கள்.

சுவாமியாருடைய பிரசங்கம் கல்லையும் கரைக்கும்படியாக இருந்தது. ஆயினும் ஜனங்கள் மனம் இரங்கவில்லை. உபந்யாசகரைச் சுமந்து கேட்ட பேடராய செட்டியின் செக்கு மட்டும் 'இனிமேல் நான் இந்த எள்ளை இம்சிக்கலாகாது. எள்ளுக்கும் உயிர் உண்டு அல்லவா?' என்று தீர்மானித்துக் கொண்டது.

அறுவடைக் காலம் வந்தது. குடியானவர்கள் ஏராள





மாகச் செக்கில் ஆட்ட எள் கொண்டு வந்து கொடுத்தார்கள். பேடராய செட்டியும் தன் செக்கில் ஆட்டினான். ஆனால் ஏனோ எண்ணெய் சரியாக இறங்கவில்லை. என்ன செய்தாலும் பிண்ணாக்கில் எண்ணெய் தங்கிப் போகும். இறங்காது. குடியானவர்களுக்குக் காரணம் விளங்கவில்லை. எள்ளின் குற்றம், எண்ணெய் சரியாகக் கொடுக்க வில்லை என்று பேடராய செட்டி சொன்னான். அடுத்த ஊர்ச் செக்கில் எண்ணெய்க்குக் குறைவு இல்லை. எப்போதும் போலவே விகிதப்படி அந்த ஊரில் செக்குக்காரன் எண்ணெய் எடுத்துத் தந்தான். பேடராய செட்டியின் வியாபாரம் கெட்டுப் போயிற்று. அவன் தன் மாடுகளை விற்றுவிட்டு சாமியாராய்ப் போக நிச்சயித்தான். போவதற்கு முன் தன் செக்கின் முன்னால் நின்று அதை வணங்கிப் பூஜை செய்தான். செக்கு சொல்லிற்று: "அண்ணே! ஏன் நம்மை விட்டு விட்டுப் போகிறாய்? வேண்டாம் - இனிமேல் சரியாக எண்ணெய் தருவேன். பயப்படாதே. நீ கொஞ்சம் ஜீவகாருண்யத்துடன் நடந்து கொள். மாடுகளை அடிக்க வேண்டாம். மெள்ளத் தட்டிக் கொடுத்து நல்ல வார்த்தையில் ஓட்டு. ஜீவகாருண்யப் பிரசங்கத்தைக் கேட்டால் என்னுடைய கல் மனமும் இளகிப்போகிறது. பிரசங்கம் வேறு இடத்தில் போடச் சொல்" என்று செக்கு செட்டியைக் கேட்டுக் கொண்டது.

பத்ரகாளியம்மன் கோயிலுக்குப் போய்ப் பொங்கல் வைத்து, செக்கு சொன்னபடி பேடராய செட்டி நடந்து கொள்ளுவதாக அம்மன் முன் சத்தியம் செய்தான்.

"எனக்குக்கூட இனிமேல் பொங்கலே வையுங்கள். கோழியோ ஆடோ கொண்டு வராதீர்கள்" என்றாள் தேவி. பூசாரியும் விஷயத்தை ஊராருக்குச் சொல்லி விட்டான்.

பிறகு எல்லாம் சரியாகப் போயிற்று. மாடுகள் அடிக்காமலேயே நன்றாக ஏரும் செக்கும் இழுத்தன. எல்லா வியாபாரமும் விவசாயமும் முன்போல நன்றாக நடந்தன. ஆனால் அதுமுதற் கொண்டு பிரசங்கங்களெல்லாம் பாவடியில் வைத்தார்கள். பேடராய செட்டி தன் செக்கடியில் வேண்டாம் என்று சொல்லி விட்டான். நெசவுக்காரர் வெகு உற்சாகத்தோடு பாவடியில் போட ஒப்புக் கொண்டார்கள்.

·:· பாலர் தொடர் கதை ·:·

# பர்மா ரமணி

அழ. வள்ளியப்பா

## 26. கண்டு பிடித்தார்கள்!

ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே—இன்று
ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே — இந்த
ஆனந்த னுக்குநல் ஆனந்தமே!
அப்பாவோ இல்லை அம்மாவோ நம் கட்சி
ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே!

இப்படிப் பாடிக் கொண்டே குண்டுமணியின் வீட்டுக்கு வந்தான் ஆனந்தன். "என்னடா, ஆனந்தா! ஒரே குஷியா யிருக்கிறாயே!" என்று கேட்டான் குண்டுமணி.

"குஷியாயில்லாமல், மூலையிலே உட்கார்ந்து கொண்டு அழவா சொல்கிறாய்? கேளுடா, இன்றைக்கு அதிகாலையிலே என் அப்பா புறப்பட்டுப் போய் விட்டார். ஏதோ வியாபார விஷயமாம். நாளை இரவுதான் திரும்பி வருவார். இது நமக்கு ஒரு நல்ல சந்தர்ப்பம். இந்தச் சந்தர்ப்பத்திலே ரமணியைக் கண்டு பிடிக்க நான் ஒரு திட்டம் போட்டிருக்கிறேன்..."

"என்னடா இது 'திட்டம் போட்டிருக்கிறேன்' என்று சொல்வது? 'திட்டம் தீட்டியிருக்கிறேன்' என்று சொல்லுடா. அது சரி, உன் அப்பா ஊரில் இல்லாததற்கும், ரமணியைக் கண்டு பிடிக்கிறதுக்கும் என்னடா சம்பந்தம்? உன்னை சி. ஐ. டி. வேலை பார்க்க வேண்டாமென்று உன் அப்பா சொன்னாரா? அல்லது, குறுக்கே விழுந்து படுத்துக் கொண்டாரா?"

"அட, அவசரப்படாமல் கேளுடா. என் அப்பா ஊரில் இருந்தால் இரவிலே வெகு நேரம் ஊர் சுற்ற முடியுமா? இன்று இரவு நாம் எப்படியாவது ரமணியைத் தேடிக் கண்டு பிடித்துவிட வேண்டும். அவன் எங்கேயாவது வேலையிலே சேர்ந்திருப்பான்போலத் தோன்றுகிறது. அதனால்தான் பகலிலே அவனைக் கண்டு பிடிக்க முடியவில்லை. இரவிலேதான் தேடிப் பார்க்க வேண்டும்."

"அப்படியானால் இரவு முழுவதும் அவனைத் தேட வேண்டும் என்கிறாயா?"

"இரவு முழுதும் தேட வேண்டாம். அவனுடைய வேலை முடிய ஒன்பது மணியாகலாம். பத்து மணி ஆகலாம். பன்னிரண்டும் ஆகலாம். அதனாலே, பன்னிரண்டு மணிக்கு மேலே தேடினால் கட்டாயம் அகப்பட்டு விடுவான். எங்கேயாவது ஒரு கடை வாசலில் படுத்திருப்பான். அல்லது ஒரு வீட்டுத் திண்ணையிலே தூங்குவான்."

"அப்படியானால், பன்னிரண்டு மணிக்கு மேலேதான் புறப்படவேண்டுமென்கிறாய். அதுவரையில் தூங்காமல் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டிருக்க வேண்டுமா?"

"சும்மா விழித்துக் கொண்டிருக்க வேண்டாம். சுகமாக மெத்தை போட்ட நாற்காலியில் உட்கார்ந்து எதிரேயிருக்கும் வெள்ளித் திரையைப் பார்த்துக் கொண்டிருக்கலாம்."

"ஆ! அப்படிச் சொல். நீயும் நானும் சினிமாவுக்குப் போய் எத்தனை நாட்கள் ஓடி விட்டன!" என்றான் குண்டுமணி.

*   *   *

திட்டம் போட்டபடி, குண்டுமணியும் ஆனந்தனும் சினிமாவைப் பார்த்து விட்டு வெளியே வந்தார்கள். வெளியே வந்ததும், வராததுமாகத் துப்பறியும் வேலையில் இறங்கிவிட்டார்கள்!

ஆனந்தன் கையிலே ஒரு டார்ச் விளக்கு இருந்தது. குண்டுமணி கையிலும் ஒரு டார்ச் விளக்கு இருந்தது. இருவரும் ஆளுக்கொரு பக்கமாக விளக்கை அடித்துப் பார்த்துக் கொண்டே போனார்கள். யாராவது படுத்திருப்பது தெரிந்தால், உடனே உற்றுப் பார்ப்பார்கள். சந்தேகம் ஏற்பட்டால், எழுப்பி விசாரிக்கலாம் என்று நினைத்தார்கள். ஆனால், படுத்துக் கிடந்தவர்கள் எல்லோருமே பெரியவர்கள்தான். ஒரு பையனாவது தென்பட வேண்டுமே! ஊஹூம்.

சுமார் மூன்று மணி நேரம் சுற்றி விட்டார்கள். 'டாண், டாண், டாண், டாண்' என்று நான்கு முறை மணி யடிக்கும் சத்தம் கேட்டது. உடனே குண்டுமணி, "அப்பா ஆனந்தா! நம் மாலே இனிமேல் நடக்கவே முடியாது. கொஞ்ச நேரமாவது உட்கார்ந்து களைப் பாற வேண்டும். இல்லாத போனால், மயக்கம் போட்டு விழுந்து விடுவேன்" என்று எச்சரித்தான்.

உடனே ஆனந்தன், "டேய்! டேய்! அப்படிச் செய்துவிடாதே!" என்றான்.

பிறகு இருவரும் தெருக் குழாயடிக்குச் சென்று தண்ணீர் குடித்து விட்டுப் பின் தெருவுக்குப் போய்த் தேட ஆரம் பித்தார்கள். அப்போது ஒரு வீட்டின் எதிரே யிருந்த ஒரு அகலமான கல்லின் மேல் யாரோ படுத்திருப்பது தெரிந்தது. உடனே ஆனந்தன் விளக்கை முகத் திலே அடித்துப் பார்த்தான். பார்த்த தும், "டேய் டேய், குண்டுமணி! இதோ பார். ஒரு பையன்" என்றான்.

குண்டுமணியும் அருகே வந்து பார்த் தான். "ஆமான்டா, முகத்திலே மீசை யில்லை. பையனாகத்தான் இருக்கும்" என்று கூறினான்.

"போடா, மடையா! மீசை இருந் தாலும், இல்லாத போனாலும் முகத் தைப் பார்த்தாலே தெரியாதா? இவ னுக்கும் என் வயதுதான் இருக்கும். நிறம்கூட என் நிறம்தான்! எழுப்பிக் கேட்கலாமா?" என்றான்.

"டேய், கன்னம் பத்திரம்! மலைக் கோட்டையில் விழுந்த மாதிரி அறை விழுந்துவிடப் போகிறது!"

"சரி, இவன் உயரமும் என் உயரம் தான் இருக்கிறதா என்று பார்த்து விட லாம். குண்டுமணி! நான் இவன் பக் கத்திலே படுத்துக் கொள்கிறேன். என் உயரமும் இவன் உயரமும் சரியாக இருக்கிறதா என்று நீ பார்த்துச் சொல்ல வேண்டும். சரிதானா?" என்று கூறி விட்டு அந்தப் பையனின் அருகே தரையில் படுத்தான் ஆனந்தன்.

குண்டுமணி தலைப் பக்கமும் கால் பக்கமும் பார்த்து விட்டு, "அச்சா! வித்தியாசமே இல்லை. உன் உயரமே தான். சரி, இவனைச் சீக்கிரம் எழுப்பு. உம்!" என்று அவசரப்படுத்தினான். உடனே ஆனந்தன் அந்தப் பையனை எழுப்பினான். அவன் பல முறை தட்டி எழுப்பிய பிறகே எழுந்தான்.

அவன் எழுந்து உட்கார்ந்ததும், "தம்பி, உன் பெயர் என்ன?" என்று குழைவாகக் கேட்டான் ஆனந்தன்.

"என் பெயரா......? என் பெயர்...... ரமணி!" என்றான் அவன்.

உடனே "என்ன, ரமணியா! உனக்கு மதுரநாயகத்தைத் தெரியுமா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் ஆனந்தன்.

"ஓ! நாடகசபா மானேஜர் மதுர நாயகத்தையா எனக்குத் தெரியாது! அவர் நல்லமானவர்" என்றான் பையன்.

இதைக் கேட்டதும் ஆனந்தனுக்கும், குண்டுமணிக்கும் அவன் ரமணிதான் என்பது ஊர்ஜிதமாகி விட்டது. உடனே அவனை அப்படியே கட்டிப் பிடித்துக் கொண்டு இருவரும் குதித்தார்கள்.

பிறகு ஆனந்தன் அவனிடம், "ரமணி! நீ இங்கே வந்து எத்தனை நாளாகிறது?" என்று கேட்டான்.

"பத்து நாளாகிறது.. சாப்பிட்டு ஒரு வாரமாகிறது. என் கஷ்ட காலம். பட்டுத் துணியை நான் திருடி விட்ட தாக என்மேல் பழி சுமத்தினார்கள்..."

"ரமணி! கவலைப்படாதே, நீ திருட வில்லை என்பது ருசுவாகி விட்டது. மாமா உன்னைக் காணாமல் ஏங்கிக் கொண்டிருக்கிறார். வா, வா. சீக்கிரம் வீட்டுக்குப் போகலாம். பசி தீரச் சாப்பிட்ட பிறகு மிச்சத்தைப் பேசிக் கொள்ளலாம்" என்றான் ஆனந்தன்.

மறு நாள் பொழுது விடிந்ததுமே, ரமணி கிடைத்து விட்டதாக மாமா வுக்குத் தந்தி கொடுத்தான் ஆனந்தன்.

* * *

அந்தத் தந்தியைப் பார்த்ததும் தான், "கமலா, கமலா" என்று கத்திக் கொண்டு அடுக்களைக்கு வேகமாக ஓடி னார் மதுர நாயகம்.

"என்ன விஷயம்? இப்படிச் சிறு குழந்தை மாதிரி ஓடி வருகிறீர்களே!" என்று கேட்டாள் கமலாதேவி.

"இதோ பார் தந்தி! திருச்சியிலிருந்து வந்திருக்கிறது. படித்துப் பார். எல்லாம் தெரியும்" என்று கூறிவிட்டுத் தந்தியை அவளிடம் காட்டினார் மதுரநாயகம்.

"என்ன இது, என்னைப் படித்துப் பார்க்கச் சொல்லுகிறீர்களே! விளை யாடுகிறீர்களா? தந்தி தமிழிலா இருக் கிறது? எனக்குத்தான் இங்கிலீஷ் தெரி யாதே!" என்றாள் கமலாதேவி.

"அடடே! எனக்கு இருந்த ஆனந் தத்தில் உனக்கு இங்கிலீஷ் தெரியாது என்பதைக்கூட மறந்து விட்டேன்! சரி, இப்போது இந்தத் தந்தியிலுள்ள செய் தியைக் கேட்டால் நீயும் என்னோடு சேர்ந்து ஆனந்தப்படப் போகிறாய்..."

"அப்படியா! சரி, விஷயம் என்ன என் பதைச் சொல்லாமல் ஏதேதோ சொல்லு கிறீர்களே! சீக்கிரம் சொல்லுங்கள்" என்றாள் கமலாதேவி. (தொடரும்)

# நீரிழிவு

## குணமாகும்

சிறு நீரில் சர்க்கரை காண்பது நீரிழிவு (DIABETES) நோயின் முக்கிய அறிகுறியாகும். உங்களுக்குப் பசியும் தாகமும் அதிகமா யிருந்தாலும், உடல் உருகிக் கொண்டு வந்தாலும், அடிக்கடி நீர் இறங்கினாலும் உங்களுக்கு நீரிழிவு நோய் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இக் கொடிய உடல் உருக்கி நோய், தான் பற்றினவர்களைக் கடைசி மூச்சு உள்ள வரையில் விடுவதில்லை; கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை மரண வாயிலுக்கு இழுத்துச் சென்று விடும். நீரிழிவு வியாதியைக் குணப்படுத்த இன்ஜெக்ஷன்கள் போடப்படுகின்றன; ஆனால் அவற்றினால் வியாதி கொஞ்சமும் குணமாவதில்லை. மேற்படி இன்ஜெக்ஷன்கள் நீரில் சர்க்கரையைக் குறைக்கின்றன—அதுவும் மருந்துச் சக்தி உள்ள வரையில்தான். ஆகவே, உபாதைகளைத் தடுக்க வாழ்நாள் முழுவதும் ஊசிகள் போட்டுக்கொள்ள வேண்டியதுதான். இதனால் அதிக செலவு ஏற்படுவது மட்டுமல்லாது உடலுக்கு கஷ்டம் உண்டாகிறது. நோய் குணப்படுத்தாது போனால் நீங்கள், புண்களினாலும், கண் நோய், பல் நோய், வயிற்றுக் கோளாறு முதலிய பலவித வேதனைகளால் சிரமப்பட நேருகிறது. நீரிழிவு வியாதியை, வீனஸ் சார்ம் மாத்திரைகளை உபயோகித்து, சிக்கனமாகவும், சுலபமாகவும், நிச்சயமாகவும், பத்திரமாகவும் சிகிச்சை பெறுங்கள்.

பண்டைக்கால யுனானி வைத்திய முறைகளைக் கொண்டு, அரிய மூலிகைகளின் சேர்க்கையுடன் தயார் செய்யப்படும் வீனஸ் சார்ம் மாத்திரைகள், நோயை அடியோடு அகற்றுவதுடன், எத்தனையோ பேர்களை இன்ஜெக்ஷன் அல்லது ஒருவிதமான பட்டினி இல்லாமல் குணமாக்கி யிருக்கிறது. இதை உபயோகித்து பல ஆயிரக்கணக்கானவர்கள், இந்நோயின் மரணப் பிடியிலிருந்து தப்பி யிருக்கிறார்கள். இம் மருந்தை உபயோகிக்கத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம், நீரிச் சர்க்கரை குறைகிறது; அத்துடன் அதிக நீர் இறங்குவதும் நிற்கிறது. சில நாட்கள் உபயோகித்தாலே நோய் தணிந்து திருப்தி ஏற்படுகிறது. வீட்டிலிருந்தபடி வீனஸ் சார்ம் சிகிச்சையைத் துவங்குங்கள். விசேஷ பத்தியம் எதுவும் இல்லை. நீங்களே அதன் குணத்தை அறிவீர்கள். இதுபற்றிய விரிவான இலவச ஆங்கிலப் பிரசுரத்தை வரவழைத்துப் பாருங்கள்.

**50 மாத்திரைகள் கொண்ட புட்டி ஒன்றின் விலை 6-12-0**

*(பாக்கிங் தபால் செலவு இனாம்)*

**வீனஸ் ரிஸர்ச் லாபரேட்டரி (K.M)**

தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா

## உயர்ந்த ரக கடிகாரங்கள்

ஸ்விஸ் தயாரிப்பு. 5 வருஷம் உத்திரவாதம். ஒரே சமயத்தில் ஏதாவது இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு பாக்கெட் கடிகாரம் இனாம்.



ஜெண்ட்ஸ் 7½ மாடல் நெ. 55 அல்லது 56

கோம்டன் 5 ஜுவல்ஸ் ரூ. 28/- 15 ஜுவல்ஸ் ரூ. 35/- ரோல்டு கோல்டு ரூ. 38/- 17 ஜுவல்ஸ் ஜெர்மன் 20 மைக்ரோன் ரோல்டு கோல்டு ஷாக்புரூப் ரூ. 52/-



லேடிஸ் 5½ மாடல் நெ. 45 அல்லது 46

கோம்டன் 15 ஜுவல்ஸ் ரூ. 40/- 17 ஜுவல்ஸ் ரூ. 46/- ஜெர்மன் 20 மைக்ரோன்ஸ் ரோல்டு கோல்டு 17 ஜுவல்ஸ் ரூ. 56/- 21 ஜுவல்ஸ் ரூ. 62/-



ஜெண்ட்ஸ் 8½" மாடல் நெ. 755

குரோமியம் ரூ. 22/- கோல்டு 15 ஜுவல்ஸ் ரூ. 28/- வாட்டர் புரூப் குரோம் ஸ்டீல் ரூ. 37/- ஷாக்புரூப் 17 ஜுவல்ஸ் ரூ. 38/- ஜெர்மன் 21 ஜுவல்ஸ் ரூ. 54/-



ஜெண்ட்ஸ் 8½" மாடல் நெ. 756

குரோமியம் ரூ. 24/- கோல்டு 15 ஜுவல்ஸ் ரூ. 30/- வாட்டர் புரூப் குரோம் ஸ்டீல் ரூ. 40/- 17 ஜுவல்ஸ் ஷாக் புரூப் ரூ. 46/- ஜெர்மன் 21 ஜுவல்ஸ் ரூ. 60/-

**AJANTA WATCH CO.**

AGRA ROAD - - BOMBAY-40

Nazirabad, Lucknow (Phone: 4767)




## 39. மறைந்த மகள்

சிலம்பம் பார்த்துக் கொண்டிருந்த மக்கள் எல்லாரும் அப்படியே திகைத்துப் போனார்கள். கோதாவுக்குள் பாய்ந்து சென்ற உஸ்தாத் மீரான் மூடி விழிக்கும் நேரத்தில் அத்தனை பெரிய ஒரு பெரும் திகைப்பான காரியத்தைச் செய்துவிட்டார்.

"உன் உயிர், அல்லது என் உயிர்!" என்று இரண்டு சண்டியர்களும் ஒருவரை ஒருவர் உயிரை வாங்குவது என்ற நோக்கத்திலே கைக் கம்பைப் பயங்கரமாகச் சுழற்றியதைப் பார்த்ததும் உஸ்தாத் மீரான் மின்னலைப் போல் பாய்ந்தார். அப்படியே இரண்டு வாலிபர்களுடைய வலது கையையும் தமது இரண்டு கைகளாலும் லாகவமாகப் பிடித்து இறுக்கிக் கொண்டார். 'இரும்புப் பிடி' என்றும் 'உடும்புப் பிடி' என்றும் சொல்வார்களே, அப்படியிருந்தது உஸ்தாதின் பிடி. சண்டியர்களின் கையிலிருந்து கம்பு கீழே விழுந்தது. மறுகணம் அளவுகடந்த பிரியத்தோடு உஸ்காத் சொன்னார்: "என் அருமைக் கண்மணிகளா! என்னடா செய்வதற்கு முனைந்து விட்டீர்கள்! அரே அல்லாஹ்! என்னால் இதை எப்படிடா பார்த்துக் கொண்டிருக்க முடியும்! நீங்கள் இரண்டு பேரும் நான் வளர்த்து விட்ட புலிக் குட்டிகளடா! நான் பெற்ற பிள்ளைகளடா நீங்கள்! உங்களுக்குள்ளே இப்படி ஒரு உயிர் விளையாட்டா! என் நெஞ்சு பதறுகிறதடா!"

உஸ்தாதின் குரலில், தன்னை மீறிய அன்பினால் ஒரு நடுக்கம் இருந்தது. போட்டாப் போட்டியிலே நின்ற சண்டியர்கள் இருவருக்கும் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் மனம் நெகிழ்ந்து போய்க் கண்ணீர் வந்து விட்டது! போட்டியின் முடிவை அறிவிப்பதற்கான நீதிபதிகள் கோதாவுக்குள்ளே வந்தார்கள். மஜீதும் நாகரத்தினமும் அவர்களைப் பின் தொடர்ந்து வந்தார்கள். கூட்டத்தில் பரபரப்பு உண்டாயிற்று. உடனே உஸ்தாத் அந்தப் பெரிய ஜனத்திரளை நோக்கி சலாம் செய்தவாறு பேச ஆரம்பித்தார்:

"மகாஜனங்களே! சற்று அமைதியாக இருங்கள். உயிரோடு விளையாடுகிற இந்தப் போட்டியில் எத்தகைய விபரீதம் நேர இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளாமல் நீங்கள் கை தட்டுகிறீர்கள். இளம் கன்று பயம் அறியாது என்பார்கள். அது போல இந்த இரண்டு வாலிபர்களும் இப்பொழுது ஒருவரை ஒருவர் உயிர்ப் பலி வாங்குவதற்காக நிற்கிறார்கள். ஆனால் என் மனம் கிடந்து பதறுகிறது. இதற்காகவா நான் சிலம்ப வித்தை





சொல்லிக் கொடுத்தேன். என்னுடைய சிஷ்ய பரம்பரைகளை ஒன்றுக்கொன்று அடித்துக் கொண்டு சாக வேண்டும் என்று நான் இவர்களைத் தயார் பண்ணினேன். வேண்டாம்.''

இப்படிச் சொல்லும் போது உஸ்தாத் மீரான் ஜனக் கூட்டம் முழுவதையும் தமது விசாலமான கண்களால் சுற்றுமுற்றும் பார்த்தார். அந்த ஜனங்களுடைய முகத்தில் உஸ்தாதிடம் அவர்களுக்கிருந்த மெய்யான பக்தி அப்படியே பிரதிபலித்தது. மறுகணம் மீரான் கோதாவிலே வந்து நின்ற மஜீதையும், நாகரத்தினத்தையும் பார்த்துச் சொல்லுவார் :—

''நாகரத்தினம்! மஜீத்! இந்தப் போட்டி உங்களுக்குள் வேண்டாம். உங்கள் இரண்டு பேருடைய சிலம்பப் பள்ளிக்கூடங்களுமே என்னுடைய பள்ளிக்கூடந்தான்! நீங்களும் உங்களுடைய சீடர்களும்-எல்லாரும் என்னுடைய பிள்ளைகள் மாதிரி. பெற்ற தகப்பனுக்குக் கெட்ட பெயர் சம்பாதித்துக் கொடுக்காதீர்கள். அல்லாஹ் உங்களைத் தண்டிப்பான். வேண்டாம். இனிமேல் இந்த நிமிஷத்திலிருந்து நீங்கள் எல்லாரும் ஒரே பள்ளிக்கூடம். நீங்கள் எல்லாருமே சம ஜோடிகள் !''

அங்கே கூடியிருந்த ஆயிரக் கணக்கான சிலம்ப ரசிகர்களும் ஏக காலத்தில் பலமாகக் கரகோஷம் செய்து ஆரவாரித்தார்கள். அந்தக் காட்சியிலே சண்டியர்களின் மனமும்கூட உருக ஆரம்பித்தது.

''மஜீத் இங்கே வா! நாகு இங்கே வா! மஜீத் ஒரு விதத்தில் என்னைக் கோபப்படுத்தினான். அதற்கு மன்னிப்பாக அவனுக்கு என் மகளைத் தந்தேன். நாகு, நீ ஒரு விதத்தில் என்னைக் கோபப்படுத்தினாய். உனக்கு மன்னிப்பாக என்னுடைய சிலம்பப் பள்ளிக் கூடத்தையே இப்பொழுது உனக்குத் தருகிறேன். இனிமேல் உங்களுக்குள் எந்தவிதமான பகையும் வேண்டாம். நீங்கள் அடிபிடியில் இறங்குவதைப் பார்த்துக் கொண்டிருக்க என்னால் முடியவில்லை. வயது காலத்தில் என் மனம் பதறுகிறது. என் அருமைக் குழந்தைகளே, ஒன்று சேருங்கள் !''

இப்படிச் சொல்லிக்கொண்டே மஜீதின் கையைப் பிடித்து நாகரத்தினத்தின் கையோடு சேர்த்து வைத்து ஆசீர்வாதம் பண்ணினார் உஸ்தாத் மீரான்.



"மீரானுக்கு ஜே!" என்று கூட்டத்திலிருந்து ஒரு கம்பீரமான குரல் எழுந்தது. அது வேறு யாருமில்லை. பகோரான்தான். மறு விநாடி பகோரானுடைய குரலைத் தொடர்ந்து ஆயிரம் ஆயிரம் குரல்கள் "ஜே! ஜே!" என்று ஆரவாரம் செய்தன.

குழப்பம் ஒரு வழியாக ஓய்ந்தது. எத்தனையோ பெரிய சிக்கலிலே பின்னிக்கொண்டிருந்த ஒரு சண்டை குரு பக்தியினால் ஆட்கொள்ளப்பட்டு அமைதியிலே முடிந்தது. அன்று இரவு வீட்டுக்குச் செல்லும்போது உஸ்தாத் மீரான் பகோரானிடம் கீழ்க்கண்டவாறு சொன்னார்:

"தம்பி! இன்றிலிருந்து உன்னுடைய ஜிங்கிட ஜிங்கிட வியவகாரத்தை ஒழித்துக் கட்டிவிட வேண்டும். தெரிந்ததா! உயிருக்கு உலை வைக்கிற உச்சாடனம் அது. உஸ்தாதினுடைய சீடன் ஒருவனுக்கு இந்தக் கேலிக் கூத்தெல்லாம் வேண்டாம். கையில் திராணி இல்லாதவனுடைய பயங்கொள்ளி வேலை அது. சுத்த வீரனுக்கு அது சரிப்படாது. புரிந்ததா? பாவம் அந்த ஓட் அவுளின் பையனைக் கொண்டு வந்து உன் வீட்டிலே வைத்து அந்த வாயில்லாத அப்பிராணிப் பயலை மயக்கம் போட்டு விழச் செய்வதை அல்லாஹ் மன்னிக்க மாட்டான். இன்றோடு அந்த வேலைகளையெல்லாம் கட்டி ஒதுக்கிவைத்துவிடு. பாலக்கரைக்கு ஒரே ஒரு சிலம்பப் பள்ளிக்கூடமே போதும். அதில் மஜீத், நாகரத்தினம், நீ, குப்புசாமி, மஹ்பூல் எல்லாரும் ஒரே சம ஜோடியான சண்டியர்கள். எதிர்காலத்தில் நீங்கள் ஒவ்வொரு

வரும் ஒரு பெரிய உஸ்தாதாக வரவேண்டியவர்கள், தெரிந்ததா? அல்லாஹுத்தாலாவின் திருவருள் உங்களுக்கு என்றென்றும் துணையாக நிற்கும்!''

* * *

சிலம்பக் கூடத்தில் இப்படி எதிர்பாராத வகையில் சம்பவங்கள் ஏகோபித்துச் சென்ற தருணத்திலே, மலைக்கோட்டையில் டாக்டர் சுரேஷ் சந்திரிகாவுக்கும் சாவித்திரி அம்மாளுக்கும் கீழ்க்கண்ட வரலாற்றைச் சொல்லிக் கொண்டிருந்தார்:

"தாமிரவருணி நதி ஓடிப் பாய்ந்து வளம் கொழிக்கச் செய்கிற தெற்குப் பிரதேசத்திலே அம்பா சமுத்திரம் என்ற ஊரைப் பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருக்கக் கூடும். புகழ் பெற்ற அறிஞர் வ. வே. சு. ஐயரும் அவருடைய அருமை மகளும் தண்ணீரில் அகப்பட்டு உயிர் துறந்தார்களே, அந்த ஆழமான கசமும், கல்யாண தீர்த்தமும், பாபநாசமும் இந்த அம்பா சமுத்திரத்துக்கு அருகிலேதான் இருக்கின்றன. இப்பொழுது ரவீந்திரன் சிகிச்சை பெற்று வருகிற சொக்கிகுடி என்னும் பளிஞர் குடியிருப்பு இந்தப் பாபநாசத்து மலைகளின் மேலேதான் இருக்கிறது. இத்தனையும் எதற்குச் சொல்லுகிறேன் என்றால், நம்முடைய அருமைக் குழந்தையைத் தேடித் தேடிப் பால் வண்ணர் என்ற அந்த உத்தமர் இத்தனை இடங்களிலும் கதறிக் கதறி அழுதார். "அம்மா! கண்மணி! குழந்தே!" என்று அவர் கூப்பிட்டு அலைந்தபோது பாபநாசத்துக் காடுகளும், மலைகளும், அருவிகளும், நீர்ச்சுனைகளும் கூட "அம்மா! கண்மணி! குழந்தே!" என்று பரிதாபமாக ஓலமிட்டு எதிரொலி செய்தன! அது ஒரு துக்ககரமான சம்பவம்!



அந்தக் காலத்தில் சவுக்கடிப் பால்வண்ணநாதர் என்றால் திருநெல்வேலி ஜில்லாவே நடுநடுங்கும். அவருடைய கைச் சவுக்குக்குப் பெரிய பெரிய போக்கிரிகளும், திருடர்களும், கொலையாளிகளும் கூட உடல் பதறுவார்கள். நியாயத்தையும், தர்மத்தையும் அத்தனை ஆற்றலோடு தமது கைச் சவுக்கிலே வைத்துக் கையாண்டார் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் பால்வண்ணநாதர்.

இந்த உலகத்தில் தர்மத்துக்கும் நியாயத்துக்கும் பாடுபடுபவர்கள் பணம் சேர்ப்பதில்லை. அவர்களுடைய பிற்கால வாழ்க்கை எளிமையாகவும், சில சமயம் வறுமையாகவும் கூட முடிவதுண்டு. இப்படிப்பட்ட தர்ம வாழ்க்கையாகத்தான் இருந்தது, பால்வண்ணநாதரின் பிற்கால வாழ்வும்.

உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெறுவதற்கு முன்னாலேயே அவருடைய மனைவி காலமாகிவிட்டாள். நெடுநாளாகக் குழந்தையில்லாமல் இருந்து, நீண்ட காலத்துக்குப் பிறகு ஏற்பட்ட பிரசவத்தில் அந்த அம்மாள் ஒரு பெண் குழந்தையைப் பெற்று விட்டு அதிலேயே உயிர் நீத்தாள். பால்வண்ணருக்கு உலகமே சூன்யமாகிவிட்டது. அந்தப் பெண் குழந்தையை வளர்த்து முன்னுக்குக் கொண்டுவர வேண்டிய பெரும் பொறுப்பு, இதற்கு முன் பார்த்த அந்தக் கஷ்டமான ஸர்க்கிள் உத்தியோகத்தை விடப் பாரமான பொறுப்பாகப் பட்டது. அவதிக்கு முன்பே ஓய்வு வாங்கிக் கொண்டு அம்பாசமுத்திரத்தில் ஒரு சிறு வீடு விலைக்கு வாங்கிக் குடியேறினர்.

பந்துக்களோடு அதிகத் தொடர்பு இல்லாதவர் பால்வண்ணர். இலஞ்சி என்ற அழகான கிராமத்தில் அவருடைய மனைவியின் சகோதரர் ஒருவர் இருந்தார். அவர் ஒருவரைத் தவிரப் பால்வண்ணருக்கு உற்றார் உறவினர் என்று சொல்லக்கூடிய சொந்தம் வேறு யாருடனும் கிடையாது.

தனியாக ஒரு குழந்தையை வளர்த்து வரும் தகப்பனுக்கு எத்தனையோ கஷ்டம் உண்டு. அதிலும் ஒரு பெண் குழந்தையைப் பாதுகாத்து வளர்ப்பது எத்தனையோ பெரிய பொறுப்பு. இதை யெல்லாம் உத்தேசித்துப் பால் வண்ணர் ஒரு வயதான கிழவியைச் சமையலுக்கு அமர்த்தி அவளுடைய சகாயத்தோடு குழந்தையை வளர்த்து வந்தார். எப்பொழுதாவது இலஞ்சிக்குப்போய் வருவது உண்டு.

இப்படியிருந்த போதுதான், இலஞ்சியில் பால்வண்ணரின் மைத்துனருடைய மகளுக்கு ஒரு நல்ல வரன் பார்க்கும் பொறுப்பு வந்தது. அப்போது அம்பாசமுத்திரத்தில் ஒரு கௌரவமான உத்தியோகம் பார்த்து வந்த வாலிபன் ஒருவனைப் பால்வண்ணருக்கு மிகவும் பிடித்திருந்தது. தம்முடைய மனைவியின் சகோதரருக்கு மருமகனாக வருவதற்கு வேண்டிய எல்லாத் தகுதியும் அந்த இளைஞரிடம் இருப்பதாகப் பால்

# கான்க்ரீட் ரஸ்தாக்கள்

## குறைந்த செலவில் நீண்டகாலம் உழைக்கின்றன



கான்க்ரீட் ரஸ்தாக்கள் உழைப்பிற் சிறந்தவை என்று உலகம் முழுவதும் பெயர் பெற்று விட்டன. வருங்காலத்து அதிகமான போக்குவரத்தை சமாளிக்கும் தன்மையுள்ள நகர, கிராம ரஸ்தாக் களுக்குத் தேவையான உறுதியையும், உழைப்புத் தன்மையையும் கான்கிரீட் அளிக்கின்றது.

(1929. சார்மினார் ரோட், ஹைதராபாத் (டெக்கான்)

கான்க்ரீட் ரஸ்தாக்கள்:

- ✓ அதே அளவு பளுவை தாங்கக்கூடிய வேறு எந்த ரஸ்தாவையும்விட, கான்க்ரீட் ரோட் போடும் செலவு குறைவு.
- ✓ நிர்வாகச்செலவும் குறைவு.
- ✓ பல வருஷங்கள் உழைக்கும்தன்மை.
- ✓ பார்வைக்குத் தெளிவுள்ளது.
- ✓ அதிகமான பாதுகாப்பை அளிக்கிறது.

1949 கிரேட் சதர்ன் ட்ரங்க் ரோட்)





(1948 கோயம்புத்தூர்-மேட்டுப்பாளையம் ரோட்




தி அஸோஸியேடட் சிமெண்ட் கம்பெனிஸ் லிமிடெட்.

வியாபார மானேஜர்கள்:

தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்,

GITAS CAL 235 TAMIL

வண்ணருக்குப் பட்டது. எனவே மிகச் சிரத்தையுடன் அவரே சம்பந்தம் பேசி அந்தக் கல்யாணத்தை முடிவு செய்தார்.

அப்பொழுது பால் வண்ணரின் பெண் குழந்தைக்கு நாலு வயது. செக்கச் செவேலென்று குழந்தை கிளி மாதிரி இருக்கும். தலையை வாரிப் பின்னி முடித்து, கூந்தலில் ராக்கொடியும் ஜடை வில்லையும் வைத்துப் பின்னலிலே குஞ்சமும் முடிந்திருக்கும். பால் வண்ணரின் நியாயமான சம்பாத்தியம் முழுதையும் அந்தப் பெண் குழந்தை தன் தலையிலே ஆஸ்தியாகச் சூடிக்கொண்டு வளைய வரும். ஸர்க்கின் இன்ஸ்பெக்டர் வேலை பார்த்துப் பழகியதால் அவருக்குத் திருட்டுப் பயம் கிடையாது. மெத்தனமாகவே இருந்து விட்டார். அதனால் வந்தது வினை!



இலஞ்சியில் நடைபெற்ற திருமணத்துக்கு மாப்பிள்ளை அழைப்பின் போது, பால்வண்ணரும், அவருடைய அருமைக் குழந்தையும் அம்பாசமுத்திரத்திலிருந்து உடன் சென்றார்கள். அவ்வளவுதான். பிறகு அந்த இருவருமே அங்கு திரும்பி வரவே இல்லை.

ஆமாம்; கல்யாண வீட்டில் தாலி கட்டும் சடங்கு முடிந்ததும் சாப்பாடு ஆகி அதன் பிறகு நலங்கு வைத்தார்கள். அப்பொழுதெல்லாம் புதுப் பெண்ணோடு அமர்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது அந்தக் குழந்தை. ஆனால் அன்று இரவு பட்டணப் பிரவேசத்திற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்னால், காஸ்லைட்டைச் சுற்றி நின்று குழந்தைகளோடு விளையாடிக் கொண்டிருந்த அந்தப் பெண்ணைத் திடீரென்று காணவில்லை. பட்டணப் பிரவேசச் சந்தடியில் பெண்கள் கூட்டத்தில் எங்காவது இருக்கும் என்று முதலில் நினைத்தார்கள். ஆனால் கொஞ்ச நேரத்துக்கு எல்லாம் குழந்தையைக் காணோம் என்று தெரிந்தது.

பால்வண்ணர் புழுவாகத் துடித்தார். அழுதார். கதறினார். அங்கலாய்த்தார். தலையிலே வைத்திருந்த நகைகளுக்கு ஆசைப்பட்டு யாரோ தூக்கிப் போயிருக்க வேண்டும் என்று பேசினார்கள். இலஞ்சி முழுதும் தேடினார்கள். இரவெல்லாம் அலைந்தார்கள். கல்யாண வீடு, ஏதோ நடவாதது நடந்த துன்ப வீடாக மாறியது.

இலஞ்சி ஊரைச் சுற்றியுள்ள கிணறுகள், குளங்கள், காடுகள், ஆறு — எங்கும் சல்லடை போட்டு அரித்தார்கள். "அம்மா! கண்மணி! குழந்தே!" என்று தேடித் தேடிக் கதறினார் பால்வண்ணர்.

மறுநாட் காலை பால்வண்ணரையும் அங்கிருந்து காணோம். குற்றாலம், பாபநாசம், வ. வே. சு. ஐயரையும் அவருடைய அருமை மகளையும் உட்கொண்டு விட்ட அந்த ஆழமான கசம், மலைக்காடு, எங்கெல்லாமோ தன் குழந்தையைக் கூப்பிட்டுக் கொண்டு ஒரு பைத்தியக்காரரைப் போலப் பால் வண்ணநாதர் அலைந்தார். அலைந்து கொண்டேயிருந்தார்! அதன் பிறகு நீண்ட நாட்களாக அவரைக் காணோம். ஆருட வல்லார்களிடம் போய்க் கேட்டார். சோதிடம்பார்க்கிறவர்கள், குறிகாரர்கள், எதிர்காலத்தைச் சொல்லும் மலைக் குறத்திகள், அகவல் மகளிர்கள், பஞ்சாங்கக்காரர்கள், ரேகை சாஸ்திரம் பார்க்கிறவர் — இப்படி எங்கெங்கோ போய்த் தேடினார் பால்வண்ணநாதர். மனிதர்கள் எங்காவது கூட்டமாக நின்றால், பண்டாரம் பரதேசிகள் எங்காவது தொகுதியாகச் சேர்ந்து நின்றால், அங்கெல்லாம் துப்பறியும் நிபுணரைப் போலக் கூர்மையான கண்களோடு தேடித் தேடிப் பார்ப்பார். தாம் ஸர்க்கின் இன்ஸ்பெக்டராக இருந்த காலத்தில், குற்றம் செய்தவர்களையும், திருட்டுச் செய்து தலைதப்பி வாழும் பயங்கரச் சதிகாரர்களையும், தலைமறைவாக வசிக்கும் மோசக்காரர்களையும் தேடிப் பிடிப்பதற்கு எத்தனை உபாயங்களைக் கையாளுவாரோ அத்தனையும் கையாண்டு

பார்த்தார் அவர். எதிலும் பயன் கிடைக்கவில்லை. மறைந்த மகளைப் பற்றிய எவ்விதத் தகவலும், தடையமும் அவருக்குக் கிட்டவில்லை. கிளிப்போலப் பாதுகாத்து அன்போடு வளர்த்த தமது மகளைப் பறிகொடுத்துவிட்டு அவர் பட்ட பாட்டை இப்படி அப்படி என்று சொல்ல முடியாது. அந்த ஏக்கம் அவருடைய உள்ளத்தையும் உடலையும் உலுப்பிவிட்டது. கடைசியில் அவர் தற்கொலை செய்து கொண்டு விட்டார் என்று அநேகர் சொன்னார்கள். சிலர் அவர் தேசாந்தரம் சென்று விட்டார் என்று பேசிக் கொண்டார்கள். வேறு யாரோ ஒருவர் பால்வண்ணர் காசியிலே ஒரு மடத்தில் இருப்பதாகச் சொன்னார். சமீப காலம் வரை எனக்கும் அது விஷயமாகச் சொல்லொணாத வேதனையும் ஏக்கமுமாக இருந்தது. உண்மையில் அந்தக் குழந்தை அப்படிக்காணாமற்போனதற்கு நானே தான் காரணம் என்ற எண்ணம் என் உள்ளத்தை வான் கொண்டு அறுத்து வந்தது. ஒரு நல்ல மனிதரின் வாழ்க்கையை நானே பாழ் படுத்தி விட்டது போலவும், ஒரு பச்சிளம்

உட்கார்ந்திருந்தான். அவனுடைய மனசில் இந்தச் சம்பவங்களைக் கேட்டதனால் ஏற்பட்ட உருக்கம் ஒரு பக்கமும், சந்திரிகாவின் வாழ்க்கையைத் தெரிந்து கொண்டதில் உண்டான நிம்மதி ஒரு பக்கமும் ஒன்றையொன்று இணைத்துக்கொண்டு நின்றன. அவன் கேட்டான் :

“டாக்டர்! எனக்கு ஒன்றுமே பேச ஓடவில்லை. நீங்கள் சொன்ன விவரங்களைக் கேட்டதும் சந்திரிகாவின் தந்தை எங்கோ இருக்கிறார் என்ற விவரம் தெரிந்து மனத்தில் நிம்மதி உண்டாகிறது. ஆனால்—”

“சாவித்திரி அம்மாள்! உங்களுடைய மனநிலை எனக்கு நன்றாகப் புரிகிறது. ஆனாலும் இப்பொழுது உங்களுக்கு இந்த விவரம் மட்டும் போதும். சந்திரிகாவின் தகப்பனார் செளக்கியமாய் இருக்கிறார். அவரைச் சந்தித்த பிறகுதான் எனக்குமே மன நிம்மதி ஏற்பட்டது. இல்லையென்றால் சந்திரிகாவைச் சந்தித்த பின்பும் அவரைச் சந்திக்காமலிருந்தால் என் மனம் என்ன பாடு பட்டிருக்

உண்டான நிம்மதி ஒரு பக்கமும் ஒ



# உங்கள் கூந்தலின் கவர்ச்சிகரமான சுருள்களை அப்படியே நிலைத்திருக்கச் செய்யுங்கள்

கூந்தலுக்கான டாம்கோவின் வாசனைத் தேங்காய் எண்ணெய் உங்களுடைய கேசத்தைக் கச்சிதமாகப் படிய வைக்கிறது. எனினும், உங்கள் கூந்தலின், இயற்கையாயமைந்த சுருள்களை அமுக்கி விடாமல், எடுத்துக் காட்டும் முறையில் மென்மையாயமைந்துள்ளது. மல்லிகை, ரோஜா, லெவண்டர் ஆகிய நறுமணங்கமழும் எண்ணெய் வகைகளிலிருந்து உங்களுக்குத் தேவையானதைக் கொள்ளலாம்.




25 வருஷங்களாக இந்தியாவின் மிகவும் விரும்பப்பட்ட கூந்தல் தைலம்.



வாரத்திற்கொருமுறை கூந்தலுக்கு டாம்கோவின் தேங்காய் எண்ணெய் ஷாம்பூவை உபயோகித்து ஸ்நானம் செய்யுங்கள். இதனால் உங்கள் கூந்தல் மிருதுவாய் இயற்கையான சுருள்களுடனிருக்க உதவும்.

## டாம்கோ

### கூந்தலுக்கான வாசனைத் தேங்காய் எண்ணெயும் ஷாம்பூவும்

டாடா ஆயில் மில்ஸ்

